



வானதி
பதிப்பகம்

# பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி?

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி

# பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி?

## DECISION MAKING SCIENCE

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# முன்னுரை

பிரச்சினைகள் வரும்போது எப்படி முடிவெடுக்கிறோம் என்பதைப் பொறுத்து நம் எதிர்கால வாழ்க்கை அமைகிறது. வாழ்வின் பல காலகட்டங்களில் நாம் எடுத்த முடிவுகள் குயவன் மண் பாண்டத்தை உருவாக்குவதுபோல நம் வாழ்க்கையை உருவாக்கி இருக்கின்றன.

வாழ்வில் சரியான முடிவு எடுத்தவர்களே முன்னேறி இருக்கிறார்கள்; நாட்டின் தலைவர்கள் சரியான முடிவு எடுக்கும்போதுதான் நாடு நல்வாழ்வு பெறுகிறது. சரித்திரத்தில் இடம் பெறுகிறது. ஒரு தொழிலின் அபிவிருத்திக்கு ஒரு கம்பெனியின் தலைவர் எடுக்கும் முடிவுகள் வழி கோலுகின்றன.

தினந்தோறும் வாழ்வில் நாம் பிரச்சினைகளைச் சமாளிக்கவேண்டி இருக்கிறது.

முடிவு எடுப்பது எப்படி என்பதை எதன் மூலம் அறிந்து கொள்கிறோம்? அனுபவத்திலிருந்தும் அனுமானத்திலிருந்தும் அறிந்து கொள்கிறோம்.

முடிவெடுப்பதில் சிலர் மன்னர்களாக விளங்குகிறார்கள். சிலர் சோடைகளாக நிற்கிறார்கள்.

"முடிவெடுப்பது ஒரு கலை—ஆகவே சிலர் அத்தகைய திறனுடன் பிறந்திருக்கிறார்கள்" என்று உலகம் பேசுகிறது. இது உண்மை அல்ல.

ஒரு தொழில் நுட்பம் போல், விஞ்ஞான அறிவு போல, முடிவு எடுக்கும் கலையை நாம் படிப்பதன் மூலமும் சிந்திப்பதன் மூலமும், ஆராய்வதன் மூலமும், பயில்வதன் மூலமும் நாம் கற்றுக்கொள்ள முடியும்.

வாழ்க்கைக்கு இது முக்கியமான ஒன்று. நாம் அறிந்துகொள்ள வேண்டிய முக்கியமான அறிவு இது.

தமிழில் இதுபற்றிய புத்தகங்கள் ஏதும் இல்லை. ஆங்கிலத்திலும் கடந்த ஏழெட்டாண்டுகளில்தான் இது பற்றிய நூல்கள் வரத் துவங்கின. ஆங்கிலத் திலும் இன்றைக்கெல்லாம் ஒரு நாலைந்து நூல்கள் தான் உள்ளன. தலை சிறந்த அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் இதை "DECISION MAKING SCIENCE" என்ற தலைப்பில் பாடமாகச் சொல்லித் தருகிறார்கள். அமெரிக்காவில் இதைக் குறிப்பாகத் தொழிலதிபர் களுக்கென்றே எழுதுகிறார்கள்.

ஆனால் இது பொதுவாக எல்லோருக்கும் தேவை யான அறிவு. விவசாயியிலிருந்து நாட்டுத் தலைவன் ஈறாக எல்லோருக்கும் தேவையான அறிவு இது. ஆகவேதான் நான் என் சொந்த வாழ்க்கைக்காக இந்த நாலைந்து நூல்களையும் வாங்கிப் படித்தேன்.

அதன் விளைவுதான் இந்த நூல்.

எதைப் படிக்கும்போதும் என்றால் வேகமாகப் படிக்க முடியாது. பல சமயம் அதில் எழுப்பப்பட் டிருக்கும் கருத்துக்களுடன் நான் விவாதம் செய்வேன்; மறுப்பேன். அல்லது அது சம்பந்தமாக எனது அனு பவங்களை முன் கொண்டுவந்து வைத்து அக் கருத்துக் களுடன் உரைத்துப் பார்ப்பேன். அதன் விளை வாகப் பிறந்த நூல் இது.

இதில் காணும் அடிப்படைக் கருத்துக்கள் மேனாடுகளில் செய்யப்படும் ஆராய்ச்சிகளின் விளைவாக இருந்தாலும் எழுதப்பட்டிருப்பது என் அனுபவத்திலிருந்தும் எனது பின்புலத்திலிருந்தும் தான்.

ஓரிரு இடங்களில் அழுத்தம் கொடுப்பதற்காக, முக்கியத்துவம் கொடுப்பதற்காகச் சில கருத்துக்களை மீண்டும் வலியுறுத்தி இருக்கிறேன். இருபத்து ஐந்து ஆண்டுகள் ஆசிரியனாகப் பணியாற்றியதன் தூண்டு கோல் அது.

நம் நாட்டில் பொதுவாக நாம் எடுப்பார் கைப் பிள்ளையாக, இளவயதிலிருந்து வளர்க்கப்பட்டிருக் கிறோம். இதன் விளைவுகளை இன்று சமுதாயத்தில் காண முடிகிறது. அதாவது, நம் வாழ்க்கை பற்றிப் பிறர் முடிவு செய்யுமாறு நாம் விட்டுவிடுகிறோம். இதன் காரணமாக நம் வாழ்வு நம் வசத்தில் இல்லை. இதன் விளைவாக ஒரு சார்ந்து நிற்கும் சமுதாயம் உருவாகி இருக்கிறது; ஒரு சர்வாதிகாரத்தைப் போற்றும் வழிபாட்டு மனோபாவம் நம்மிடை ஊறிப் போயிருக்கிறது. எண்ணிப் பாருங்கள்.

தனிப்பட்ட மனிதர்கள் பொதுவாக நல்ல முறை யிலே முடிவெடுத்து ஏதோ முன்னைவிட நன்றாயிருக் கிறார்கள். ஆனால் நம் தலைமையைப் பொறுத்தவரை முடிவெடுக்கத் தயங்குபவர்களும் முடியாதவர்களும் தலைமையில் இருக்கிறார்களோ என்று அஞ்சுமளவுக்கு நாட்டின் வளர்ச்சி இருக்கிறது.

இந்த நிலை மாறவேண்டும் என்று இதைப் படிக்கும் யாரோ முடிவெடுக்கத்தான் போகிறார்கள்.

பல ரசிகர்கள் எழுதும் கடிதங்களில் காணப்படும் பிரச்சினை அவர்களது குழப்பம்தான்; பயம்தான்.

குழப்பத்தைப் போக்கி ஒரு தெளிவைக் கொடுக்கும் இந்நூல் என்று நம்புகிறேன். பயத்தைப் போக்கி ஒரு தைரியத்தை ஊட்ட உதவும் இந்நூல். உங்கள் காலிலேயே நின்று செயலில் இறங்க இந்நூல் உதவும் என்றும் நம்புகிறேன்.

நிதானமாகப் படியுங்கள்.

கையில் ஒரு நோட்டை வைத்துக்கொண்டு குறிப்பெடுங்கள்.

உங்கள் வாழ்க்கைக்கு இதை எப்படிப் பயன்படுத்தலாம் என்று உங்கள் பிரச்சினையை முன் வைத்து அலசுங்கள்.

வாழ்த்துக்கள்!

306 COTTON WOOD
Dr. LAFAYETTE
LOUSIANA 70506 U. S. A

சி. உதயமூர்த்தி
ஆகஸ்ட் 14, 1982

# உள்ளே...

# காணிக்கை

அன்பின் மறு வடிவமாய் விளங்கி
என்னை ஆதரவுடன் வளர்த்து ஊக்குவித்த
என் அக்காள் பட்டு அம்மாளுக்கும்
என் அண்ணன் சி. வள்ளலாருக்கும்.

**சி. உதயமூர்த்தி**
ஆகஸ்ட் 14, 1982.

# முடிவெடுப்பது ஒரு திறன்...

முடிவெடுப்பது ஒரு திறன். எல்லோரும் தெரிந்து கொள்ளக்கூடிய—பயிற்சி மூலம் வளர்த்துக் கொள்ளக் கூடிய—ஒரு திறன். கத்திக்குச் சாணை பிடிப்பது போல, சைக்கிள் விடக் கற்றுக்கொள்வதுபோல, கேட்டரிங் இன்ஸ்டிடியூட்டில் (Catering Institute) படித்து, பெரிய சமையல் நிபுணராவது போல (CHIEF) அது, ஓர் திறன். எல்லோரும் கற்றுக் கொள்ளக் கூடியது. ஒவ்வொரு முறையும், முடிவெடுக்கும் போதும், தீர ஆராய்ந்து முடிவெடுக்க நாம் பழகிக் கொள்ளலாம். முடிவெடுத்தபின், அதன் விளைவுகள் தெரிந்தபின், 'நான் என்ன செய்தேன்? எப்படி முடிவெடுத்தேன்? எதை விட்டேன்?' எப்படி முடிவெடுத்திருக்க வேண்டும்?' என்று ஆராய்வதன் மூலம் நமது முடிவெடுக்கும் திறனை நாம் வளர்த்துக் கொள்ளலாம்.

ராணுவத்தில் இப்படித்தான் ஒரு சம்பவத்திற்குப் பிறகு ஓர் அறிக்கை தயாரிப்பார்களாம். அதை மறு முறை — போர் முஸ்தீபுகள் செய்யுமுன் — மீண்டும் கவனத்துடன் படித்து, பழைய அனுபவத்திலிருந்து பயன்பெற முயல்வார்களாம்.

பிரச்சினை வரும்போது முடிவெடுக்கும் நாம்—சிக்கல்கள் தோன்றும்போது வழிகாணும் நாம்—பிறகு அதை விரிவாக நமது 'டயரி'யில் எழுதி வைக்க வேண்டும். ஏனெனில், நமது முன்னுளைய அனுபவம், நமக்கு உதவும். பழைய தோல்விகள் நமக்கு வழி

காட்டும், இன்னது செய்யக் கூடாது என்று. பழைய வெற்றிகள் நமக்கு நம்பிக்கை ஊட்டும், நமது முடிவெடுக்கும் திறனைப்பற்றி.

முடிவெடுப்பதுதான் வாழ்க்கையின் திருப்பு முனை. வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும், என்ன முடிவெடுத்தோம் என்பதைப் பொறுத்துத்தான், நம் வாழ்க்கை அமைகிறது. வெற்றிகரமான வாழ்க்கை வாழும் ஒருவன், தன் வாழ்வின் ஒவ்வொரு பிரச்சினையிலும், ஒவ்வொரு காலக்கட்டத்திலும் எப்படி முடிவெடுத்தான் என்பதைத் தெரிவிக்கிறது.

ஒரு கம்பெனி நிர்வாகி கூறினார், "என் குழந்தைகளுக்கு ஒரு நல்ல புத்திமதி சொல்லவேண்டுமானால் இதைத்தான் சொல்வேன்: 'ஒவ்வொருவர் வாழ்விலும் பெரிய மகத்தான சம்பவங்கள் ஒன்றிரண்டுதான் வரும். ஆனால், வாழ்வில் சின்னச்சின்ன வெற்றிகள் ஏராளமாக வரும். வாழ்வில், நமது சின்னச்சின்ன வெற்றிகளையும் ரசிக்க, அனுபவித்து மகிழ, நாம் தெரிந்து கொள்ளவேண்டும்' என்று."

அதே போல், சின்னச்சின்ன விஷயங்களிலும் நாம் சரியான முடிவெடுக்கும் ஒரு நல்ல பழக்கத்தை வளர்த்துக் கொண்டோமானால், பெரிய விஷயங்களில் நாம் முடிவெடுப்பதற்கு, இது உதவியாக இருக்கும். நம் வாழ்க்கை பலவித சின்னச் சின்ன முடிவுகளால் தான் கோக்கப்பட்டு, வாழ்க்கை என்ற நீண்ட மாலையாக விரிகிறது. வாழ்க்கையின் வெற்றி, ஒவ்வொரு திருப்பத்திலும், நாம் எடுத்த முடிவுகளின் விளைவுதான்.

நாம் கடந்துவந்த பாதையைக் கவனித்தோமானால், நாம் எடுத்த முடிவுகளைப் புரிந்து கொள்ளலாம்.

இன்று நீங்கள் இருக்கும் நிலைக்கு, நீங்கள் எடுத்த முடிவுகள்தான் காரணம். கொஞ்சம் அவகாசம் எடுத்துக் கொண்டு அதைச் சிந்தித்துப் பாருங்கள்.

வாழ்வில், நாம், தினமும் பல பிரச்சினைகளைச் சந்திக்கிறோம். இன்றைக்குக் காலை உணவாக இட்டிலியா, தோசையா, உப்புமாவா, பூரியா, பொங்கலா, சாம்பாரா, சட்னியா என்பதிலிருந்து பிரச்சினைகள் தொடங்குகின்றன; இன்று சினிமாவுக்குப் போகலாமா, கோயிலுக்கா அல்லது பீச்சுக்கா என்று முடிகின்றன. இடையில் என்ன சட்டை போடுவது என்பதிலிருந்து, யாரைச் சந்திக்கலாம் அல்லது யாரைச் சந்திக்க வேண்டாம் என்பது வரை பல பிரச்னைகளுக்கு நாம் முடிவு காண்கிறோம்.

இதெல்லாம் சின்ன விஷயங்கள். காலையில் எந்த உணவு சாப்பிடுவது என்று நாம் போராடி மண்டையை உடைத்துக் கொள்வதில்லை. சில சமயம் ஹோட்டலில் நாம் முடிவு பண்ணுமுன், சர்வர் வேறு வேலை செய்யப் போய்விடுகிறார். முடிவு செய்யமுடியாத 'மிஸ்டர் குழப்பசாமி' வந்திருக்கிறார் என்பது அவருக்குத் தெரியும்.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடித்தவுடன் கல்லூரிக்குப் போவதா, வேலை தேடிப் போவதா, கல்லூரிக்குப் போனால் எந்தப் படிப்பை எடுத்துக்கொள்வது, சொந்தத் தொழில் செய்வதா, உடனே திருமணம் செய்து கொள்வதா, படித்து முடித்தபின் செய்து கொள்வதா, 'ரிடையரா'னவுடன் எங்கே குடியிருப்பது என்று பல பெரிய பிரச்னைகள் நம் எல்லோரையும் மோதுகின்றன.

ஒவ்வொரு நிலையிலும், பல வாய்ப்புக்கள் பல வழிகள் உள்ளன. நாம் எதைத் தேர்ந்தெடுக்-

கிறோம் என்பதைப் பொறுத்து, நமது எதிர்காலம் அமைகிறது. இளைஞன் ஒருவன் பொறியியல் படித்து வேலை பார்த்துக் கொண்டிருந்தான். திருமணமான வுடன் பணக்கார மனைவியின் பெற்றோர் சொன்னார் கள், "நிலம், நீச்சு இருக்கிறது. மாப்பிள்ளை ஏன் வேலை பார்க்க வேண்டும்? வீட்டோடு இருக்கட்டும்" என்று.

நீங்கள் என்ன முடிவு செய்வீர்கள்?

நமது 'கதாநாயகர்' அதிகம் சிந்திக்கவில்லை. மாமியார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே அடுத்த ஆறுவது மாதத்திலிருந்து அவரை அடிமை யாக நடத்தினார்கள். அது, விளைவு. இந்த விளைவுக்கு யார் காரணம்? நமது கதாநாயகர் எடுத்த முடிவுதான் காரணம். நாம் எடுக்கும் முடிவுகளின் விளைவுகளே நம் தலையில் விடிகின்றன.

அமெரிக்காவில், ஒரு விவசாயக் குடும்பத்தில் ஓர் உதவியாளாக வந்து சேர்ந்தான் ஒரு பையன். பெயர், குரோவர். அந்த விவசாயியின் அழகான மகளைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆசைப் பட்டான். விவசாயி மறுத்துவிட்டார். இருபது வருஷம் கழித்து ஒரு நாள், தனது மாட்டுப்பண்ணை யின் தொழுவத்தை விவசாயி நிமிர்ந்து பார்த்தார். கொட்டை எழுத்தில் கிளீவ்லண்டு குரோவர் என்ற பெயர் செதுக்கப்பட்டிருந்தது. அப்போது குரோவர், அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந் தார். அந்த விவசாயிக்கு குரோவரின் எதிர்காலத்தில் நம்பிக்கை இல்லை. அவர் எடுத்த முடிவு அது.

எனக்குத் தெரிந்த வீட்டில், பணக்காரப் பையன் என்று தன் மகளைக் கல்யாணம் செய்து கொடுத்

தார்கள். ஏழையாகிப் போனுன் அவன். அடுத்த வீட்டில், 'பையன் ஏழை. ஆனுல், புத்திசாலி' என்று தங்கள் பெண்ணைக் கட்டிக் கொடுத்தார்கள். பையன், பணக்காரனுக, காசுக் சடை வைத்துக் கொண்டிருக் கிருன். எல்லாம், முடிவு; முடிவு. நாம் எடுக்கும் முடிவில் அடங்கியிருக்கிறது, நம் எதிர்காலம்.

பலருக்கு, 'முடிவெடுக்கும் திறன்—ஒரு பெரிய வாய்ப்பு—நம்மிடம் இருக்கிறது. எதைத் தேர்ந்தெடுக் கிருேமோ, அதன் மூலம்தான் நம் எதிர்காலத்தை நாமே உருவாக்குகிருேம்' என்பது தெரியவில்லை. உதாரணமாக, 'என் குடும்பம் பெருத்துப் போச்சு? ஏழு குழந்தைகள்!' என்று சொல்லிக் கொண்டே, டாக்டர் முன் நின்றார் ஒருவர். டாக்டர் கேட்டார், 'உங்களுக்குத் தெரியாமலே பெருத்ததா? இல்லை, தெரிந்துதான் பெருத்ததா?' என்று.

தெரியாமலே பெருத்ததென்று சொன்னுல், அவர் மனைவிக்கு இழுக்காகும். தெரிந்துதான் பெருத்த தென்ருல் அதுவரை இதைக்கூட உணராத, தன் முட்டாள்தனம் வெளியாகும். மனிதர், பேசாமலிருந் தார்.

இரண்டு குழந்தைகளோடு நிறுத்திக் கொள்ளக் கூடிய வாய்ப்பு, அவர் கையில்தான் இருந்தது. அவர் மனைவி கூறிவருவது போல, ஏழு குழந்தைகளையும் கடவுள் கொடுத்துவிடவில்லை! கடவுளுக்கு வேறு வேலையா இல்லை? இவர்கள், வாழ்க்கை தன் கட்டுப் பாட்டுக்குள் இருக்கிறது என்பதை ஒரு நாளும் உணராதவர்கள்.

டாக்டர் நாராயணன், பிரபல எலும்பு முறிவுத் துறை மருத்துவர்; பிராமணக் குடும்பம். அவரது மகனும் டாக்டருக்குத்தான் படித்துக்கொண்டிருந்தார்.

தனது கல்லூரியில் படிக்கும் மாணவி ஒருத்தி மீது அவருக்குக் காதல் பிறந்தது. டாக்டர் நாராயணனோ இதை ஏற்றுக் கொள்ளவில்லை. காரணம் இருவரும் வேறு சாதிக்காரர்கள்.

கவனியுங்கள்! பையன் திருமணத்தை யார் முடிவு செய்கிறார்கள் என்று. சாதிவிட்டுச் சாதி பெண்ணெடுக்கும் பழக்கம் தன் குடும்பத்துக்கே அடுக்காது என்றார் டாக்டர் நாராயணன்.

என்ன ஆயிற்று?

டாக்டரின் மகனும், அவரைக் காதலித்த அந்தக் கிறிஸ்துவப் பெண்ணும் தற்கொலைசெய்துகொண்டார்கள். தம்பதிகள் வேறு ஊருக்கு ஓடிப்போயிருக்கலாம். கல்யாணம் செய்து கொள்ளாமலே பெற்றோர் மனம் மாறும்வரை . தட்டிக் கழித்திருக்கலாம். இன்னும் எத்தனையோ வழிகள் இருந்தன. ஆனால், அவர்கள் 'தற்கொலை' என்ற முடிவைத் தேர்ந்தெடுத்தார்கள்; வாழ்வை முடித்துக்கொண்டார்கள்.

பலருக்கு, வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு, வாழ்க்கைச் சிக்கல்களுக்கு, பலவழிகள் இருக்கின்றன என்பதே தெரிவதில்லை. பல சமயம், அவர்கள், தங்கள் கௌரவத்துக்கு இதுதான் நல்லது என்று முடிவு செய்கிறார்கள். கௌரவம் அல்லது வாழ்வில் முக்கியமாகக் கருதும் கொள்கைகள், நமது முடிவைப் பெரிதும் பாதிக்கின்றன. தேவதாஸ்—பார்வதி, லைலா—மஜ்னு, ரோமியோ—ஜூலியட் போன்ற காதல் இலக்கியங்கள் உண்மைக் காதலுக்கு—தெய்வீகக் காதலுக்கு—'இது இப்படித்தான்' என்று வரையறை செய்துவிட்டுப் போய்விட்டன. பலர், நடைமுறை உலகை மறந்து, அவற்றால் உந்தப்பட்டு, வாழ்க்கையை இலக்கியமாக

மாற்றி, அவற்றை முன்னுதாரணமாக எடுத்துக் கொள்கின்றனர்; அதில் திருப்தி காண்கின்றனர்.

முடிவெடுப்பது என்பது, மிக முக்கியமானது. அதில், பல விஷயங்கள் இருக்கின்றன. நாம் எப்படி முடிவெடுக்கிறோம் என்பதைப் பொறுத்துதான் நம் எதிர்காலம் அமைகிறது.

# தீர்மானிக்கப் பழகுங்கள்...

எனக்குத் தெரிந்த ஒரு பிரமுகர் இருந்தார். ஏதாவது பிரச்சினை, சிக்கல் என்று வந்தால், 'அதற்கென்ன பார்க்கலாம்' என்பார். ஏதாவது முடிவெடுக்க அவருக்குப் பயம். ஒருவிதமாக முடிவெடுத்து, பின்னால் அது தப்பாய்ப் போய்விட்டால் என்ன செய்வதென்ற பயம் அவரை ஆட்டிப் படைக்கும். எதையும் ஒத்திப் போடுவார். ஒத்திப் போடும் விஷயமெல்லாம் காலப் போக்கில், தாமே தீர்ந்து போய்விடும் என்று நம்புவார். அவருக்குக் கீழே வேலை செய்பவர்களெல்லோரும், அவருக்கு ஒரு செல்லப் பெயர் வைத்திருந்தார்கள்.

'வழவழா என்ன சொல்லிற்று?' என்பார்கள்.

'விளக்கெண்ணெய் எங்கே போயிருக்கிறது?' என்பார்கள். ஒரு சமயம் மேடையில் பேசச் சொன்னார்கள். 'வாழ்க்கையில் காரியங்கள், சட்டென்று முடிவெடுக்கும் போதுதான் நகர்கின்றன' என்று ஆரம்பித்தார். பாதி பேசியதும், அவருக்கே சந்தேகம் வந்து விட்டது. 'எல்லாம் நமக்குத் தெரிந்துவிட்டதாக எண்ணிக்கொண்டு நாம் முடிவெடுப்பதில் அர்த்தமே இல்லை' என்று முடித்தார். கேட்டவர்கள் அசந்து போனார்கள். அப்படி ஒரு குழப்பம். கேட்க வந்திருந்தவர்கள் பலருக்குத் தலை சுற்றியது. 'நம்மையே குழப்பி விடுகிறான், மன்னன்!' என்று சொல்லிக் கொண்டு வெளியேறினார்கள்.

ஒரு சமயம் அவர் காரியதரிசி, "நமது அரிசிக் கிடங்கில் எலி வந்திருக்கிறது" என்ருர்.

"அதற்கென்ன பார்த்துக் கொள்ளலாம். எலிப் பொறி கிடைக்கிறதா என்று பார்" என்ருர் பிரமுகர். ஒரு வாரம் கழித்து, "எலிப் பொறி, கடைகளில் விற்கிறது" என்று காரியதரிசி கண்டுபிடித்துக் கூறினுர்.

கதையை நீட்டாமல் சொல்ல வேண்டுமானுல், எலிப் பொறிகள் வந்தபோது, எலிகள் மட்டுமே கிடங்கில் இருந்தன. அரிசி இல்லை.

ஏன், சிலர் முடிவெடுக்கப் பயப்படுகிருேம்? யாராவது, நமக்காக முடிவெடுத்தால் நல்லது என்று நினைக்கிருேம்? 'அதைச் செய், இதைச் செய்யாதே' என்று கூறிய பெற்ருேர்களோ, நமது ஆசிரியர்களோ நம்முடன் இருந்தால் நல்லது என்று ஏன் நினைக்கிருேம்?

பிரச்சினைகள், பெரிதாகவும் சிறிதாகவும் எல்லா வடிவங்களிலும் வருகின்றன. 'இப்படி ஒரு முடிவெடுத்தால் என்ன மோசமான விளைவு ஏற்படும்?' என்று யோசித்துப் பார்த்தால் பல காரியங்களில் நமது பயமும் தயக்கமும் மறையும்.

சில முடிவுகள்தான் நம் கையில் இருக்கின்றன. சில முடிவுகள் நமது கட்டுப்பாட்டுக்கு அப்பால் இருக்கின்றன. யாரைத் திருமணம் செய்து கொள்கிருேம் என்பது நம் கையில் மட்டும் இல்லை; நாம் காதலிப்பவருக்கு நம்மைப் பிடிக்காமல் போகலாம். நாம் விரும்பும் கல்லூரியில் நம்மைச் சேர்த்துக்கொள்ள முடியாது என்று அவர்கள் கூறிவிடலாம். அதற்கெல்லாம் கவலைப்பட்டுக் காலத்தைப் போக்கக் கூடாது. அவை நம் எல்லைக்கு அப்பாற்பட்டவை.

தவருய்ப் போய்விட்டால் என்ன செய்வதென்று பல சமயம் பயப்படுகிறேம்..தவறு ஏற்படுவது இயல்பு தான். எல்லாவற்றையுமே சரியாகச் செய்யும் பூரணத்துவம் பெற்ற மனிதரை உலகம் இன்னும் காணவில்லை. எப்போதுமே, எல்லாருமே சரியாக இருக்க முடியாது. இந்த உலகில் எல்லோரையும் திருப்திப்படுத்திக்கொண்டு வாழ முடியாது. மகாத்மா காநதியையே வெறுத்த பலரும் நம்மிடையேதான் வாழ்ந்தார்கள். ஆக, நாம்·தவறு விளையுமோ என்று பயந்துகொண்டு காலத்தைக் கடத்தக் கூடாது.

கோபமாக இருக்கும்போது, தளர்ந்து உடல் ஓய்ந்து இருக்கும்போது, நிலைமை நெருக்கடியாக இருக்கும்போதெல்லாம் நாம் அவசரப்பட்டு முடி வெடுக்கக் கூடாது என்று மனேதத்துவ நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிருர்கள். நெருக்கடி நிலைமையின் சமீபம், நம் பார்வையின் தெளிவைப் பாதிக்கும் என்று கூறுகிருர்கள். அந்தச் சமயத்தில், சில மணி நேரம் கழித்து விஷயங்களை அணுகும்போது நமக்கு ஒரு நிதானம் ஏற்படுகிறது என்கிருர்கள், கதையெழுதுப வர்கள் கதையை முடித்தவுடன் படித்துப் பார்த்து விமரிசனம் செய்யாமல், ஓரிரு நாட்கள் கழித்து, அதைப் படித்துப் பார்க்கும்போது அவர்கள் பார்வை யும் விமரிசனமும் பயனுள்ளதாய் இருக்கும்.

'பிரச்னைகளைச் சில சமயம் தூங்கப் போடுங்கள்' என்று கூறுவார்கள். அதாவது, அந்த விஷயம்பற்றித் தீவிரமாக எல்லாக் கோணங்களிலிருந்தும் அலசி ஆராய்ந்த பிறகு, அந்தப் பிரச்னையை சில நாள்—ஓரிரு நாள்—அதிகப்படியாக ஒரு வாரம்—விட்டுவிட வேண் டும். இதற்குள் நமது ஆழ்மனம் சரியான முடிவைக் கண்டு நமக்குத் தெரிவிக்கிறது. இந்த ஆழ்மனம்

காட்டும் முடிவு கனவின் மூலமோ, மற்றபடி திடீரென்று நமக்கு ஏற்படும் தெளிவின் மூலமோ தெரிய வரும். இதை gut feeling, இப்படித்தான் என்ற 'அடி உணர்வு' என்று கூறுவார்கள். இதை மீண்டும், நாம் நடைமுறை உலக அனுபவங்களோடு ஒத்திட்டு அதை மேற்கொள்ளலாம்.

நமக்கு, பல யோசனைகள், பல வழிகள் தோன்றக் கூடும். அப்போதெல்லாம், எது முக்கியம் என்பதைப் பற்றி நமக்கு ஒரு தெளிவு வேண்டும். படிப்பில் முதலாவதாக வருவதுதான் நமது நோக்கமா? விளையாட்டில் கவனம் செலுத்த வேண்டுமா? நண்பர் களுக்காக நேரத்தைச் செலவிடவேண்டுமா? அல்லது பெற்றோர்களுக்காக, அவர்கள் விரும்பும் காரியத்தைச் செய்ய வேண்டுமா? இதெல்லாம் நமது மனப் பண் பாட்டைப் பொறுத்தது. எதை நாம் மதிக்கிறோம் என்பதைப் பொறுத்தது. பணம் கிடைக்கிறதென்று ஒரு மனிதன் எல்லாக் காரியத்தையும் செய்துவிடுவ தில்லை. அங்கே, அவன் தன்மானம் வருகிறது. அவன் வாழ்க்கைக் கொள்கைகள் முன்வருகின்றன. முடிவெடுக்கும் முன்பாக, நமக்கு நம்மைப்பற்றிய கொள்கைகளில் ஒரு தெளிவு வேண்டும். அதையொட்டி நாம் நம் முடிவுகளை, எடுக்க வேண்டும். இல்லாவிட் டால், நம் முடிவுகளுக்காக, பின்னால் நாமே வருந்துவோம்.

சில சமயம் நமக்குப் போதுமான தகவல்கள் இல்லாமல் போகலாம். அதை வைத்துக்கொண்டு முடிவெடுக்கும்போது ஆபத்து ஏற்படுகிறது. ஒரு அரசியல் தலைவர் இருந்தார். அவரிடம் கடைசியாக, யார் போய்க் காதைக் கடிக்கிறார்களோ, அதுவே உலகின் கடைசி உண்மை என்று நம்புவார்.

முடிவெடுத்தபின், மைக்கிலும் பேப்பரிலும் அறிவித்த பின், அவர் தெரிந்துகொள்ள வேண்டிய பல விஷயங் களைப் பலர் கூறுவார்கள். அப்போது அவர் மைக்கின் முன்னால் அசடு வழிவார்; வாபஸ் வாங்கிக் கொள்வார்.

ஓர் அரசன், ஒருவரையொருவர் அறியாத பல உளவாளிகளின் மூலம் நாட்டின் நிலைமையை அறிந்து கொள்கிறான். அதே போல, பல கோணங்களிலிருந்தும், பல பேர்களிடமிருந்தும் நாம் சரியான தகவல்களையும் யோசனைகளையும் பெறவேண்டும். பலர், வாழ்க்கையில் தங்கள் திறமைக்குக் குறைந்த வேலையில், தங்கள் தகுதிக்குக் குறைந்த சம்பளத்தில் தங்களை அமர்த்திக் கொள்கின்றனர். காரணம்? அவர்கள் முன் இருக்கும் பல்வேறு வாய்ப்புக்களையும் அவர்கள் உணர்வதில்லை! 'கதாநாயகனாக நடிக்க சந்தர்ப்பம் கிடைக்குமா?" என்று கேட்பதை விட்டுவிட்டு, அதற்கான வழிமுறை களை ஆலோசனை செய்வதை விட்டுவிட்டு, நம்மை நாமே குறைத்து விற்பனை செய்யக் கூடாது. பெரிய பதவிக்கு வாய்ப்பு ஏன் இல்லை' என்று நாம் சிந்திக்க வேண்டும்.

கண்களை அகல விரித்து, விஷயங்களை அணுக வேண்டும். இப்படிப் போக முடியாது, அது சாத்திய மில்லை என்று சிலர் கூறும்போது, அதை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல், 'ஏன் சாத்தியமில்லை? சாத்திய மாக என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்க வேண் டும். அப்போது — அப்படிப் பரிசீலிக்கும்போது— சாத்தியமில்லாத விஷயங்களைக்கூட, சாத்தியமாக்கக் கூடிய நிலை புலப்படும்.

முடிவு தவறாய்ப் போனால், அதற்காகப் பிடிவாதம் பிடித்து உடனே மாற்றிக்கொள்ள நாம் தயங்கக் கூடாது. நாம் வளைந்து கொடுக்கும் மனப்பக்குவம் கொண்டிருக்க வேண்டும். முடிவெடுக்கும் உரிமை நம் முடையது. அதேபோல, முடிவை மாற்றிக்கொள்ளும் உரிமையும் நமக்கு உண்டு. அதுதான் விவேகம்.

# எடுக்கும் முடிவைப் பொறுத்தே விளைவுகள் அமைகின்றன...

ஒரு பெண்ணின் திருமணமாகாத சகோதரி எதிர் பாராதவிதமாகக் கருவுற்றாள். வீட்டிற்குத் தெரிந்தால் கொலை விழும் என்று சகோதரிகள் பயந்தார்கள். அடுத்த வீட்டுக்காரர் துணையுடன், சகோதரியை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று கர்ப்பத்தைக் கமுக்கமாகக் கலைத்துவிட்டு வந்து சேர்ந்தார்கள். இதன் விளைவாக, இளையவளுக்கு அடுத்த வீட்டுக் காரர்பால் தோன்றிய நன்றியுணர்வு, அபிமானமாக மாறி, கல்யாணம் செய்து கொண்டதில் போய் முடிந்தது.

அது, இளையவள் எடுத்த முடிவு. தன் முடிவு தன் வாழ்க்கையை எவ்வளவு பாதித்தது என்பது பின்னால் தெரியவந்தது. ஆனால், அப்போது எல்லாம் காலம் கடந்த நிலை. அவளது துயரம் நிறைந்த திருமணத் திற்கு யார் காரணம்? அவள் எடுத்த முடிவு. பின்னே சென்று முடிவை மாற்றிக் கொள்கிற நிலை உண்டா நம் சமுதாயத்தில்? ஒரு முடிவினால், ஒரு வாழ்க்கையே சுமையாகிறது.

நாட்டின் இன்றைய பிரச்சினை வேலையில்லாத் திண்டாட்டம், உற்பத்திக் குறைவு, விலைவாசி யேற்றம்— இப்படிப் பல...ஆனால், தமிழ்ச் சமு தாயமோ இதையெல்லாம்விட 'தமிழின் பெருமையே எனக்கு முக்கியம்' என்று கருதி தமிழ்விழா எடுக்கிறது. உயிரினும் மேலாகத் தமிழை மதிக்கும் தமிழ்ப் பற்று

என்று பெருமைப் படலாம். அது ஒரு முடிவு. நம் சமுதாய மனோபாவத்தைப் பிரதிபலிக்கும் முடிவு.

ஓராண்டுக்குமுன், அமெரிக்கத் தூதுவரகத்தைச் சேர்ந்த அதிகாரிகளை ஈரான் நாட்டு மாணவர்கள் சிறை யெடுத்தார்கள்; அவர்களைப் பதினான்கு மாதம் கைதிகளாக நடத்தினார்கள். ஜனாதிபதி கார்ட்டர் என்ன செய்தார்?

'விட்டுவிடுங்கள்' என்று வேண்டுகோள் விடுத்தார்; கொஞ்சம் மிரட்டிப் பார்த்தார். பொருளாதாரத் துறைகளில் எதிர் நடவடிக்கை எடுத்தார். 'வழவழா' என்று காலங்கடத்தினார். அது, அவர் எடுத்த முடிவு. 'முடிவு செய்ய முடியாதவர்' என்று தூக்கியெறிந்தார்கள் அமெரிக்க மக்கள். அது அமெரிக்க மக்கள் எடுத்த முடிவு. கார்ட்டர் எடுத்த முடிவைக் கவனியுங்கள்! பொறுத்துப் பார்ப்போம் என்று பதினான்கு மாதம் வரை பொறுத்திருந்தார். ஒரு முடிவையும் எடுக்க அவரால் முடியவில்லை.

'அமெரிக்காவின் வலிமையை உணர்த்தத் தெரியாத தலைமை' என்று கார்ட்டரை வீட்டுக்கு அனுப்பினார்கள். பதவி என்று கிடைப்பதனால், பதவியில் இருப்போரெல்லாம் சரியான முடிவு எடுத்துவிடுவதில்லை. மனிதன் தன் சொந்த அறிவைத்தான் பதவிக்குக் கொண்டுபோகிறான்.

1975-ல் இந்திராகாந்தி கொண்டுவந்த 'நெருக்கடி நிலைமை,' அவர் எடுத்த முடிவு.

1962-ல் சீனப் படையெடுப்பைக் காட்டி, 'பிரிவினை கேட்பது சட்ட விரோதம்' என்று நேரு சட்டம் கொண்டு வந்தபோது அறிஞர் அண்ணா பின்வாங்கி அதை ஏற்றுக் கொண்டாரே,—தி. மு. கழகத்தின்

கொள்கைகளை அதற்கேற்ப மாற்றிக் கொண்டாரே—அது, அவர் எடுத்த முடிவு.

திரு. எம். ஜி. ஆரைக் கட்சியிலிருந்து வெளியேற்றுவது என்று கலைஞர் தீர்மானித்தாரே, அது கலைஞர் எடுத்த முடிவு.

கலைஞர் கருணாநிதி, தஞ்சைத் தொகுதியில் போட்டியிடப் போகிறார் என்று தெரிந்ததும், இந்திரா காந்தியை அங்கே நிறுத்தத் தயங்கினாரே எம். ஜி. ஆர். அது அவர் எடுத்த முடிவு.

எந்த முடிவும் அதன் விளைவுகளைக் கொண்டுவருகிறது. முடிவு எடுத்தவர்கள் அதன் பலனை அனுபவிக்கிறார்கள். சில சமயம், ஏதாவது ஒரு வழியில் நாம் ஒரு முடிவை எடுக்கிறோம். விளைவுகள் நாம் எதிர்பாராது அமைந்துவிடுகின்றன. அப்போது வருந்தி அழுது பயனில்லை.

மாறாக, முடிவெடுக்கும்போது, நாம் உணர்ச்சிவசப்பட்டு முடிவெடுத்தோமா, நமது நோக்கம் என்ன, அதை அடைந்தோமா, இந்த ஒரு முடிவு இல்லாமல், நம் முன் இருந்த மாற்று வழிமுறைகள் என்னென்ன' அவற்றின் விளைவுகளை ஆராய்ந்தோமா, நம் முன் இருந்த வழிகளுக்குள் நாம் எடுத்த இந்த முடிவுதான் சிறந்ததா... என்பதையெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும்.

வேடிக்கைக்காக, ஒரு பென்சிலை எடுத்துக் கொள்ளுங்கள்; ஒரு காகிதத்தை எடுத்துக் கொள்ளுங்கள். மேற்கண்ட ஒவ்வொரு சம்பவத்திலும், அடுத்த வீட்டுக்காரனை மணந்துகொண்ட பெண்ணிலிருந்து, இந்திராகாந்தி, கலைஞர், எம். ஜி. ஆர். வரை

—ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நீங்கள், அவர்கள் நிலையில் முடிவெடுப்பதாக எண்ணி, எல்லாத் தகவல்களையும் சேகரியுங்கள்; மாற்று யோசனைகளைப் பரிசீலியுங்கள். எது சிறந்தது என்று தீர்மானியுங்கள். அத்துடன் எந்தக் காரணத்தினால் மேற்கண்ட நிலையில் ஒவ்வொருவரும் தவறினார்கள் என்று ஆராயுங்கள். அதாவது, அவர்கள் எடுத்த முடிவுகளை நீங்கள் தவறாகக் கருதினால், இது நல்ல பயிற்சியாக அமையும். உங்கள் நண்பர் குழுவை, ஓர் அமைச்சர் குழு போல் பாவியுங்கள். நீங்கள் இந்தப் பயிற்சியைப் பெரிதும் ரசிப்பீர்கள்.

நமது விருப்பு—வெறுப்புகளோ, நமது பயமோ நம் முடிவைப் பாதிக்கக் கூடாது. அதாவது, நமது உணர்ச்சிகளுக்கு உட்பட்டு விஷயங்களைச் சீர் தூக்கிப் பார்க்கக் கூடாது. பொதுவாக, இந்தியர்கள் உணர்ச்சியை முன் வைத்து அறிவைப் பின்வைத்து நடப்பவர்கள் என்ற பெயர் நமக்கு உண்டு.

ஆழமாகச் சிந்தித்தோமானால்,—'ஒரு மனிதனது முடிவை அவன் இளவயதில் பழக்கப்பட்ட விதம், அவன் வளர்ந்த விதம் பாதிக்கிறது; அதற்கேற்பவே அவன் முடிவெடுக்கிறான்' என்கிறார் பேபர் என்ற அமெரிக்க அரசியல் பேராசிரியர். நிக்சனுக்கு யாரைக் கண்டாலும் சந்தேகம். தன்னைக் கவிழ்க்கத் தனக்கு எதிராக சதி செய்யத்தான் வந்திருக்கிறார்களோ என்ற ஒரு பெருத்த சந்தேகம். இளவயது முதல், பிறருடைய அங்கீகாரத்திற்காக நிக்சனின் கண்கள் அலைபாயும். ஒவ்வொருவர் முகத்தையும் பார்க்கும்.

முகம்மது-பின்-துக்ளக் போல், தன் முடிவை ஒருவர் அடிக்கடி மாற்றிக் கொள்கிறாரென்றால், அவர்

வளர்ந்த விதத்தில் இருந்த நெருக்கடிகளை அவரது குழப்ப மனத்தை—நாம் உணரவேண்டும். தன் முடிவைப் பற்றியே அவருக்குச் சந்தேகம். அடிக்கடி மாற்றிக் கொள்கிறார். அல்லது பொதுமக்கள் அபிப் பிராயம் மாறமாற, இவரும் மாற்றிக்கொள்கிறார். இவர் கள் ஆழாமில்லாதவர்கள். தன்னம்பிக்கை இல்லாத வர்கள. குழப்பமுள்ள பேச்சு, குழப்பம் நிறைந்த மனத்திலிருந்து புறப்படுகிறது. சஞ்சலம் நிறைந்த மனம், தன் முடிவை அடிக்கடி மாற்றிக் கொள்கிறது

ஒரு மனிதனின் முடிவெடுக்கும் திறன், 'இரண்டு விஷயங்களினால் பாதிக்கப்படுகிறது' என்று கூறு கிறார்கள் அறிஞர்கள். அறிஞர் பேபர் கூறியதுபோல, தனது முன் அனுபவத்தை வைத்து, எதையும் ஒரு மனிதன் முடிவெடுக்கிறான். ஒரு காரியத்திற்காக மேலதிகாரியிடம் திட்டு வாங்கினால், மீண்டும் மேலதி காரியிடம் போகும்போது மனம் பயப்படுகிறது, முன் அனுபவம்.

அமைச்சரோ, அதிகாரியோ ஆயிரம் இரண்டா யிரம் முன்னால் லஞ்சம் பெற்றிருந்தால், அடுத்த முறை ஒரு காருடனோ அல்லது வீட்டுடனோ லஞ்சம் கொடுக்கப்போய் நிற்கிறான் மனிதன். முன் அனுபவம். லஞ்சம வாங்கியபோது முதல்முறை பிடிக்கப்படா தவன், அடுத்த முறை தைரியமாகக் கேட்டு வாங்கு கிறான். முன் அனுபவம். மனிதன் தன் முன் அனுபவத்தை வைத்து முடிவெடுக்கிறான். இரண்டா வது, மூன்றாவது முறை முடிவெடுப்பது அவனுக்கு எளிதாகிவிடுகிறது. அதே பிரச்சினைகள்; அதே வழி முறைகள். இதில் ஒன்றும் கஷ்டமில்லை.

இது அல்லாமல், நாம் எடுக்கும் முடிவுக்கு நமது சமுதாயமும் காரணமாயிருக்கிறது. சமுதாயம், நம்

மிடம் ;இப்படிச் சில செயல்களை எதிர்பார்க்கிறது; அதற்கேற்ப நாம் நடந்து கொள்ளுகிறோம்.

ஜப்பானிலோ, அமெரிக்காவிலோ லஞ்சம் வாங்குபவனை, சமுதாயம் மிகக் கேவலமாக மதிக்கிறது. அடுத்த முறை, அந்த அரசியல்வாதியைத் தேர்ந்தெடுப்பதில்லை. ஆனால், நமது ஊரில் கையும் களவுமாக லஞ்சம் வாங்கிப் பிடிபட்டவனையும், நீதிமன்றத்தில் குற்றஞ்சாட்டப்பட்டவனையும்கூட, பெரிய திருடனாக நமது சமுதாயம் நினைப்பதில்லை. 'என்ன இவன் பெரிய திருடன்? யார் லஞ்சம் வாங்காமல் இல்லை?' என்ற கேள்விகளைக் கேட்கிறோம். ஆக, சமுதாயம் இதை இழிவாகக் கருதுவதில்லை. அப்படிக் கருதாதபோது, அடுத்து, பதவிக்கு வருபவன் என்ன முடிவெடுப்பான் என்பதையே யோசித்துப் பாருங்கள். அவன் மகா பெரிய திருடனாகின்றான். சமுதாய எதிர்பார்ப்பினால் நம் முடிவுகள் உருவாகின்றன.

விதவைகள் திருமணம் பற்றிப் பேசும் நம் சமுதாயம், அதனைப் பெரிதும், நடைமுறை உலகில் ஆதரிப்பதில்லை. வீட்டிலிருக்கும் அப்பா, அம்மா, தாத்தா, பாட்டிகளுக்கு, காதல்—காம உணர்வுகள் கிடையாது என்று கூறி, 'இந்த வயதில் என்ன வேண்டியிருக்கிறது?' என்று சிறியவர்கள் பேசிக்கொள்கிறார்கள். பெரியவர்களின் தேவை கோயில் குளம்தான் என்று அவர்கள் முடிவு செய்கிறார்கள். அனாதைக் குழந்தைகள் ஏராளமாக உள்ள ஊரில் பிள்ளையில்லாத புண்ணியாத்மாக்கள் குழந்தைகளைத் தத்து எடுப்பதைப்பற்றி யோசிப்பதில்லை. அமெரிக்காவில் தத்து எடுத்து வளர்ப்பதைப் பெரிய தொண்டாகக் கருதி, தன் எல்லைக்கு மீறி, அதற்காக உழைக்கிறார்கள். இவையெல்லாம் சமுதாய எதிர்பார்ப்புகள்.

முடிவெடுக்கும்போது, நம் முடிவை முன் அனுபவங்களும், சமுதாய எதிர்பார்ப்புகளும் எப்படிப் பாதிக்கின்றன என்பதை நாம் உணரவேண்டும். அவற்றைச் சீர்தூக்கிப் பார்க்க முயலவேண்டும். நாம் எடுக்கும் முடிவு நம் லட்சியத்தையொட்டி — நலம் அடைய விரும்புவதையொட்டி—அமையவேண்டும். மற்றெல்லா மாற்று யோசனைகளிலும், நம் முடிவு சிறந்ததாக அமையவேண்டும்.

# முடிவெடுக்கும் திறன் ஒரு பயிற்சி

முடிவெடுக்கும் திறன் இருக்கிறதே, அது ஒரு கலை. 'சித்திரமும் கைப்பழக்கம்' என்பதுபோல, நாம் கற்றுக் கொண்டு முன்னேறக்கூடிய ஒரு கலை. ஒவ்வொரு சிறு சந்தர்ப்பத்திலும் எப்படி முடிவெடுக்கிறோம் என்பது, முடிவெடுக்கும் போதும், முடிவெடுத்த பின் அதைப் பின்னோக்கிப் பார்க்கும்போதும் ஏற்படும் நிலையிலிருந்து நமக்கு ஒரு தெளிவு கிடைக்கிறது. வந்த பாதை புலப்படுகிறது. அது நல்ல பாதையா, மீண்டும் அதில் செல்லலாமா கூடாதா என்ற எண்ணத்தை அந்த அனுபவம் தருகிறது.

அன்றாடம் எத்தனையோ சின்னச்சின்ன பிரச்னைகள் நம்மை மோதுகின்றன. அவைபற்றி நாம் முடிவெடுக்கிறோம். இவற்றில் பல சமயம் சட்டென்று ஏதோ ஒன்றைத் தேர்ந்தெடுக்கிறோம். 'இதெல்லாம் சின்னச்சின்ன விஷயங்கள். இதிலெல்லாம் காலத்தைப் போக்கிக் கொண்டிருக்கக் கூடாது. இது பற்றி யோசிக்கவா நேரம் எடுத்துக் கொள்வார்கள்?' என்று நமக்கு நாமே ஒரு கேவலத்தை உண்டு பண்ணி, சட்டென்று ஒரு முடிவில் பாய்கிறோம், பல சமயம்.

நேரம் அதிகமெடுத்துக் கொள்ள வேண்டாம்; ஆனால், அவைபற்றி முறையாக நாம் சிந்திக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

1. 'என்ன விரும்புகிறோம்? நமது நோக்கம் என்ன?' என்ற தெளிவு வேண்டும்.

2. 'இதைப்பற்றி இன்னும் இரண்டு நிமிடத்திற்குள் நான் முடிவு செய்தாக வேண்டும். இன்னும்

இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் நான் இதற்கு ஒரு முடிவு சொல்லியாக வேண்டும்' என்ற ஒரு காலவரையறை வேண்டும். காலவரையறை இல்லா விட்டால், நாம் முடிவெடுப்பதை ஒத்திப் போட்டுக் கொண்டே போவோம்.

3. இப்படி முடிவெடுத்தால் என்னென்ன நிகழ லாம் என்ற பல விளைவுகளையும் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும.

4. இருக்கிற ஒரு நிலைமையில், கூடுமானவரை எல்லாத் தகவல்களையும் பெற்றுத்தான் முடிவெடுக்க வேண்டும். அதற்காக மற்றோர் கடையில் சட்டைத் துணி இதைவிட நன்றாயிருக்குமோ என்று எண்ணிக் கொண்டு, கையிலிருக்கும் ஒரு சட்டைத் துணியை விட்டுவிட்டு, காணாததை நோக்கிப் பயணம் செய்யக் கூடாது.

இவைதான் பொதுவாக முடிவெடுக்கும்போது, நாம் பரிசீலிக்க வேண்டிய சில விஷயங்கள். இம்மாதிரி முடிவுக்கு வரும்போது எதற்கு நீங்கள் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறீர்கள் என்பதைப் பார்த்தால் உங்களது குணநலன் புரியும். அதாவது, ஒரு சட்டைத் துணி வாங்கும்போது அதன் ரகத்தைப் பார்க்கிறீர்களா, வர்ணத்தைப் பார்க்கிறீர்களா, அதன் விலையைப் பார்க்கிறீர்களா, அல்லது நீங்கள் இதைச் சட்டையாக நாளை அணியும்போது உங்கள் சிநேகிதிகள் என்ன சொல்வார்கள் என்று எண்ணிப் பார்க்கிறீர்களா என்பனவற்றிற்குக் கிடைக்கும் பதில், உங்கள் மனோபாவத்தைப் பற்றிச் சொல்லும்.

எனது நண்பர் ஒருவர் இருக்கிறார். ஹோட்டலில் போய் உட்கார்ந்தவுடன், "எல்லோருக்கும், இரண்டு

இட்லி, ஒரு வடை சாம்பார், தனி பிளேட்டில் கொஞ்சம் சட்னி" என்று ஆர்டர் கொடுப்பார். நான் சொல்வேன்... "கொஞ்சம் இருங்கள். எனக்காக நீங்கள் எப்படி ஆர்டர் கொடுக்கலாம்? 'தம்பீ! ஒரு மசால் தோசை, ஒரு பொங்கல், கொஞ்சம் சட்னி கொண்டு வா எனக்கு' என்பேன். சில சமயம் அவசரமாகப் போவதென்றால், ஏதோ கிடைத்ததைச் சாப்பிட்டு விட்டு ஓடவேண்டியது தான். ஆனால், அவசரமில்லாத போது, நாம் நமக்குப் பிடித்ததை ருசித்து மகிழ்ந்து சாப்பிட வேண்டாமா...?

முடிவெடுப்பதில் முன்னாள் ஜனாதிபதி கார்ட்டர் கையாண்ட விதம் சிந்தனைக்குரியது. ஒரு நோட்டும் பென்சிலும் வைத்துக்கொண்டு எல்லோருடைய யோசனைகளையும் குறித்துக் கொள்வார். அவரால் ஒரு முடிவுக்கு வரவே முடியாது. 'இப்படி எடுத்தால் இப்படித் தப்பாய்ப் போய்விடுமோ? அப்படி முடிவெடுத்தால் பிறர் இப்படிச் சொல்வார்களோ?' என்று தத்தளிப்பார். இத்தகைய எண்ணங்கள் அவருடைய முடிவுகளைப் பாதிக்கும்.

முடிவெடுப்பது என்பது இரண்டு, மூன்று வழிகளுக்குள் ஒன்றை நாம் தேர்ந்தெடுப்பது. வழிகள் ஒன்றுக்குமேல் இருக்கும்போதுதான் நாம் தேர்ந்தெடுக்க முடியும். அரிசிக்கடையில் ரேஷனாக அரிசி பெறும்போது, நமக்கு வேறு வழி இல்லை. கிடைத்ததைப் பெற்றுக்கொண்டு வரவேண்டியதுதான். இப்படி எல்லாவற்றையும் ரேஷனாக்கி, நம்மைத் நடுத் தெருவில், கியூவில் நிற்கவைக்கும் ஒரு நாட்டு நிலைமையைக் கண்டு வேண்டுமானால் மனம் கொதிக்கலாம். ஆனால் அரிசிக்கு வேறு வழி இல்லை.

ரஷ்யாவில் ஆளுங்கட்சி என்ற ஒரே ஒரு கம்யூனிஸ்ட் கட்சி இருக்கிறது. இவர்கள் செய்வது பிடிக்கவில்லையென்று மக்கள் வேறு யாரைத் தேர்ந்தெடுக்க முடியும்? சர்வாதிகாரத்தில் நமக்கு 'சாய்ஸ்' ஏதும் இல்லை. நமக்குப் பதிலாக சர்வாதிகாரி எல்லாவற்றையும் தீர்மானிக்கிறன். "தங்கள் வாழ்க்கையை தாஙகளே அமைத்துக் கொள்ள முடியாதபடி நாட்டு நிலை நிலவுமானல், மக்கள் மனக்கொந்தளிப்பு அடைகிறர்கள்" என்று ஒரு சமூக இயல் பேராசிரியர் கூறுகிறர். 'இந்தப் பக்கம் திரும்பினல் அரசாங்கம். அந்தப் பக்கம் திரும்பினல் அதிகாரிகள். வேறெரு பக்கம் திரும்பினல் போலீசார். மற்றெரு பக்கம் திரும்பினல் அரசியல்வாதிகள்' என்ற நிலை நாட்டில் நிலவும்போது மக்கள், தங்கள் சுதந்திர வாழ்க்கையைப் பறிகொடுப்பதை உணர்கிறர்கள். ஜனநாயகம் என்ற பெயரில், அரசாங்கம் நம் வாழ்க்கையை நமது ஊரில் நிர்ணயிக்கிறது. இது, ஜனநாயகமல்ல; மறைமுகமான சர்வாதிகாரம்.

'அரசாங்கமே! என் முதுகைவிட்டு இறங்கு!' என்று குரல் கொடுத்துத்தான் அமெரிக்காவின் இன்றைய ஜனதிபதி ரேகன் பதவிக்கு வந்தார். அரசாங்கக் கெடுபிடி அதிகமாகும்போது—பொது மக்கள் வாழ்க்கை பலவிதத்திலும் நெருக்கும்போது தனி மனித சுதந்திரம் பறிபோகிறது.

ஒரு முடிவெடுக்கும்போது நாம் அதன் விளைவை எதிர்பார்க்கலாம். 'இது இப்படித்தான் நேரும்' என்றும் விளைவை அனுமானிக்கலாம். ஆனல், எந்த முடிவின் போதும் விளைவு இப்படித்தான் இருக்கும் என்று அறுதியிட்டுக் கூற முடியாது. விளைவு பற்றிய நிச்சயம் ஏதும் இல்லை.

முடிவெடுப்பது என்பது சோதிடம் கூறுவதைப் போலல்ல. சோதிடர் நாம் இன்று இருக்கிற சூழ்நிலையைப் பற்றிக் கேட்டுக்கொள்வதில்லை. அவர் 'இது இப்படி அமையும்' என்று இல்லாத ஒரு நிலையை முன் கூட்டியே கூறுகிறார். முடிவெடுக்கும்போது நாம் இருக்கிற சூழ்நிலையைப் பரிசீலிக்கிறோம். ஒரு தெரிந்த நிலையிலிருந்து ஓர் அனுமான நிலைக்குப் போகிறோம். அதைத்தான் நாம் எடுக்கும் முடிவு நமக்குக் காட்டுகிறது.

விளைவு நிச்சயமில்லாதபோது, பலர் முடிவெடுக்கத் தயங்குகிறார்கள். வாழ்க்கையே ஒரு விளைவை எதிர் பார்த்து, நம்பி, செயல்படுவதுதான். படித்துத் தேற முடியும் என்றுதான் ஒரு மாணவன் கல்லூரியில் சேருகிறான். இந்த மனிதருடன் வாழமுடியும் என்று நம்பித் தான் ஒரு பெண் தன் எதிர்காலக் கணவனிடம் தலையை நீட்டுகிறாள். 'இத்தொழிலில் பிரகாசிக்கலாம்; நிறைய பணம் சம்பாதிக்கலாம்' என்று எண்ணித்தான் ஒரு வியாபாரி தொழிலைத் துவங்குகிறார்.

விளைவு என்ன ஆகுமோ என்று பயப்படுபவர்கள், காரியத்தைத் தொடங்கவே தயங்குவார்கள். ஒரு காரியத்தைத் தொடங்கவில்லையென்றால், நாம் எப்படிப் பலனை எதிர்பார்க்க முடியும்? விளைவு நிச்சயமில்லை என்று பயந்து காரியம் செய்யாமலிருக்கும்போது நமக்கு ஒரு பயனும் கிடைப்பதில்லை.

துணிந்து முடிவெடுத்து இறங்கும் போதுதான் வெற்றியடையும் சந்தர்ப்பம் இருக்கிறது. அப்படி இறங்காதபோது எந்தச் சந்தர்ப்பமும் இல்லை. மனிதன் உட்கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்திருக்கிறான்.

முடிவெடுக்கும்போது கவலைப்படுவதில் அர்த்த மில்லை. 'இந்த முடிவு எப்படி நம் எதிர்காலத்தை நிர்ணயிக்கும்? எப்படிப் பிறர் வாழ்வைப் பாதிக்கும்; இந்த முடிவு எந்த விதத்தில் நமக்கு முக்கியம்? முடிவெடுக்க? எவ்வளவு காலவரையறை கொடுக் கலாம்?' என்ற கேள்விகள் முடிவெடுப்பதற்கு முக்கியம்.

உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள். 'பத்திர மான முடிவெடுத்தேன்' என்பீர்களா? 'எனக்குப் பதில் பிறர் முடிவு செய்தார்கள்' என்று சொல்வீர்களா? 'குருட்டாம் போக்கில் ஒன்றைத் தேர்ந்தெடுத்தேன்' என்று சொல்லப் போகிறீர்களா? பிறர் எதிர்பார்ப் பதைச் செய்து முடிக்க ஆர்வம் காட்டுகிறீர்களா? முதலில் கேட்ட வழியே நல்ல வழி என்று முடிவு பண்ணுவீர்களா? இதுதான் அதிக பலன் தரும் என்று அதை எடுப்பீர்களா? காத்திருந்தால் பிரச்சினை காணுமல் போகும் என்பீர்களா? 'என்ன நஷ்டம் வரும்?' என்று நஷ்டத்தை மட்டுமே பெரிது படுத்து வீர்களா? 'இதுதான் முக்கியம். இதைத்தான் நான் விரும்புகிறேன்' என்று முடிவெடுப்பீர்களா?

நமது மனோபாவம் எப்படியெல்லாம் எண்ணு கிறது என்பதைப் பாருங்கள். அந்த விழிப்புணர்வு நல்லது. முடிவெடுக்கும்போது எப்படி முடிவெடுக் கிறோம் என்ற விழிப்புணர்வோடு செயல்படுங்கள்.

# முடிவு காணும் திறன் நம் எல்லோருக்கும் தேவை

முடிவெடுப்பது எப்படி, ஒரு விஷயத்தில் தீர்மானம் செய்வது எப்படி என்பதை மேல் நாடுகள் நிர்வாக அறிவின் (Management) முக்கியப் பகுதியாகக் கருதுகின்றன. பெரிய நிறுவனங்கள் இதைக் கண்ணும் கருத்துமாகப் பயிலுகின்றன. அவர்களின் தொழில் நிர்வாகப் பிரச்னைகளில் உபயோகப்படுத்துகின்றன. இதற்காக அதிக பணம் கொடுத்து, யோசனை சொல்லும் நிபுணர்களை,—எப்படி ஒரு பிரச்னையில் முடிவெடுக்கலாம் என்று தெரிந்து கொள்ள—சிறந்த முடிவெடுக்க— பயன்படுத்துகின்றன. நிர்வாகத்துறைப் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கும் பல பல்கலைக்கழகங்களும், 'முடிவு காண்பது எப்படி?' என்பதை ஒரு முக்கியப் பாடமாக வைத்துள்ளன. இப்பாடங்களைச் சொல்லிக் கொடுப்பவர்கள் பெரிதும் மதிக்கப்படுகிறார்கள்.

ஏனெனில், ஒரு தொழிலை—ஒரு கம்பெனியை—நிர்வகிக்கும் ஒருவர், சரியான முடிவெடுக்காவிட்டால், பல கோடி ரூபாய் நஷ்டத்தில் அது முடியும். அவர் முடிவு பல தொழிலாளிகளைப் பாதிக்கும். ஒரு கம்பெனியின் வளர்ச்சியில்—தயாரிக்கப்படும் புதிய பொருள் விற்குமா என்று அவர்கள் முடிவு எடுக்க வேண்டும். விற்கும் என்று நம்பி புதிய பொருளைத் தயார் செய்வதில் இவ்வளவு பணம் முடக்கலாமா என்று அவர்கள் தீர்மானம் செய்ய வேண்டும்;

மாற்றுக் கம்பெனிக்காரர்கள் இதைவிட வேறு ஒரு நல்ல பொருளை உடனடியாக மார்க்கெட்டுக்குக் கொண்டு வந்துவிட்டால் என்ன செய்வதென்று முடிவெடுக்க வேண்டும். தனது கம்பெனி விற்பனையாளர்களுக்குப் புதிய பொருளில் நம்பிக்கை யிருக்கிறதா என்று பரிசீலிக்க வேண்டும். இப்படி நாள்தோறும், ஆண்டுதோறும் சிறிய பிரச்னை—பெரிய பிரச்னை என்று பல விஷயங்கள் முடிவெடுக்கப்பட தலைமை நிர்வாகியின் மேஜைமீது காத்திருக்கின்றன.

அமெரிக்க ஜனாதிபதி ஹேரி டூருமன், தனது மேஜை மீது, 'எல்லாப் பணமும் ஓடிவந்து இங்குதான் நிற்கிறது' (Buck stops here) என்ற பொருள்பட எழுதி வைத்திருந்தார். அதாவது, எந்த யோசனை எத்தனை கைமாறினாலும், கடைசியில் முடிவெடுக்கும் பொறுப்பு ஜனாதிபதியினுடையது என்ற கனமான பொறுப்பைத் தனக்கும் பிறருக்கும் உணர்த்தும் வாசகம் அது.

பல விஷயங்களில் நாமே எல்லாவற்றிற்கும் முடிவெடுத்துக் கொண்டிருக்க முடியாது. நமக்கும் கீழுள்ளவர்களிடம் நிர்வகிக்கும் பொறுப்பை விட்டு விட வேண்டும். அதை அவர்கள் தவருக நிர்வகித்தாலும் பொறுப்பு, தலைவனுடையதுதான். ஜான் கென்னடி பதவிக்கு வந்ததும் கியூபாவின் மீது படைகளை ஏவினர். அதைச் செய்தவர்கள், நிறைவேற்றியவர்கள், யோசனை சொன்னவர்கள் எல்லோரும் தேர்ந்தெடுத்த, அனுபவமிக்க ராணுவத் தளபதிகள். ஆனலும், படையெடுப்பு தோற்றுப் போய்விட்டது. ஜான் கென்னடி "இந்த முட்டாள் தளபதிகளினல்தான் கெட்டேன்" என்று கூறவில்லை. "கியூபா படையெடுப்பு என் தவறு!" என்று பகிரங்கமாகப் பொறுப்பேற்ருர். மற்ரேர் சிறிய மனிதன்,

தனக்கு யோசனை சொன்ன கீழேயுள்ள மனிதனைப் பழி வாங்கியிருப்பான்.

எல்லாவற்றையும் தாங்களே செய்ய விரும்பு பவர்களெல்லாம், நூறு சதம் சரியாக நடக்கவேண்டு மென்ற பூரணத்துவத்தை எதிலும் எதிர்பார்க்கும் ஆத்மாக்கள். பூரணத்துவம் என்பதை அடைய முயலலாமே தவிர, எல்லாவற்றிலும் அடைய முடியாது. வாழ்வில் அதற்கு நேரமில்லை. சம்பவங்கள் வரவர, அதற்கேற்றாற்போல, காரியங்களாற்றிக் கொண்டு, நாம் போய்க் கொண்டே இருக்க வேண்டும்.

எல்லாவற்றையும் தாங்களே முடிவெடுக்க வேண்டுமென்று எண்ணுபவர்கள், சந்தேகப் பிராணிகள். பிறர் செய்தால் தவறு வந்துவிடுமோ, நம்மைக் காலைவாரி விட்டுவிடுவார்களோ, காட்டிக் கொடுத்துவிடுவார்களோ என்று பயப்படுபவர்கள் அவர்கள். சுருக்கமாகச் சொன்னால், தலைமைப் பதவிக்கு அருகதை இல்லாதவர்கள். இப்படிப்பட்ட வர்கள் கம்பெனி நிர்வாகத்தில் அதிக நாள் தாக்குப் பிடிக்க முடிவதில்லை.

அதேபோல், கம்பெனி நிர்வாகம், அரசாங்க நிர் வாகம், குடும்ப நிர்வாகம் என்று முடிவெடுக்கும்போது, ஒரு பெரும் போக்கான கண்ணோட்டத்தில்தான் நாம் முடிவெடுக்க வேண்டும். நிகழும் எல்லாவற்றையும் அதனதன் இடத்தில் வைத்துப் பார்க்கும் ஒரு பரந்த மனப்பான்மை தேவை. அப்படிப்பட்டவர்களை ஜெனர லிஸ்ட் (generalist) என்கிறார்கள். அப்படியில்லாமல், எல்லாவற்றிற்குள்ளும் உள்ளே நுழைந்து, 'என்ன நீளம், என்ன அகலம், எத்தனை சென்டிமீட்டர்' என்று நுணுகி நுணுகி ஆராய்பவன் பெரிய பதவி களில் தலைவனாக இருக்க முடியாது. அவன் நுணுகி

ஆராய்பவன் (specialist). அவனுல் விஷயங்களை ஒட்டு மொத்தமாகப் பார்த்து, அதன்மீது ஒரு மதிப்பிட்டு முடிவெடுக்க முடியாது. அவன் தனது துறை அனுபவத்தை வைத்தே எல்லா விஷயங்களையும் பரிசீலிக்கிருன். அதனுல் தான் அமைச்சரவையில் 'விஷயம் தெரிந்தவர்'களை அமைச்சர்களாகப் போடு கிருேம். முடிவெடுக்க வேண்டியதுதான் அவர்கள் தொழில். அதாவது, நல்ல முடிவு. அவர்கள் நிபுணர்களாக இருக்கத் தேவையில்லை. அந்தந்தத் துறையிலும் யோசனை சொல்ல, நிபுணர்கள் பலர் அவருக்குக் கீழ்க் காத்துக்கொண்டிருக்கிருர்கள்.

நமது ஊரிலுள்ள மிகப் பெரிய குறைபாடு என்ன வென்ருல், சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அவர் களின் உரிமை, அவர்களின் எல்லை, அவர்களின் பொறுப்புப் பற்றியெல்லாம் விளக்கி, புரிய வைத்து, சொல்லிக் கொடுத்து அவர்களிடமிருந்து நாம் வேலை வாங்குவதில்லை. ஏதோ தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள்; கட்சி முத்திரை, பேசத் தேரிந்த அனுபவம், ஒரு நாலு பேருக்குள் சற்று தனித்து நிற்கும் துணிச்சல், இவை ஒரு மனிதனைத் தலைவனுக்கி விடுகிறது.

சட்டசபை உறுப்பினர்களுக்கு, அவர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டவுடன் ஓர் இரண்டு வார கட்டாயப் பயிற்சி அளித்தால், அவர்களும் பலனடைவார்கள்; நாடும் பலன் பெறும். சட்ட சபைகளிலும் ஒரு கண்ணியம்—நல்ல நெறி முறைகள்—நிலவும். சட்ட மன்ற உறுப்பினர்களே இதைச் சிந்தித்துப் பார்த்து, இப்படி ஒரு பயிற்சியை கட்டாயமாக்க வேண்டும் அதே போல், அமைச்சர்களும் தங்களுக்குள்ள உரிமை கள், பொறுப்புகள், அவர்களது எல்லை பற்றிய தகவல் களை அறிந்திருந்தால்தான், சரியான முடிவெடுக்க

முடியும். இல்லாவிட்டால், ஒன்று, அவர்கள் அதிகாரியைச் சார்ந்து நிற்கும் நிலை ஏற்படுகிறது; அல்லது, முதல்வரிடம் எல்லாவற்றிற்கும் முடிவு பெறும் நிலை ஏற்படுகிறது.

இதனால் இழப்பு அமைச்சர்களுக்கு மட்டுமல்ல; நாட்டுக்கும்தான். சரியான முடிவெடுப்பது எப்படி என்ற 'செமினார்'கள் (seminars) பாடம் புகட்டும் விவாதங்கள்—பெரிய கம்பெனி நிர்வாகிகள் முதல், சாதாரண குடும்பப் பெண் வரைக்கும் மேல் நாடுகளில் நடத்தப்படுகின்றன. அதனால் எல்லோரும் பயனடைகிறார்கள். ஒரு தனிமனிதன் பயனடையும்போது, ஒரு தொழில் நிர்வாகி பயனடையும்போது, நாடு பயனடைகிறது.

ஜப்பானிய சாகுபடி முறை நல்லது என்று நாம் அதைப் பின்பற்றுகிறோம்; அமெரிக்காவின் கம்ப்யூட்டர் தொழில் வளர்ச்சியைப் பார்த்து, அதைப் பின்பற்ற முயல்கிறோம். மனிதனை வளர்க்கும் அடிப்படை அறிவான (decision making process) முடிவு காணும் திறன்பற்றி, ஏன் நம் அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், அரசாங்க அதிகாரிகள் படிக்கக் கூடாது? இப்படியெல்லாம் செய்யாவிட்டால் நாம் எப்படி முன்னேறப் போகிறோம்? நாம் எடுக்கும் முடிவு நல்லதாக—சரியானதாக—இருந்தால்தானே நாடு முன்னேறும்? டெல்லி, பம்பாயில் கூட இத்தகைய விஷயங்கள் பேசப்படுகின்றன; இத்தகைய 'செமினார்'கள் நடத்தப்படுகின்றன. சென்னையோ, சுத்த பட்டிக்காடாகத் தோன்றுகிறது. நாம் ஏதோ சிறு சட்டிக்குள், சிறு குட்டைக்குள் குளித்துக் கொண்டு, சேற்றை பூசிகொண்டு, 'என்னே தமிழ் மணம்' என்று சொல்லிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறோம்.

நம்மிடம் கனிப்பொருள், நிலவளம், நீர்வளம் இல்லாமல் இல்லை. அதையெல்லாம் எப்படி உபயோகிப்பது என்ற சரியான அறிவு நமக்கு வேண்டும். நிலவளம், நீர்வளம் இல்லாத ஜப்பானும், சிங்கப்பூரும், இஸ்ரேலும் எதை வைத்திருக்கின்றன? நாட்டில் இருக்கும் மக்கள் தொகையை—மக்கள் திறமையை—சரியான வழியில் ஈடுபடுத்துவதன் மூலம், பெரும் வல்லரசுகளுக்கு சமமாக அவை வளர்ந்து வருகின்றன.

எல்லாவற்றிற்கும் மூலகாரணம், நமது சிந்தனை, நமது யோசனை. இருப்பவற்றை வைத்துக் கொண்டு, எப்படிப் பிரமாதமாக செய்யலாம் என்ற சிந்தனை. சரியாக முடிவெடுக்கும் திறனில்தான் நமது வெற்றி—தோல்வி அமைந்திருக்கிறது.

மக்கள் தொகையை, மக்கள் திறனாக நாம் கருத வேண்டும். மக்கள் திறனை சரியானபடி பாகுபாடு செய்து பயன்படுத்த நாம் அறிய வேண்டும். முடிவில் பார்க்கும்போது, ஒரு நாடு முன்னேறுவதும், தேங்கி நாற்றமெடுப்பதும் அந்நாட்டு மக்களின் மனத்திறனில் இருக்கிறது. அந்த நீரோட்டத்தை சரியானபடி பயன் படுத்தும் தலைவனின் மனத்திறத்தில் இருக்கிறது என்பது புலனாகும். தலைவன் என்னும்போது, நாட்டின் அரசியல் தலைவனை, அரசியல் தலைவியை மட்டும் நான் குறிப்பிடவில்லை. நாட்டின் பல்வேறு நிலையிலுள்ள பல்வேறு துறைத் தலைவர்களையும்தான் குறிப்பிடுகிறேன்.

மேனாட்டில் பள்ளிக்கூடத்தில்கூட அது பயிலப் படுகிறது என்றால், நாம் ஏன் தெரிந்து கொண்டு நமது வாழ்க்கையை—நாட்டு வாழ்க்கையை—முன்னேற்றக் கூடாது?

## முடிவெடுக்க ஒரு சிந்தனைப் பாதை

ஒரு முடிவெடுக்கும்போது அவற்றில் எது அதிகக் கஷ்டமில்லாதது, பாதுகாப்பானது என்று ஒரு முடிவை நாம் தேர்ந்தெடுக்கக்கூடாது. மாறாக, எந்த முடிவினால் நமக்கு நிறையப் பயனுண்டு, எந்த முடிவெடுத்தால் நாம் விரும்பும் லட்சியத்தை அடையலாம் என்பதையொட்டி முடிவெடுக்க வேண்டும்.

முடிவெடுப்பதில் சில வழிமுறைகள் இருக்கின்றன. அந்த வழிமுறைகளைப் பின்பற்றினால், நாம் பல விஷயங்களையும் சீர்தூக்கிப் பார்க்க முடியும். எதிர்பாராத விளைவினால் பின்னால் பெரிய ஏமாற்றத்தைத் தவிர்க்கலாம். இந்த வழிமுறைகளை உபயோகித்து, நாம் சொந்த வாழ்க்கைப் பிரச்னைகளுக்கு முடிவு காணலாம்; தொழிலில் சரியான முடிவெடுத்து முன்னேறலாம்; பொது வாழ்க்கையில், சரியான முடிவெடுப்பதன் மூலம் பல நன்மைகள் விளையச் செய்யலாம்.

முடிவெடுப்பது என்பது நமக்குக் கிடைத்துள்ள வாய்ப்பு; ஒரு சந்தர்ப்பம். வாழ்க்கையை நாம் விரும்பும் வண்ணம் அமைக்க நம் கையில் உள்ள ஓர் ஆயுதம். இருக்கிற நிலைமையை உணர்ந்து, அதிலிருந்து நாம் விஷயங்களைத் தீர்மானிக்கிறோம். நமது நிஜ வாழ்வில் இது பயன்படக்கூடிய அறிவு. முடிவெடுக்கும்போது பல விஷயங்களை நாம் பரிசீலிக்கவேண்டியதிருக்கிறது. எல்லாவற்றிற்கும் பொதுவான ஒரு வைத்தியம் கிடையாது. ஒவ்வொரு பிரச்சினையும் ஒவ்வொரு மாதிரி; ஒவ்வொன்றும் மாறுபட்டவை.

வாழ்வில் நமக்கு விளையப்போகும் நன்மைகள், நம் முயற்சியால், நம் முடிவுகளால் விளைபவை என்ற தெளிவு நம்மிடம் சதா இருக்கவேண்டும். சகஜமாக, நாம் பயப்படுகிற அளவுக்கு, விஷயங்கள் மோசமாக இருப்பதில்லை; அவ்வளவு மோசமாகப் போய் விடுவதில்லை. முடிவெடுக்கும் சமயம், நாம் சில பயங்களைப் பெரிது படுத்துகிறோம். இதனால் நமக்கு இருக்கும் சாதகமான சூழ்நிலைகளைப் பற்றிய ஒரு பாரபட்சமற்ற கணிப்பைப் போட முடிவதில்லை.

ஒரு விஷயம் பற்றிய சகல விஷயங்களையும் தெரிந்து கொண்டுதான் முடிவெடுப்போமென்றால், அதற்கு வாழ்நாள் போதாது. முடிவெடுக்கும்போது முக்கியமாக நாம் கவனிக்க வேண்டிய விஷயம்: 'இது எவ்வளவு தூரம் என் தன்மானத்தைப் பாதிக்கும்? என் கொள்கைகளுக்கு ஏற்றதாக இருக்கிறது?' இப்படி முடிவு செய்வதன் மூலம் 'என்னைக் கொள்கையில்லாதவன், நாணயமில்லாதவன்' என்று நாலு பேர் நாளை சொல்வார்களா? வாழ்க்கையில் எதை நான் பெரிதும் போற்றுகிறேன்? நான் போற்றும் விஷயங்களுக்கு எதிராக இருக்கிறதா நான் எடுக்கும் முடிவு?— இது பற்றி நாம் நிறைய சிந்திக்க வேண்டும்.

சில சமயம், சில முடிவுகள், காலத்திற்கேற்ப மாறும். சின்ன வயதில் நீங்கள் பெரிதாக நினைத்த விஷயம், பெரியவனானதும் அதன் முக்கியத்துவத்தை இழந்திருக்கும். அதே போல, சமூகச் சூழ்நிலையில் இன்று நிலவும் 'அபிப்பிராயக் காற்று' நாளை இதே போல் இருக்காது. ஆகவே, நமது முடிவுகள் காலத்திற்கேற்ப, நம் வயதிற்கேற்ப, நம் தேவைக்கேற்ப மாறக் கூடியவைதான். இதுபற்றி நாம் வெட்கப்படத் தேவையில்லை.

ஒரு முடிவு செய்ய முன்வரும்போது நம் லட்சியம் என்ன, இதன் மூலம் எதை அடைய விரும்புகிறோம் என்பதைப் பற்றிய தெளிவு மிக அவசியம். இல்லாவிட்டால் பருப்பில்லாத கல்யாணமாக, மணமகளில்லாத சாந்தி முகூர்த்தமாக முடிந்துவிடக் கூடும். உபயோகமற்ற வேறு பலவற்றின் பின்னல் நாம் போய்க் கொண்டிருப்போம்.

முடிவெடுக்கும்போது விஷயங்கள் அத்துடன் முடிந்துவிடுவதில்லை. அதன் விளைவுகள்—பலன்கள் இருக்கின்றனவே, அவற்றுக்கும் நாம்தான் பொறுப்பு. இந்த முடிவின் பலனாக நமது மாற்றுவழிகள் கூடப் பாதிக்கப்பட்டிருக்கும். நமது முடிவினால் ஏற்படும் விளைவுகளை நாம் ஏற்க அல்லது மாற்றத் தயாரா யிருக்க வேண்டும்.

முடிவெடுப்பது எதைத் தெரிவிக்கிறது?

நம் வாழ்க்கை, நம் கையில் இருக்கிறது என்பதை; அதை நாம் விரும்பும் வண்ணம் அமைக்கலாம் என்பதை. நம் வாழ்க்கையைப் பற்றி நமக்கு அக்கறை இருக்கிறது என்பதை. ஏனெனில், நாம் எடுக்கும் முடிவுகள், தீர்மானிக்கும் விஷயங்கள், நம் வாழ்வின் திசையைத் திருப்புகின்றன. சரியான திசையில் நம் வாழ்வைச் செலுத்துகின்றன.

முடிவெடுப்பதற்குச் சில வழிமுறைகள் உள்ளன. அவற்றை இப்போது காண்போம். உங்கள் வாழ்க்கையில்—தொழிலில்—வேலை பார்க்குமிடத்தில் உள்ள ஒரு முக்கியமான பிரச்சினையை மனதில் எடுத்துக் கொள்ளுங்கள். பின், கீழ்க்காணும் வழிமுறைகளை உங்கள் பிரச்சினையுடன் இணைத்துச் சிந்தியுங்கள்.

முடிவெடுக்கும் வழிமுறைகளை, பெரும்போக்காக ஐந்து பெரும் பிரிவுகளாக சமூக இயல் அறிஞர்கள் பிரித்திருக்கிறார்கள். அவை...

**(1) சூழ்நிலை (2) நமது லட்சியம் (3) மாற்று வழிகள் (4) மாற்று வழிகளால் விளையும் பலனும் கஷ்டங்களும் (5) எடுத்த முடிவைச் செயல்படுத்துவது.**

சூழ்நிலை

'என்ன பிரச்சினை நம் முன் இருக்கிறது? ஏன் அது பிரச்சினையாக வந்து நிற்கிறது?' என்ற மூல காரணங்களை நாம் புரிந்துகொள்ள வேண்டும். என்னென்ன மாற்று வழிகள் நமக்கு இருக்கின்றன என்று ஆராய வேண்டும். 'எந்த விதத்தில் பிறர் அபிப்பிராயம், நம் முடிவைப் பாதிக்கிறது? எந்த வகையில் மாறிவரும் சூழ்நிலை நம் முடிவைப் பாதிக்கும்?' என்று யோசிக்க வேண்டும். 'இதில் பயப்பட என்ன இருக்கிறது? சூழ்நிலையும் புற மனிதர்களும் ஏற்படுத்தும் நெருக்கடி என்ன?' என்று நாம் சிந்திக்க வேண்டும். எவ்வளவு தூரம் இதில் அதிர்ஷ்டத்தின் பங்கு உண்டு? எத்தனை நாளைக்குள் நான் இந்த முடிவை எடுக்க வேண்டும்?—இவை போன்ற கேள்விகள், நமக்குச் சூழ்நிலையைப் பற்றிய ஒரு பரந்த அறிவைக் கொடுக்கின்றன.

லட்சியம்

எனது குறுகிய கால லட்சியம் என்ன? நீண்டகால லட்சியம் என்ன? எந்த வகையில், இந்த முடிவு எனது லட்சியங்களுக்கு உறுதுணையாக நிற்கிறது?

எனது திறமைகள் என்ன? பலவீனங்கள் என்ன? எந்தவிதக் குண நலன்களால் நான் மற்றவர்களிட

மிருந்து தனித்து நிற்கிறேன்? எனது தன்மான உணர்வுகள் என்ன? நான் போற்றும் கொள்கைகள் எனது இந்த முடிவால் தாழ்த்தப்படுகின்றனவா அல்லது உயர்த்தப் படுகின்றனவா? இந்த முடிவினுல் என் லட்சியத்தை அடைய என்னென்ன தடைகள் உள்ளன?

மாற்று வழிகள் :

வேறெந்த வழிகளில் இப்பிரச்சினையைச் சமாளிக்க முடியும்? இதுபற்றி முடிவெடுக்க இன்னும் என்ன விஷயங்கள் எனக்குத் தெரிந்திருக்க வேண்டும்? அதற்காக நான் யாரைப் பார்க்க வேண்டும்? என்ன ஆராய்ச்சி செய்து விஷயங்களைக் கண்டுபிடிக்க வேண்டும்?

பலன்கள் :

மாற்று யோசனைகளைக் கடைப்பிடித்தால் என்ன விளைவுகள் நேரும்? எவ்வளவு தூரம் இவை அனுபவ சாத்தியம்? எவ்வளவு தூரம் இவை நாம் விரும்பும் பலனைக் கொடுக்கும்? சாத்தியக்கூறும் லட்சியமும் எவ்வளவு தூரம் இணைந்து நிற்கின்றன? என்ன நஷ்டம் வந்தாலும், எவ்வளவு பேர் தூற்றினுலும் நான் இம் முடிவைப் பின்பற்றலாமா?

செயல் :

இதில் எது சிறந்த முடிவு? ஏன் அச்சிறந்த முடிவைப் பின்பற்றத் தயங்குகிறேன்? எனது முடிவு தவருகப் போனுல் விபரீதம் விளையுமா? அதை மாற்ற முடியுமா? அதற்குப் பின்னும் வேறு ஒரு முடிவுக்கு மாறிக்கொள்ள, காலம் தாழ்ந்துவிட்டதா? விளைவு, நஷ்டத்தில், தோல்வியில் போய் முடியுமென்ருல்

எப்படிச் சமாளிக்கலாம்? வேறு என்ன மாதிரியாக நான் முடிவெடுத்திருக்க வேண்டும்?

முடிவெடுப்பது, ஒரு சிந்தனை முறை. இதில் பல விஷயங்களையும் நாம் பரிசீலிக்கும்போது பல புது விஷயங்கள் நமக்குப் புலப்படுகின்றன.

'வேறு வழி இல்லாமல் இல்லை, மாற்றுவழிகள் உள்ளன' என்ற நம்பிக்கை ஏற்படுகிறது. சூழ் நிலையும் பிற மனிதர்களும் எப்படி நம்மை நெருக்கு கிறார்கள் என்று புரிகிறது. நமது திறமை...பலவீனம் பற்றிய மதிப்பீடு. நமது ஆசைபற்றிய தெளிவு, பல மாற்று வழிகளையும் சீர் தூக்கிப் பார்க்கும் திறன், முடிவெடுப்பதில் நமக்குள்ள உரிமை—நம் விஷயத்தில் நாம்தான் தலைவன் என்ற பெருமை. நமது முடிவு களின் விளைவுகளுக்கு நாம்தான் பொறுப்பு என்ற ஒரு நிலைமைகளை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் இவ்வளவு இருக்கின்றன.

முடிவெடுப்பது நம்மில் துவங்குகிறது. நாம் தான் செயல்களின் துவக்கம். நமது ஒரு முடிவின் மூலம் நமது வாழ்விலும், சூழ்நிலையிலும் பலவித மாற்றங்களைத் தோற்றுவிக்கிறோம்.

'இந்தியாவை இந்தியர்களே ஆளவேண்டும்' என்று காந்தி எடுத்த 'முடிவு' சாதிகளில் உயர்வு—தாழ்வெல்லாம் மனிதன் ஏற்படுத்தியவை என்று பெரியார் எடுத்த முடிவு; இந்தியாமீது படையெடுக்க அயூப்கான் செய்த முடிவு—இப்படி தனி மனிதர்கள் எடுத்த முடிவுகளையும் சீர் தூக்கிப் பாருங்கள்; பல விஷயங்கள் புலனாகும். பின்னோக்கிப் பார்க்கும்போது, 'சரி—தவறு எது?' என்ற தெளிவுடன் பரிசீலிக்க முடியும்.

நம் வாழ்க்கை நம்மிடம்தான் துவங்குகிறது. நமது உணர்வுகள், நமது கொள்கைகள், நமது அனுபவம், நமது மனோபாவம்—இவற்றின் விளைவாகத்தான் ஒரு முடிவு பிறக்கிறது. சொல்லப் போனால், நம் குணாதிசயங்களை நாம் எடுக்கும் முடிவு பிரதிபலிக்கிறது.

உங்கள் வாழ்க்கையில் உள்ள மிகப் பெரிய பிரச்சினை ஒன்றை அல்லது நாட்டுப் பிரச்சினை ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள். இந்த ஐந்து பகுதியிலுள்ள ஒவ்வொரு கேள்விக்கும் பதிலளியுங்கள். ஒரு தாளில் உங்கள் பதிலை எழுதிப் பாருங்கள். கடைசியில் உங்கள் முடிவை எழுதுங்கள்.

உங்கள் மனத்திற்குப் பயிற்சி தந்து உங்களைத் தயார்படுத்திக்கொள்ள இதைவிட அருமையான பள்ளிக்கூடம் ஏதும் இல்லை.

# நமது முடிவும் வாழ்க்கையும் நமது பொறுப்பு...

"நாட்டுக்கான விஷயங்களை எழுதுகிறீர்களே, இது யார் காதில் உறைக்கப் போகிறது? இதை விட்டுவிட்டு, தனி மனிதனுக்குப் பயன்படும் விஷயங்களை—அவனுக்குத் தேவையான அளவில்—ஏன் எழுதக் கூடாது?" என்று ஒரு வாசகர் கடிதம் எழுதியிருக்கிறார்.

"அன்புடையீர்! நீங்கள் 'தனி மனிதனுக எடுக்கும் முடிவு உங்களைப் பாதிப்பதோடு, அதிக பட்சம், உங்கள் குடும்பத்தைப் பாதிப்பதோடு நின்றுவிடுகிறது. ஆனால், நாட்டைப்பற்றி நம் தலைவர்கள் எடுக்கும் முடிவு—அல்லது எடுக்காத முடிவு—நம் எல்லோரையும் பாதிக்கிறது. உதாரணமாக வீராணம் ஏரியிலிருந்து தண்ணீர் கொண்டுவரும் திட்டமோ அல்லது மாற்றுத் திட்டமோ, தமிழ்க் குடிமகன் வரியாகக் கொடுத்தானே பைசா பைசாவாக—சுருட்டு வாங்கும்போதும், சினிமா பார்க்கும் போதும், துணி வாங்கும்போதும்—அதிலிருந்து வரும் பணம்; கோடிக் கணக்கில் போடப்படும் திட்டம். அது நமது குடிநீரை மட்டும் பாதிக்கவில்லை; நமது செலவிடும் சக்தியையும் பாதிக்கிறது.

அதேபோல் கல்வியை எடுத்துக் கொள்ளுங்கள். நாம் செய்யாமலிருப்பதன் மூலம்—நாம் எடுக்காத

முடிவுகளின் மூலம்—நமது எதிர்காலச் சந்ததியினரை எப்படிப் பாழ்படுத்துகிறோம் என்று பாருங்கள்.

நாம் நல்லெண்ணத்தில்—நல்ல நோக்கில்—காய்தல்—உவத்தலின்றித்தான் கூறுகிறோம். ஆனால், உண்மையில் இன்றிருக்கும நிலைக்காக நான் ஏதும் கூறுவதில்லை. நாளை வரப்போகும் அடுத்த தலைமுறை-இதற்கு அடுத்த தலைமுறை—இருக்கிறதே, அவர்கள் காதில் படவேண்டும்; இது அவர்கள் நெஞ்சில் நிறைய வேண்டும்; நாளை புது நாள் மலரும் என்ற நம்பிக்கையில்தான் எழுதுகிறேன்.

படித்தவர்களின் கையில், விஷயம் தெரிந்தவர்களின் கையில், அரசியல்வாதிகளின் கையில்—பெரும்பான்மையான ஏழை மக்களின் வாழ்க்கை ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. உலகம் புரியாத அவர்கள் 'பொழுது விடியும்' என்று நம்பி ஓட்டுப் போடுகின்றனர். அந்தச் சமுதாயக் கடமையை நம்மில் ஒவ்வொருவரும் உணரவேண்டுமென்ற நோக்கில்தான் இவை எல்லாம் எழுதப்படுகின்றன. சமுதாய நலன் என்பது மொத்த நலன். ஆனால், அங்கே சில ஊர்கள் மட்டும், சில சாதிகள் மட்டும், சில மனிதர்கள் மட்டும், சில செல்வாக்குப் படைத்தவர்கள் மட்டும் தான் வசதியாக வாழ்க்கை நடத்த முடியுமென்றால், நாம் சமதர்மப் பாதையில் நடக்கவில்லை, நாட்டை அதர்மப் பாதையில் அழைத்துச் செல்கிறோம் என்று அர்த்தம்.

நமக்கு சமுதாயப் பொறுப்பு வேண்டும். டாக்டர் மு. வ., "தமிழனுக்கு சமுதாய—தொகுதி—மனப்பான்மை கிடையாது" என்று எழுதுவார். நான் தனிமனிதனாக, பலரை மிதித்து முன்னேறிவிட முடியும். ஆனால் அதுவா வாழ்க்கை...? நான்

என்னைப் பற்றிக் கவலைப்படுமளவுக்கு, ஏழையாக கிராமத்தில் வழியறியாது வாழும் தமிழ் மகனை யும் பற்றி அக்கறைப்படாவிட்டால்—அவனுக்காக ஏதேனும் நான் செய்யவில்லையென்றால்—என்ன சுயநல வாழ்க்கை அது!

"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்!" என்றார் ஜோதி கண்ட வள்ளலார் ராமலிங்க அடிகள்.

நீங்கள் என்ன சொல்வீர்கள்? "ஐயா! வள்ளலாரே! வாடிய பயிருக்கு நீங்கள் என்ன செய்ய முடியும்? போய் உங்கள் வேலையைப் பாருங்கள்!" என்று சொல்வீர்கள்? நானோ, ஒரு நாள்வர வேண்டும், 'வாடிய பயிரைக் காணும்போது, ஒரு செம்புத் தண்ணீர் கொண்டு ஊற்றுவேன். பகீரதத் தவம் செய்து வானை வரவழைப்பேன்' என்ற உள்ளப் போக்கு, அந்த அக்கறை, மனத்திட்பம் நமக்கு வேண்டும். நாம் ஊமையாயிருந்தது போதும்; ஒதுங்கி நின்றது போதும்; கொடுமைகளுக்கு—நாம் சாட்சியாக இருந்தது போதும்!

டாக்டர் மு.வ. கூறினாரே, அந்தத் 'தொகுதி மனப் பான்மை' கொள்வோம். 'உலகில் நியாயமான உணர்வு களை எதுவும் செய்ய முடியாது. அத்தகைய தார்மீக உணர்வுகளின் விளைவாகத்தான் பூமியில் மழை பெய் கிறது' என்று எழுதினேன்.

நண்பர் கேட்ட கேள்வியால் ஒரு முடிவெடுக்க வேண்டிய நிலை இருக்கிறது. அதைத் தீர்மானிப் பதற்கு நமக்கு, வாழ்க்கை—சமுதாயம்—என்ற பரந்த அறிவும்—பரந்த மனப்பான்மையும் தேவைப்படு கின்றன. நம் முன்னேயுள்ள வழிகள், 'நான் என்னைப்

பற்றிக் கவலைப்பட வேண்டுமா? அல்லது ஊரைப் பற்றிக் கவலைப்பட வேண்டுமா?' என்பவையே. 'ஊரில்தான் நான் அடங்கியிருக்கிறேன்' என்பதே நம் முடிவு.

குடும்பத்திற்கு வருவோம். 'மேலே படிக்கப் போவதா வேண்டாமா? போனால் எங்கே போவது? திருமணமென்றால் உறவுக்குள்ளேயா, வெளியிலா? படித்து முடித்தவுடன் வேலை தேடுவதா, சுயமாகத் தொழில் செய்வதா?' என்று வாழ்க்கைப் பிரச்சினைகள் நம்மைத் தாக்குகின்றன.

நமது ஊரில் என்ன நடக்கிறதென்று பாருங்கள். இளம் பெண் ஒருத்திக்காக ஒரு முடிவை அவள் அப்பா, அம்மா அல்லது அத்தை, தாத்தா, பாட்டி, அண்ணன் என்று பலர் எடுக்கிறார்கள்.

'உள்ளூரிலேயே எல்லாம் படிக்கட்டும்' என்கிறார் தாத்தா.

'பெண் படிச்சு மேலே என்ன செய்யப் போகிறாள்? யாரிடமாவது இழுத்துக்கொடுக்க வேண்டியதுதானே? வீணாக ஏன் நாளைக் கடத்திக்கிட்டு?' என்கிறார் வீட்டோடு இருக்கும் அத்தை.

'பெண் மேலே படித்து என்ன செய்யப் போகிறாள்?' —இதுவெறுமே அத்தையின் பேச்சல்ல. சமுதாய மனோபாவம் அங்கே பேசுகிறது. இன்னும் கேளுங்கள். 'யாரிடமாவது இழுத்துக் கொடுக்க வேண்டியது தானே?' பெண்ணைத் தரதரவென்று இழுத்துக் கொண்டுபோய், 'இவன் தேவலாம், இவனுடன் குடும்பம் நடத்து' என்று கொடுக்கப் போகிறார்கள்.

'பெண் என்பவள் ஒரு சுமை. ஒருவன் கையில் கொடுத்துத் தலை முழுகவேண்டும். இல்லாவிட்டால்

ஊரில் கெட்ட பெயர்.' இதுவும் சமுதாய மனோபாவம் தான். அத்தை என்ற உருவத்தில் இங்கே சமுதாயம் பேசுகிறது.

நமது வாழ்க்கையில், பிறர் யோசனை கூறலாமே தவிர, நமக்காக முடிவெடுக்கக் கூடாது. நாம் இம் முறை முடிவெடுத்து, அது தவருகப் போனாலும், அடுத்தமுறை முன் அனுபவத்திலிருந்து பலன் பெறுவோம். அடுத்த முறை சற்று மேம்பாட்டுடன் முடிவெடுக்கும் சாத்தியம் உண்டு. ஆனால், பிறர் நமக்காக முடிவெடுக்கும்போது நாம் அவர்களைச் சார்ந்து நிற்கிறோம். நாம் ஏதும் பயிற்சி பெறுவதில்லை.

மேலும், இது நமது வாழ்க்கை; நமது பொறுப்பு. பெற்றோர், உற்றார்—உறவினர்களுக்கு நம்மீது கரிசனம் அக்கறை உண்டு; இல்லை என்றும் யாரும் சொல்லவில்லை. ஆனால், அவர்கள் யோசனைகளை யெல்லாம் கேட்டு, முடிவெடுக்க வேண்டியது நம் பொறுப்பு. நமது பொறுப்பை எப்போது தட்டிக் கழிக்கிறோமோ அப்போது பொறுப்பைச் சமாளிக்கும் அனுபவத்தையும் நாம் இழக்கிறோம்.

என் நண்பன் கூறினான்...“ஆபீசில் ஒரு சிக்கலான விஷயம். வீட்டில் மனைவியுடன் கலந்து பேசிக் கொண்டிருந்தேன். பேசிக்கொண்டே போகப் போக, அவள் ‘நான் செய்வது தவறு' என்றும், ‘இப்படித்தான் செய்யவேண்டும்' என்றும் நிர்ப்பந்தித் தாள். நான் நிதானமாக யோசித்துப் பார்த்தேன்.

‘உங்களுக்காகவும் தெரியாது. பிறத்தியார் சொன்னாலும் புரியாது' என்று என் தன்மானத்தில் வேறு அடித்தாள். நிதானமாக, நான் அவளிடம்

கூறினேன்: 'இது ஆபீஸ் விஷயம்;என் விஷயம். நான் உன்னுடன் பேசியபோது உன் யோசனையைத்தான் கேட்டேன். நீ உன் யோசனையைச் சொல்லிவிட்டாய். மற்றபடி நீ நிர்ப்பந்திக்கக் கூடாது. உன் யோசனைக்கு நன்றி.'

'முடிவெடுப்பது என் பொறுப்பு. நான் அதைச் செய்வேன். இன்று நான் தவருக முடிவெடுத்தாலும், அடுத்த முறை சரியாக முடிவெடுக்கக் கற்றுக்கொள் வேன். ஆனுல், உன் முடிவை நான் ஏற்றுக்கொள்வ தென்ருல், அடுத்தமுறை பிரச்னை வரும்போது நான் ஆபீசைவிட்டு உன்னைத் தேடி வீட்டுக்கு ஓடிவரவேண் டும். என்னை வளரவிடு' என்று. "இப்படியெல்லாம் வக்கணையாகப் பேசக் கற்றுக்கொண்டிருக்கிறீர்கள். அதிலொன்றும் குறைச்சலில்லை'' என்று அவன் மனைவி, முகத்தில் இடித்துக் கொண்டாளாம்!

நமது ஊரில், நாமே பிறருக்காக முடிவு செய்வதன் மூலம், பிறரை வளரவிடுவதில்லை. அவர்களுடைய முழுத் திறமைகள் வெளிவர முடிவதில்லை. நாம் முடிவு செய்யும்போதுதான் அதன் விளைவுகளுக்கு நாம் பொறுப்பாகிறோம். அப்படிப் பொறுப்பேற்கும்போது தான் அடுத்த முறை செய்யும் முடிவுபற்றி ஆழமாகச் சிந்திக்கிறோம்.

'பாதுகாப்பு' என்ற தவருன போர்வைக்குள், நமது மனைவி—மக்களுக்காக நாமே எல்லாவற்றிற்கும் முடிவெடுப்பதன் மூலம், அனுபவம் பெருமல் செய்து விடுகிறோம். இதனுல் அவர்கள் தங்கள் காலிலே நிற்க முடிவதில்லை; தன்னம்பிக்கை அவர்களுக்கு ஏற்படுவ தில்லை.

எனது நண்பர் ஒருவர் வீட்டில் எல்லோரும் உட்கார்ந்து சாப்பிடும்போது, ஏதாவது முக்கியமான விஷயமிருந்தால் பேசுகிறார்கள்; விவாதிக்கிறார்கள். ஏழு வயதுப் பையனைக்கூட யோசனை கேட்கிறார்கள்; அப்புறம் முடிவு செய்கிறார்கள். இப்படி எல்லோரையும் ஈடுபடுத்தி முடிவெடுப்பதில் எல்லோருக்கும் மனநிறைவு ஏற்படுகிறது. பல யோசனைகளைப்பற்றி அறிய வாய்ப்பு ஏற்படுகிறது. முடிவெடுக்கும் முறை மற்றோருக்கும் புலப்படுகிறது.

நிர்வாகக்கலையில் (Participative management)இதை 'எல்லோரும் ஈடுபட்டு நடத்தும் நிர்வாகம்' என்று கூறுகிறார்கள். பல்வேறு நிர்வாக முறைகளில், இது தான் இன்று சிறந்த முறையாகக் கருதப்படுகிறது.

# முடிவெடுப்பதும் தன்மான உணர்வுகளும்

முடிவெடுப்பதைப் பலர், ஒரு நீதி மன்றத்தில் வாதாடி, நீதிபதி தீர்ப்புக் கூறுவதற்குச் சமமாகக் கருதுகின்றனர். வாழ்க்கையில் முடிவெடுப்பது அப்படி அல்ல. வெறும் தர்க்கபூர்வமான வாதங்களால் விளையும் முடிவு. சரியான முடிவென்றோ, அது நமது வாழ்க்கைக்கு ஏற்றதாக இருக்குமென்றோ கூற முடியாது.

சரியான முடிவு, வெறும் தர்க்கத்திற்கு அப்பாற்பட்டது. நாம் எடுக்கும் முடிவில் நமது உணர்ச்சிகள் பங்கேற்கின்றன; நமது முன்னுளைய அனுபவம் கை கொடுக்கிறது. தன்மான உணர்வுகள் நமது முடிவைச் 'செய்யலாம்', 'செய்யக்கூடாது' என்று திசை திருப்புகின்றன.

முடிவெடுக்கும்போது அறிவு, உணர்ச்சி இரண்டின் பாதிப்பையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். உணர்ச்சிக்கும் நாம் மதிப்பளிக்க வேண்டும்; அறிவுக்கும் மதிப்பளிக்க வேண்டும். அறிவுக்கும் உணர்ச்சிக்கும் மதிப்பளித்து நாம் முடிவு செய்ய வேண்டும். சிலப்பதிகாரத்தில், பாண்டியன் நெடுஞ்செழியன் சிலம்பைக் கண்டதும், அது, தன் மனைவியின் சிலம்புதான் என்று உணர்ச்சி வசப்பட்டு உத்தரவிட்டானே, அந்த முடிவு, வெறும் உணர்ச்சி செய்த முடிவு. கண்ணகி சீறியெழுந்து, தனது சிலம்பு, மாணிக்கக் கற்களால் ஆனது. அரசியின்

சிலம்பு, முத்துக்களால் ஆனது என்று கூறிச் சிலம்பை உடைக்கிருள். அரசனுக்கு தவற்றை உணர்த்துகிருள்; நீதிக்காக, அறிவுடனும் உணர்ச்சி யுடனும் அவள் போராடுகிருள்.

'அன்ருட வாழ்வில் உணர்ச்சி வசப்பட்டு, கோபப் பட்ட நிலையில், கணவன் மனைவியிடமும், மேலதிகாரி கீழே வேலை செய்பவர்களிடமும், ஆசிரியர், மாணவர் களிடமும் நடந்து கொள்ளக் கூடிய சந்தர்ப்பங்கள் நிறைய வருகின்றன. வேலைக்காரன் திருடியிருப்பான் என்று நினைத்து அவனைத் துன்புறுத்துகிருர்கள். மனைவி தவறு செய்திருப்பாள் என்று கணவன் சந்தேகப்படுகிருன். கீரிப்பிள்ளையின் வாய் ரத்தத் தைக் கண்டு, அது தன் குழந்தையைத்தான் குதறி விட்டு வந்தது என்று ஒரு தாய் தீர்மானித்தாளே, அதுதான் உணர்ச்சியின் விளைவு.

நாம் உணர்ச்சிக்குள்ளாகும்போது, நாம் உணர்ச்சி யுடன் மட்டும் இருக்கிருேம், 'தறிகெட்டுப் போகக் கூடும்; முறைகெட்டு நடக்கக் கூடும்' என்ற உணர்வு நம்முள் எழவேண்டும். இந்த நினைவு மனத்தில் எழும் போது, நம்மை நாமே ஓர் அந்நியனுக—ஒரு மூன்ரும் மனிதனுகக் கருதி ஒரு நிதானமான நிலையில் முடி வெடுப்போம். இதை விழிப்புணர்வு (awareness) என்று கூறுகிருர்கள் மன நூலார்.

முடிவெடுக்குமுன் நமக்கு அது பற்றிய பல உண்மைகளும் தெரிய வேண்டும். ஏன் அந்தப் பிரச்சினை எழுந்தது என்பதிலிருந்து அதை எப்படி யெப்படிச் சமாளிக்கலாம் என்பது வரை பலவித வழி களையும், நாம் ஆலோசிக்க வேண்டும். ஆனுல், அதற் காக நாளை ஒத்திப் போட்டுக் கொண்டு—போதுமான

தகவல்கள் கிடைக்கவில்லை என்று—ஒரு பூரணத்துவமான நிலைக்காகக் காத்திருக்கக் கூடாது. வீட்டில் திடீரென்று விருந்தினர் வந்துவிட்டால், ஒரு குடும்பத் தலைவி இட்லிக்கு மாவு இல்லையென்றால், ரவா தோசையோ, உப்புமாவோ செய்து சமாளிக்கிறார். வாராவாரம் வரவேண்டிய பத்திரிகை, தான் விரும்பும் எல்லா விஷயங்களுக்காகவும் காத்துக் கொண்டிருக்க முடியாது. செட்டியார், தனது கடைசியில், துவரம் பருப்பு இல்லையென்றால, கடலைப்பருப்பு நல்லது என்று சொல்லி விற்கிறார். இருக்கிற நிலைமையில் எதைச் செய்ய முடியுமோ, அதைச் சிறப்பாக செய்வது தான் வாழ்க்கை.

அதே சமயம், இருக்கிற நிலைமைக்கு மீறிச் சிந்திக்கவும் செயல்படவும் முனைய வேண்டும். 'இது எப்படி முடியும்?' என்று நினைப்பதறகுப் பதிலாக, 'இது ஏன் முடியாது?' என்று நாம் எண்ணப் பழக வேண்டும். ஏனெனில், இருக்கிற நிலைமையை ஏற்றுக் கொண்டே போனால், வளைந்து கொடுத்துக் கொண்டே போனால், நிலைமை மாறாது. நிலைமையை மாற்ற முடியும் என்ற நம்பிக்கையை இழந்து விடுவோம். குடும்பத்திலும் சரி, பொது வாழ்க்கையிலும் சரி.

குடும்பப் பெண்கள் சிலர், கணவருக்குப் பயந்தோ, கணவரை மதித்தோ அவர் செய்கிற காரியங்களை இஷ்டப்படி விட்டுவிட்டு, பின்னால் அவர் குடிகாரரான பிறகு, அவர் கண்டபடி செலவு செய்பவராக மாறிய பிறகு வருந்துகிறார்கள். 'நிலைமை எப்படி மாறும்?' என்று கவலைப்படுகிறார்கள். 'நிலைமையை ஏற்றுக் கொண்டே போனால் அதை மாற்றமுடியும் என்ற நம்பிக்கையே போய்விடும்' என்கிறார்கள்.

பொதுவாழ்க்கையை எடுத்துக் கொள்ளுங்கள். எல்லா இடங்களிலும் லஞ்சம் வாங்குகிறார்கள் என்கிற போது, எல்லோரும் ஏற்றுக்கொண்டே போகும் ஒரு சமுதாயம் உருவாகிறது. லஞ்சம் வாங்குவது ஒரு வாழ்க்கை நெறியாகி விடுகிறது; நியாயமாகிவிடுகிறது நல்லவர்களும் அதை மாற்ற முடியாது என்று எண்ணி விடுகிறார்கள். இதன் விளைவு என்ன ஆகும்?

நீதியையும் நேர்மையையும் நியாயத்தையும் பற்றிப் பள்ளிகளில் படித்த இள உள்ளங்கள், இதைக் கண்டு கொதிக்கின்றன. அயோக்கியர்களை, கொடுங் கோலர்களை, புரட்டர்களை அப்புறப்படுத்தும் ஒரு புரட்சி உருவாகிறது. என்ன காரணம்? தீயவர்கள் எடுத்த முடிவின் விளைவு அது. நல்லவர்கள், எனக் கென்ன வந்தது?' என்று பயந்து போய் சரியான காலத்தில் தைரியத்துடன் திருத்த முன் வராது இருந்த முடிவால் விளைந்த பயன், புரட்சி.

நாம் எந்த வகையில் வளர்க்கப்பட்டிருக்கிறோம், என்ன மனோபாவம் கொண்டிருக்கிறோம் என்பதும் நமது முடிவைப் பெரிதும் பாதிக்கும். ஈரானில், அமெரிக்கர்களைக் கைதியாக்கியவுடன் கார்ட்டர் அதை ஒருவிதமாகக் கையாண்டார். இன்றைய ஜனாதிபதி ரீகன், 'தான் அப்படிக் கையாண்டிருக்க மாட்டேன்' என்று கூறுகிறார். அவரவர் முடிவு செய்யும் திறன் அவரவர் கொள்கைகளைப் பொறுத்தது.

திடீரென்று ஒரு மனிதன் இரவு வேளையில் கத்தியைக் காட்டி, 'உண்மையைச் சொல்' என்று பயமுறுத்துகிறான் என வைத்துக் கொள்ளுங்கள். அங்கே யோசனைக் கேட்க நேரமில்லை. சட்டென்று நாம் அந்த பேச்சாலோ, செயலாலோ ஈடுகொடுத்தாக வேண்டும்.

ஒரு வேடிக்கைக்கு, ஒரு கற்பனைப் பயிற்சியை மேற்கொள்வோம்.

கீழ்க்கண்ட பிரமுகர்கள் அதை எப்படிச் சமாளிப்பார்கள் என்ற ஒரு கற்பனையை மிதக்கவிடுங்கள். ஏன் அவர்கள் அத்தகையதொரு முடிவெடுக்கிறார்கள் என்பதையும் நிதானமாக யோசியுங்கள்.

**சிவாஜி :** கத்தி என்ன செய்யும்? ஏன் காத்திருக்கிறாய்? என் பரந்த மார்பைத் திறந்து காட்டுகிறேன். உன் கையாலேயே குத்து.

**நாகேஷ் :** நீ கேட்கிற விஷயம் என் பையிலேயே இருக்கிறது. இந்தா, ஆளை விடு.

**கண்ணதாசன் :** வந்தது தெரியும், போவது எங்கே, வாழ்க்கை நமக்கே தெரியாது. கத்தியால் குத்திவிட்டால் இந்தக் கண்ணதாசன் இறந்து விடுவானோ?

**கருணாநிதி :** கத்தியை நீட்டினாயேயொழிய உன் புத்தியை நீட்டவில்லை. ஒரு பச்சைத் தமிழனைத் தமிழ் நாட்டிலேயே கொலை செய்ய முயல்வதா? நீ தமிழனாக இருக்க முடியாது! நீ தமிழனல்ல! ஆ...! நீ மேற்குக் கடற்கரையோரப் பகுதியிலிருந்து வருபவனாக...

**எம்.ஜி.ஆர். :** என் ரத்தத்தின் ரத்தமே! நீ இதைச் செய்யவில்லை. இந்தச் சதியின் மூலவர்களை நான் அறிவேன் என்பதை உனக்குச் சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுவதோடு, என்னிடமே உன் தீரத்தைக் காட்டும் உன் திறமையை மெச்சுகிறேன் என்பதையும் உனக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன் என்பதை இந்தச் சமயத்தில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

**சோ :** இன்ஞ வாத்தியாரே! நம்ம கிட்டேயே விளையாடறே? கத்தியை இப்பிடி கொடு. நீ கேட்கிற கடுதாசியைக் காலம்பறதான் போலீசிலே குடுத்தேன். அதானே வேணும்? வாங்கித் தாரேன், என்னோடவா!

எதிர்ப்பு, சரணுகதி, தந்திரம், பொய் கூறுவதிலும் நியாயம் பேசுவது, விஷயத்தைத் தங்கப் போடுவது, அறியாமையைப் புலப்படுத்துவது என்று மனிதர்கள் பலவிதங்களில் அவர்கள் மனேபாவத்திற்கேற்ப முடிவு செய்கிருர்கள். உங்கள் மனேபாவம் எப்படியென்று ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். உங்களின் குணநலன் புரிய வரும்.

## முடிவும்-சமுதாய மனேபாவமும்

முடிவெடுப்பதற்கு முன் பலரை நாம் யோசனை கேட்கிறோம். விஷயம் தெரிந்தவர்களை, அனுபவப் பட்டவர்களை. அவர்கள் தாங்கள் கூறுகிற முடிவு தான் சரியானது என்று வாதிக்கக் கூடும். அந்த முடிவை நாம் ஏற்க வேண்டும் என்று நிர்பந்திக்கக் கூடும். அப்படி ஏற்காவிட்டால் நம்மைப் புறக் கணிக்கக்கூடும். அவர்கள் அபாயமானவர்கள்.

நமது வளர்ச்சியை, இவர்கள் கட்டுப்படுத்துகிறார் கள்; கெடுக்கிறார்கள். நம் வாழ்க்கை நம் கட்டுப் பாட்டில் இருக்க வேண்டும். சரியோ, தவறோ நாம் தான் அதற்குப் பொறுப்பாளியாக இருக்க வேண்டும்.

"ஒருவனுக்கு ஒரு மீனைக் கொடுத்தால் ஒருநாள் உணவு தருகிறோம். அதற்குப் பதிலாக அவனுக்கு மீன் பிடிக்கக் கற்றுக் கொடுத்தால் வாழ்நாளுக்கான உணவைத் தருகிறோம்" என்கிறது ஒரு ஆங்கில வாசகம். அதேபோல, நாம் நமது நண்பர்கள் முடி வெடுக்கப் பல யோசனைகளையும் சொல்லி உதவினால், அவர்கள் முடிவெடுக்கும் வழிகளைத் தாங்களே கண்டு பயனடைவார்கள்.

பிறருக்காக நாம் முடிவெடுத்தால், நாம் அவர்களை நம்மைச் சார்ந்தவர்களாக வாழ்நாள் முழுவதும் ஆக்கு கிறோம். இப்படி ஒரு சார்ந்து நிற்கும் சமுதாயத்தைத் தான் தமிழ்ச் சமுதாயமாக உருவாக்கி இருக்கிறோம்.

பதினெட்டு வயதான பின்பும், படித்து முடித்த பின்பும்கூட தாய் தந்தையரைப் பணத்திற்காக எதிர் பார்க்கும் பிள்ளைகள்; தன்னால் சமபாதிக்க வக்கில்லாததை, மனைவிமூலம், மாமியார் மூலம் பெற முயலும் மாப்பிள்ளை; எதற்கெடுத்தாலும் அரசாங் கத்தில் ஏதேனும், யாரையாவது பார்த்துச் செய்ய முடியுமா என்று பல வழிகளில் அரசாங்கத்தைச் சார்ந்து நிற்கும் சமுதாயம். தலைவன் என்ன சொன்னாலும் சரி என்று, தலைவனைச் சார்ந்து நிற்கும் ஒரு அறிவில்லாத கூட்டம். எப்படி இருக்கிறது நமது சமுதாயம்?

சார்ந்து நிற்கும் சமுதாயம், தன் பொறுப்புக்களைப் பிறர் தலையில் சுமத்திவிட்டுக் கையேந்தி நிற்கிறது. நாடு இன்று இப்படி நிற்கிறதா இல்லையா என்பதை, நல்லவர்கள், படித்தவர்கள், நாட்டு நலனில் அக்கறை கொண்டவர்களெல்லாம் நினைத்துப் பார்க்க வேண்டும். தன் காலில் நிற்பவன் தன் இஷ்டப்படி தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்கிறான்; தன் விஷயங் களைப் பற்றித் தானே முடிவு எடுக்கிறான். வீட்டிலும் வெளி உலகத்திலும் நமக்காக, நம் அப்பாவும், அம்மா வும், பாட்டியும், ஆசிரியரும், மேலதிகாரியும் அரசியல் தலைவரும் முடிவெடுக்கும்போது, தனி மனித சுதந்திரம் பறி போகிறது.

இதில் வேடிக்கை என்னவென்றால், தனி மனித னுக்குச் சுதந்திரம் இருப்பதாக நம் ஊரில் பெரிதாக யாரும் நினைப்பதில்லை. ஏதோ ஊர், உலகம், சமுதாயம் என்ற கட்டுப்பாட்டுக்குள் தம் வாழ்க்கையைச் சிறைப் படுத்திக் கொண்ட தியாகிகளாய் மிகப் பெரும்பாலோர் வாழ்கிறார்கள்.

தனி மனிதன் தன் உரிமைகளை உணர்ந்து, பிற உரிமைகளை மதித்து, தன் காலிலே நின்றுதான் சுதந்திரமாகக் காரியங்களைச் செய்யவேண்டும். அது முடியும் என்று உணராதவரை நமது நாடு இப்படியே தான் இருக்கும். சமுதாய மாற்றம் முதலில் தனி மனிதனில் துவங்க வேண்டும். சுதந்திர உணர்வு தனி மனிதனிடம் தான் முதலில் மலர வேண்டும். அப்போது தான், ஒரு மனிதன் தான் எதைச் செய்ய ஆசைப்படு கிறானோ அதைச் செய்வான். அப்போதுதான் அவனது ஆக்க சக்திகள் பூரணத்துவத்துடன் அவனிடமிருந்து மலரும். நமது ஊரில் சுதந்திர உணர்வு பயந்து அடங்கிப் போயிருக்கிறது. பயத்தினால் ஆட்டிப் படைக்கப்படும் மனிதன், முதலில் தன் சுதந்திரத்தைத் தான் பறி கொடுக்கிறான்.

அமெரிக்க நாட்டின் உரிமைச் சாஸனத்தில் ஒரு சொற்றொடர் வருகிறது. Pursuit of Happiness என்று. 'ஒவ்வொரு மனிதனும், அவன் ஆசைப்படும் சந்தோஷங்களை அடைய முயலும் சுதந்திரம் உண்டு' என்று தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது.

வாழ்க்கையை, நமக்கும் பிறருக்குமாக மகிழ்வுடன் —சந்தோஷமுடன் வாழ முயல்வதுதான் வாழ்க்கை யின் லட்சியம். அந்த லட்சியத்தைப் பின்பற்றிச் செல்லும் முழு சுதந்திரத்தையும் அளிக்கிறது, அமெரிக்க உரிமைச் சாசனம். அதனால்தான் அமெரிக்க மக்கள் ஒவ்வொருவரும் பிறரிடமிருந்து வேறுபடு கின்றனர். ஒவ்வொருவரும் பிறரைப்பற்றிக் கவலைப் படாமல் தங்கள் வாழ்க்கையை வாழ்கின்றனர். அதனால்தான் பயமோ அச்சமோ இல்லாமல் அயோக்கியர்களை அயோக்கியர்கள் என்று கூறி நீதி மன்றத்தில் ஏற்றுகின்றனர். அவர்கள் வாழ்க்கை

யைப் பற்றிய முடிவுகளை அவர்கள்தான் எடுக்கிறார்கள்.

அடுத்ததாக, நமது சமுதாயம் மதிக்கும் கோட்பாடுகள், பாரம்பரியம், நம் வாழ்க்கையைப் பெரிதும் பாதிக்கிறது. ஆகவே இதற்கேற்றாற்போல் நாம் முடிவெடுக்கிறோம். அதாவது, சமுதாயம் இப்படி எதிர்பார்க்கிறது என்று, அதற்கேற்றாற்போல.

'நெஞ்சில் ஓர் ஆலயம்' என்ற பழைய படத்தில் கதாநாயகி பாடுகிறாள், 'ஒரு முறைதான் மலரும் மலரல்லவோ' என்று. அதாவது, கணவனுக்கு வாழ்க்கைப்பட்டவள் அர்ச்சிக்கப்பட்ட பூவுக்குச் சமானம். ஒரே ஒரு முறைதான் மலரும் மலர் என்று சொல்லி, அதாவது கணவனை இழந்த பெண் என்ன செய்ய வேண்டும்? கணவனை எண்ணிச் சோகத்தின் சுமையாக, விதவையாக வாழ வேண்டும். மனைவியை இழந்த கணவன் மறுமணம் செய்து கொள்வான், அது சகஜம். கணவன் இறந்தவுடன் ஒரு பெண்ணின் வாழ்க்கை முடிந்துவிடுவதில்லை. அவளுக்கு வாழ்க்கை இருக்கிறது; வயிறு இருக்கிறது; உழைக்கும் உடல் இருக்கிறது; உணர்வுகளை ரசிக்கும், மகிழும் உள்ளம் இருக்கிறது. இத்தனை உண்மைகளையும் பெரிய பூசணிக் காயை நாம் சேற்றில் மறைத்து, 'ஆகா, நீ தியாகி!' என்றும், 'அவள் விதி' என்றும் கூறி, பெண்ணின் வாழ்க்கையை நமது முன்னோர்கள் ஒடித்து வைத்து விட்டார்கள். சமத்துவமில்லாத அதர்மம்.

மாறுபட்ட வாழ்க்கைக்கோ, மறுமணத்திற்கோ, தன்னைக் காப்பாற்றும் ஒரு தொழிலில் பயிற்சி பெறவோ, அவளை நம் சமுதாயம் தயார் செய்வதில்லை.

இப்படிச் சமுதாய மானுபாவம் நம் வாழ்க்கையை நிர்ணயம் செய்கிறது. நமக்காக முடிவெடுக்கிறது. கவிஞர் ரோகிணி தனது 'தேன் முள்ளுகள்,' என்ற கவிதைப் புத்தகத்தில் எழுதுகிறார்.:—

"எங்கிருந்தாலும பெண்
சாவி கொடுத்த பொம்மையாக
மூளையைக் கசக்கிக் கொள்ளாமல்
இயங்குவதற்கெனவே
காலங்காலமாக கற்பிக்கப்பட்டிருக்கிறாள்
தருமதேவதைகள்
அன்னபூரணிகள்
கிருகலட்சுமிகள்
அழகுதேவதைகள்
இந்த அடைமொழி
ஊன்றுகோல்கள்
இல்லாமல்
நமது பெண்மணிகளால் நடக்க முடியாது"

என்று.

சமுதாயக் கொடுமையினைப் பாருங்கள்!

முடிவெடுக்கும் நிலை, ஒரு பெண்ணிடமிருந்து பறிக்கப்படுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்; என்ன ஆகும்? ஒரு செயலற்ற தன்மை, விரக்தி, ஆற்றாமை அவள் உள்ளத்தில் பரவுகிறது.

அதேபோல, வடக்கேயும் போக முடியவில்லை, தெற்கேயும் போக முடியவில்லை என்கிறபோது ஒரு வேலையில்லாத இளைஞன் என்ன செய்கிறான்? ஒரு

வாய்ப்பில்லாத மனிதன் என்ன செய்கிறான்? அவனிடம் படிப்பிருக்கிறது; திறமை இருக்கிறது; உழைக்கத் தயார்; எனினும்...

அவனிடம் ஆற்றாமை வேகம் மூள்கிறது. நெஞ்சு பொருமுகிறது. மனிதனின் செயலற்ற தன்மை ஒரு சரிந்த சாம்ராஜ்யத்தை உருவாக்குகிறது. இல்லாவிட்டால், இந்த ஆற்றாமை வேகம் அணை உடைத்துக் கொண்டு எழும் வெள்ளத்தைப்போல, பொங்கி வெடிக்கும் எரிமலையைப் போல, புரட்சியாக வெளியே வருகிறது.

# பிரச்சினைகளுக்குப் பல வழிகள் உள்ளன...

**பெ**ர்னுட்ஷா ஒரு சாதாரண குமாஸ்தாவாக வேலை பார்த்துக்கொண்டிருந்தார். "என் வாழ்நாளை வெறும் குமாஸ்தாவாக நான் கழிக்கப் போவதில்லை" என்று முடிவெடுத்தார். அவரது வாழ்க்கையின் தடம் மாறியது; ஒரு எழுத்தாளர் ஆனார்.

இப்படி ஒவ்வொரு பெரிய மனிதர்களுடைய வாழ்க்கையைப் படித்தாலும் அவர்கள் வாழ்க்கையில் பல திருப்பக் கட்டங்கள் இருப்பதையும், அந்த ஒவ்வொரு திருப்புமுனையிலும் அவர்கள் எடுத்த துணிச்சலான முடிவு அவர்களை மேல்நோக்கி முன்னேற்றப் பாதையில் அனுப்பி வைத்திருப்பதையும் கவனிக்கலாம்.

வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்கள் வருகின்றன; பல சிக்கல்கள் வருகின்றன; பல நிலைகள் தோன்றுகின்றன. ஒவ்வொரு சந்தர்ப்பத்தின்போதும் நாம் எப்படி நடத்துகொண்டோம் என்பதைப் பொறுத்து, அடுத்து வரும் சம்பவங்கள் அமைகின்றன. என்ன முடிவெடுத்தோம் என்பதைப் பொறுத்து நமது எதிர்காலம் அமைகிறது.

முடிவு எடுப்பதில்தான் மனிதர்கள் வேறுபடுகிறார்கள். 'வேலை கிடைக்கவில்லை, நான் என்ன செய்ய முடியும்?' என்பவர்கள், 'என் கணவன் அகால மரணமடைந்து விட்டான்; எனக்கு வேறு வழியில்லை' எனும் பெண், 'எனக்கு வயதாகிவிட்டது. நான் எப்படி உடல்

வேலை செய்து பிழைக்க முடியும்' என்று நினைக்கும் பெரியவர்—இவர்களைக் கவனியுங்கள்.

அவர்கள் எல்லோரும் தாங்கள் இருக்கும் சூழ்நிலையில் 'வேறு வழியே இல்லை' என்று பேசி, நம்பி வாழ்கிறார்கள். கொஞ்சம் கண்ணைத் திறந்தார்களானால் பல்வேறு வழிகள், ஆயிரம் மார்க்கங்கள் தென்படும். அவர்கள் பயத்தால் அடிபட்டுப்போய் 'நான் என்ன செய்வேன் வேறு ஏது வழி?' என்கிறார்கள். அவர்களில் பலர் சிந்தனையின்மையால் முடக்கப்பட்டு வேறு வழி இல்லை என்று தவிக்கிறார்கள்.

முடிவு காண்பதில் மிகப் பெரிய கட்டம், நம் முன் ஒரே வழி மட்டுமேயில்லை; பல்வேறு வழிகள் இருக்கின்றன என்பதை நாம் கண்டு பிடிப்பதுதான்.

பள்ளிப் படிப்பு முடித்தவர்களைக்கேட்டால்,பெரும் பாலோர் கல்லூரிக்குப் போவேன் என்கிறார்கள். கல்லூரிக்குப் போவது ஒரு வழி. மற்றவை, நீங்கள் வேலை பார்க்கலாம்; தொழில் துவக்கலாம்; தொழில் அனுபவப் பயிற்சி பெறலாம், ஊர் உலக அறிவைப் பெற ஊர் ஊராகப் பிரயாணம் செய்யலாம். எத்தனையோ வழிகள் உள்ளன.

ஒவ்வொரு நிலையிலும் நம் முன் பல வழிகள் உள்ளன. பிற வழிகள் சங்கடம் என்று நாமே நினைத்துக் கொண்டு அவற்றை மனத்தால்கூட நினைத்துப் பார்க்க, அலசி ஆராய்ந்து பார்க்க அஞ்சுகிறோம்.

இதனால் என்ன நேர்கிறது? இதனால் உங்கள் வாழ்க்கையை நீங்களே அமைத்துக்கொள்ள முடியாது போய்விடுகிறது. உங்களுக்குப் பிடிக்காத ஒன்றை நீங்களே செய்ய உங்களை நிர்ப்பந்திக்கிறீர்கள். முடிவுகளை எடுக்கும் அனுபவப் பயிற்சியை மற்று

மோர் சந்தர்ப்பத்தில் பெற முடியாமல், அனுபவ அறிவால் உங்களைக் குறைத்துக் கொள்கிறீர்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக நீங்கள் முடிவெடுக்காத போது, யாரோ பிறர் உங்களுக்காக முடிவை எடுக்க விட்டுவிடுகிறீர்கள்.

கோபம் வரும்போது, நாம் கோபமாக இருக்கிறோம் என்பதை எப்போதாவது உணர்ந்திருக்கிறீர்களா? அப்படி உணரும்போது நம்மால் நம் கோபத்தைக் கட்டுப்படுத்த முடியும். அதேபோல்தான் ஒரு மகிழ்ச்சியை அனுபவிக்கும்போது அதை அனுபவிக்கிறோம் என்கிற உணர்வு நம் இன்பத்தை இன்னும் அதிகமாக உயர்த்திவிடும். இதைத்தான் மனோதத்துவத்தில் **(Awareness)** 'நினைவு உணர்வு' என்கிறார்கள். என்ன நிலையிலிருக்கிறோம் என்பதை உணர்வதுதான் இந்த உணர்வு. அதே போல முடிவெடுக்கும்போது, 'நமக்குப் பல வழிகள் உள்ளன' என்று அலசி ஆராய்ந்து உணரும்போது நாம் நல்ல முடிவு எடுக்க அது உதவுகிறது.

எத்தனை தரம் கேட்டிருக்கிறோம் நாம்? 'என் வேலையை நான் வெறுக்கிறேன். ஜடமே என்று போய் வருகிறன்', 'நான் காலேஜில் என்ன செய்கிறேன் என்பது எனக்கே தெரியாது. ஏதோ தண்டத்திற்கு அழுகிறேன்', 'இப்படி ஒரு கணவனை, மனைவியை நான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று கனவிலும் நினைக்கவில்லை. இப்போது என்ன செய்வது?', 'தலைவர் தீர்மானித்துவிட்டார் சார், நாம் என்ன செய்ய முடியும்?' —இப்படிப் பேசும் கையாலாகாத் தனத்தின் எதிரொலிகளைத் தினமும் வாழ்வில் கேட்கிறோம். யார் இவர்கள்? தன் வாழ்க்கையைப் பிறர் முடிவெடுக்க விட்டுவிட்ட புண்ணியாத்மாக்கள்.

"எல்லாம் டில்லி செய்கிறது" என்று அங்கலாய்க்கும், கைவிரிக்கும், அரசியல்வாதிகளை நாம் அன்றாடம் பார்க்கவில்லையா? டில்லி என்ன செய்யும்? அல்லது என்ன செய்ய முடியும்? நமது சிண்டை நாம் பிறர் கையில் கொத்துவிட்டு 'ஐயா! இது என் சிண்டு; கொஞ்சம் பத்திரமாகப் பார்த்து ஆட்டுங்கள்!' என்று கூறும் நிலையில் தமிழன் தன்னை வைத்துக் கொண்டுள்ளான்.

நம்முன் நம் வாழ்க்கைக்கும் சரி, நாட்டு நிலைக்கும் சரி—எத்தனையோ வழிகள் உள்ளன. பல வழிகள் உள்ளன என்பதை நாம் முதலில் உணர வேண்டும். அப்படி உணரும்போது நாம் பல வழிகளையும் சிந்திப்போம். பல வழிகளையும் சிந்திக்கும்போது நமக்கு மனத்தைரியம் வரும். மனத்தைரியம் வரும்போது நாம் செயல்படுவோம். நாம் செயல்படும்போது நாம் விரும்புகிறமாதிரி நம் வாழ்க்கையும சரி, நாடும் சரி, மாறும்.

முதலில் எந்தச் சிக்கலுக்கும் ஏராளமான வழிகள் உள்ளன என்பதை உணர்வோம்; சிந்திப்போம்.

# நொண்டிச் சமாதானம்!

'நீங்கள் தமிழாசிரியராகப் போகத் தீர்மானித்தீர்களானல், அது நீங்கள் எடுக்கும் முடிவு. முடிவு எடுக்கும் முன் எதற்காகத் தமிழ் படிக்கிறேன்? ஆசைக்கா? அறிவு வளர்ச்சிக்கா? வேலே பெறவா? வேலே பெற முடியாவிட்டால் இந்த அறிவை வைத்துக் கொண்டு நான் சொந்தத் தொழில் செய்ய முடியுமா?" என்றெல்லாம் யோசிக்கவேண்டும்.

தமிழ் படித்துவிட்டு, அரசாங்கம் வேலே தரவில்லே என்று அறிக்கை விடுபடுவர்களேச் சமீபத்தில் சந்தித்தேன். நாம் எடுக்கும் முடிவுக்கு நாம்தான் பொறுப்பு; அரசாங்கம் பொறுப்பல்ல. அரசாங்கம் என்பது பொதுப் பணத்தை ஒரு 'டிரஸ்டா'க நிர்வகித்து, எல்லோருக்கும் தேவையான சில பொதுக் காரியங்களேச் செய்ய அமைக்கப்பட்டிருக்கிறது.

எல்லாவற்றிற்கும் நாம் அரசாங்கத்தை எதிர்பார்த்தோமானல், தனி மனித சுதந்திரம் பறிபோகும். இதன் விளேவாக, பின்னல் அரசாங்கம் போடும் முட்டாள்தனமான சட்டதிட்டங்களுக்கு நாம் ஆளாக நேரிடும். எதற்கெடுத்தாலும் அரசாங்கம் என்று பேசி வரும் தலேவர்களும், பொதுமக்களும் சுயஉரிமைகளேப் பறி கொடுப்பவர்கள். தனது அறிவிலும், திறமையிலும் நம்பிக்கை இல்லாதவர்கள்.

தனிமனித முயற்சியின் மூலம்தான் ஒரு நாடு முன்னேற முடியுமே தவிர அரசாங்கம் குமாஸ்தாக்களே அதிகப்படுத்துவதன் மூலம், முன்னேற

முடியாது. தனி மனித முயற்சிகள்மூலம்தான் உலகில் இன்றுவரை பல கண்டுபிடிப்புகள் வெளி வந்திருக்கின்றன.

நமது ஊரில் 'தமிழ்ப் படிப்பைத் தேவைக்குமேல் மாணவன் தலையில் சுமத்துகிறோமோ' என்ற ஒரு சந்தேகம் எனக்கு உண்டு. தமிழ் படித்த மாணவன் நாளைக்குக் கல்லூரியைவிட்டு வெளியே வரும்போது தமிழ் ஆசிரியராக வேலை பெற முடியவில்லை என்றால், அவன் தனியே தொழில் துவங்கக்கூடிய அளவுக்குத் தைரியத்தையும், தன்னம்பிக்கையையும், தொழிலறிவையும் தமிழ்ப் பாடத்தின் மூலம் நாம் நம் மாணவர்களுக்கு ஊட்ட முயல வேண்டும்.

ஜப்பான் நாட்டில் அதைத்தான் செய்கிறார்கள். வெறும் செய்யுள், இலக்கியம், நாடகம் என்று மட்டுமே சொல்லிக் கொடுக்காமல், ஜப்பான் மொழியிலே வாழ்க்கைக்குத் தேவையான எல்லாவற்றையும் சொல்லிக் கொடுக்கிறார்கள். நமது பாடத்திட்டங்களை அமைப்போர் எடுக்கும் முடிவுகள் வருங்கால சமுதாயத்தைப் பாதிப்பவை.

என்று நாம், 'என் தமிழறிவை வைத்துக் கொண்டு விவசாயம் செய்வேன், தொழில் உற்பத்தி செய்வேன், புதியன கண்டு பிடிப்பேன்' என்று சொல்லும் தைரியம் வருகிறதோ அன்றுதான் தமிழால் தமிழ்நாடு பயன் பெறும். இலக்கியப் பட்டி மண்டபங்களால் அல்ல.

வயது ஏறிவிட்டது என்பதனால் ஒரு சில காரியங்கள்தான் செய்ய முடியாது. மற்றபடி வயதேறியவர்கள் என்ற பால் வேறுபாட்டைக் காட்டி ஒரு 'நொண்டிச் சமாதானம்' கூறுவதும் இதைப் போன்றதே. எட்வர்ட் கென்னடி, இறந்துபோன தன்

சகோதரர் ராபர்ட் கென்னடியைப் பற்றிக் கூறினர்: "எல்லோரும் உலகில் நிகழும் சம்பவங்களுக்கு ஏன் எப்படி என்று விளக்கம் கூறுகிறார்கள். ஆனால் ராபர்ட்டோ, 'நிகழ முடியாத விஷயங்களைக் கற்பனை செய்ய ஏன் முடியாது' என்று கேட்டான்."

நாம் நம் வாழ்க்கையிலும் 'ஏன் கூடாது? ஏன் முடியாது' என்று கேட்கக் கற்றுக் கொள்ளவேண்டும். நிகழ முடியாத விஷயங்களைத் தைரியமாக எடுத்துக் கற்பனை செய்யவேண்டும். சொல்லப் போனால் அப்படிப் பட்ட பயிற்சியை நமக்கு நாமே அளிப்பதில்லை. ஊர் உலகம் எதை ஏற்றுக்கொள்ளுமோ அதைப்பற்றி மட்டுமே பத்திரமாகச் சிந்திக்கப் பழக்கப்பட்டிருக் கிறோம். பெரும்பாலோருள் ஒருவித பயம்,புதிய பாதை களைப் பற்றிச் சிந்திக்காதபடி முடக்கி வைத்திருக் கிறது.

துணிச்சலாக, வழக்கத்திற்கு மாறுபட்ட ஒரு முடிவை எடுத்தால் அதை நிறைவேற்றும் பொறுப்பு அதிகமில்லையா? என்று நீங்கள் கேட்கக் கூடும். உலகில் எல்லாவற்றிற்கும் ஒரு விலை உண்டு. அந்த விலையைக் கொடுக்காது எதையும் நாம்பெற முடியாது.

சினிமா டைரக்டராக ஆக, ஒரு நல்ல பத்திரமான அரசாங்க வேலையை உதறிவிட்டு வந்தார் ஒருவர். 'சுதந்திரம்' என்று தான் எடுத்த முடிவுக்காக மகாத்மா காந்தி பல தியாகங்களைச் செய்ய வேண்டியிருந்தது. உழைப்பு, தியாகம், போராட்டம் இல்லாமல் எந்தப் பலனும் இல்லை.

ஆட்சியிலுள்ளவர்களிடமும் அதிகாரிகளிடமும் நான் பேசிக் கொண்டிருந்தபோது, ஒரு விஷயம் தெளி வாகப் புரிந்தது. ஏதோ இவர்கள் பதவியில்

இருக்கிறார்களே ஒழிய இவர்கள் 'தன்னால் முடியும்' என்ற நம்பிக்கை இல்லாதவர்களாய் இருந்தார்கள். ஒன்று டில்லியைக் குறை சொல்வார்கள். அதற்கு மேலும் சென்று இயற்கையைக் குற்றம் சாட்டுவார்கள்.

சுமுகமாக ஓடிக்கொண்டிருக்கும் வண்டியை ஓட்டத் தலைவர்கள் தேவை இல்லை. ஒரு வண்டிக்காரன் போதும். சூழ்நிலையை எதிர்த்துப் போராடி வெற்றி காணும் மனிதர்களே, தலைவர்களே நமக்குத் தேவை. அவர்களால் மட்டுமே தாங்கள் கனவு காணும் ஒரு லட்சியத்தை அடைய முடியும். மற்றவர்கள் தேர்தலின்போது தேனொழுகப் பேசுவார்கள். தலைமை ஏற்றவுடன் தன் கையாலாகாத்தனத்திற்குச் சமாதானம் கூறுவார்கள்.

அத்தகைய நாட்டிலும், 'என் விதி என் கையில் இருக்கிறது' என்ற நம்பிக்கையில் வளர்ந்த இளைஞர்கள் இருந்தால், 'நொண்டிச் சமாதானம்' கூறுபவர்களைத் தூக்கி எறிந்து, ஒரு புதிய சமுதாயம் படைக்க முடியும். சமாதானங்கள் நமக்கும் வேண்டாம்; மேலேயும் யாரும் உபயோகிக்க அனுமதிக்கக் கூடாது.

எதற்கும் ஒரு விலை உண்டு. போராட்டம்தான் அந்த விலையாகப் பல நாடுகளில் தோன்றி இருக்கிறது.

# லட்சியத்தை முன்வைத்து முடிவுகளை எடுங்கள்!

**வா**ழ்க்கையில் அடிப்படையாக நமக்கு ஒரு எண்ணம் இருக்கவேண்டும். என்ன அது? அதாவது, நமது வாழ்க்கை நமது கட்டுப்பாட்டுக்குள்தான் அமைகிறது. நமது வாழ்க்கையை இஷ்டப்பட்டபடி நாம் அமைத்துக் கொள்ள முடியும் என்ற அடிப்படை எண்ணம்தான் அது.

நமது ஊரில், துரதிர்ஷ்டவசமாக, 'எதுவும் நம் கைவசம் இல்லை' என்கிற இயலாமை, மனோபாவம் பரம்பரை பரம்பரையாக வளர்க்கப்பட்டிருக்கிறது. 'அதிர்ஷ்டமே', 'பொசுப்பு' 'பிராப்தம்' என்ற நம்பிக்கைகளில் ஊறிப் போயிருக்கிறோம். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவன் ஆட்சி செய்யும் ஒரு ஜனநாயக அமைப்பில்கூட, நம்மை நடத்திச் செல்லும் ஒரு சர்வாதிகாரியை நம் உள்ளம் விழைகிறது. அது நமது மனோபாவத்தின் பிரதிபலிப்பு. சமுதாய பாரம்பரியததின் பிரதிபலிப்பு. தமிழ்நாட்டின்... இ ந் தி ய ா வி ன்... துரதிர்ஷ்டத்தின் பிரதிபலிப்பு. நமது வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கும் மனோபாவ முட்டுக்கட்டை அது. நமது முன்னேற்றத்தைத் தாக்கும் ஒரு சீக்குப் பிடித்த மனத்தின் பிரதிபலிப்பு.

மேஜை இடித்துவிட்டது என்றுதான் நாம் சொல்வோமே தவிர, மேஜையின் மீது விழுந்து இடித்துக் கொண்டேன் என்று சொல்ல மாட்டோம். ஒருவர் பதவியிலிருக்கிறார் என்றால், 'அவருக்கு யோக காலமப்பா' என்றுதான் கூறுகிறார்களே தவிர, அவர்

திட்டமிட்டுப் பதவியைப் பிடித்தார் என்று கூறு பவர்கள் குறைவு.

'நாம்தான் முடிவு எடுக்கிறோம், நல்ல விளைவுகளை நம்பி, எதிர்பார்த்து முடிவு செய்கிறோம். ஆனால் விளைவுகள் நாம் எதிர்பார்ப்பது போல் ஏற்படுவ தில்லையே' என்று சிலர் கேட்கக் கூடும்.

உண்மை. முடிவுதான் நம் கையில் இருக்கிறது. விளைவுகள் நம் கையில் இல்லை. விளைவுகள்—நமக்கு அப்பாற்பட்ட சக்திகளின் கோர்வையால் நேர்கின்றன. ஆகவே, நாம் செய்யக்கூடியது, எது நம்மால் முடியுமோ அதைத்தான்.

இப்படிப் பலமுறை முடிவு எடுத்து அதன் விளைவு களை நாம் பரிசீலித்தோமானால் கூடிய விரைவில் நமக்கு எந்தவிதமான முடிவுகள், எந்தவிதமான நலனைக் கொடுக்கும் என்பது அத்துபடியாகும். சரியான முடிவெடுக்கும் முறையை நமது மனம் பழக்கத்திற்குக் கொண்டு வந்துவிடும். அப்போது நமது முடிவுகளுக்கும் விளைவுகளுக்கும் உள்ள தொடர்பு நாம் விரும்புகின்ற மாதிரி அமையும்.

'வேறு வழி இல்லை' என்று கூறித் தனக்குப் பிடிக்காததை மனம் நொந்துகொண்டு செய்பவர்கள் எல்லாம் ஒரே ஒரு விஷயத்தைத்தான் பறை அடிக் கிறார்கள். அதாவது, 'என் வாழ்க்கை என் கையில் இல்லை' என்று அவர்கள் கூறாமல் கூறுகிறார்கள். வாழ்க்கையை என்னால் சமாளிக்க முடியவில்லை என்று பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார்கள்.

எந்தப் பிரச்சினைக்கும் பலவழிகள் உண்டு. தீர்க்க முடியாத பிரச்சினை உலகில் இல்லை. பிரச்சினை என்று வரும்போது 'நம் வாழ்க்கையின் லட்சியத்திற்கு

என்ன முடிவு எடுத்தால் நல்லது' என்று தீர்மானித்து அதை எடுக்கவேண்டும்.

'நமது லட்சியம் என்ன? நமது கௌரவம் என்ன?' என்று நாம் தீவிரமாகச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டும். பலவழிகளிலுமுள்ள தடைகள்—முட்டுக் கட்டைகள் என்ன என்று நாம் ஆராயவேண்டும்.

ஒரு பிரச்சினைக்கு வழி தேடும்போது நாம் 'இது முடியாது' என்று எந்த வழியையும் விடக்கூடாது. மேலோட்டமாகப் பார்க்கும்போது சில வழிகள் இயலாததாகவும், விசித்திரமாகவும் படும். ஆனல் நாம் திறந்த மனத்துடன் எல்லா வழிகளையும் அணுக வேண்டும்.

கடலில் ஒரு கப்பல் மூழ்கிவிட்டது. கப்பலை எப்படி மேலே தூக்கலாம் என்று எல்லோரையும், எல்லா பொறி இயல் நிபுணர்களையும்—யோசனை கேட்டார்கள். ஒருவர் கூறினர்.

கடலுக்கடியில் காற்றுக் கொப்புளங்களை உண்டாக்கிக் கப்பல்மீது ஒட்டவைத்தோமானல் காற்றுக் கொப்புளங்கள் கப்பலை அப்படியே மேலே தூக்கிவிடும் என்றார். இதைக் கேட்ட எல்லோரும் முதலில் சிரித்தார்கள். கடைசியில் அவர் சொன்ன மாதிரி—காற்றுக் கொப்புளங்களால்தான் கப்பலை உயரே கொண்டு வந்தார்கள். ஆகவே நமக்குத் தோன்றும் எந்த வழியையும் நாம் 'முடியாது' என்று ஒதுக்கிவிடக்கூடாது.

திறந்த மனம் வேண்டும். என்ன விளைவுகள் நேரும் என்று நாம் சிந்திக்க வேண்டும். அத்துடன் நமது கற்பனையைக் கொஞ்சம் 'உலா'விட வேண்டும். எல்லாப் பிரச்சினைகளுக்கும் வழி உண்டு.

பெண்ணைப் பெற்றவர்கள் சிலர் நம்பிக்கையோடு சொல்லக் கேட்டிருக்கிறேன். 'இவளுக்கென்று ஒருவன் எங்கேயோ பிறந்திருக்கிருன்' என்பார்கள். அதே போல ஒவ்வொரு பிரச்சினைக்கும் வழிகள் முன்பே பிறந்திருக்கின்றன. தீர்க்க முடியாத பிரச்சினைகள் இந்த உலகில் இல்லை. எப்படி ஒரு காரணத்தைச் சுற்றிக் காரியம் நிகழ்கிறதோ, காரணகாரியத் தொடர்புடன் உலகம் இயங்குகிறதோ, அதே காரண காரியத் தொடர்பில்தான் பிரச்சினையும் வழியும் அமைகின்றன.

நாவல்களையும், கதைகளையும் நாம் பொழுது போக்குக்காகப் படிக்கிறோம்; மகிழ்கிறோம். அத்துடன் நில்லாது கதாநாயகனும் கதாநாயகியும் ஆற்றில் விழுந்த துரும்புபோல் வாழ்க்கை ஓட்டத்தில் இழுத்துச் செல்லப்படுகிறார்களா அல்லது சம்பவங்களை எதிர்த்து எதிர்நீச்சல் போடுகிறார்களா என்று நான் பார்ப்பதுண்டு.

வாழ்க்கை ஒரு ஆற்றோட்டம் அல்ல.

வாழ்க்கை ஒரு போராட்டம்; எதிர் நீச்சல்.

சூழ்நிலைகளை மேவி, மீறி நாம் இஷ்டப்பட்டபடி உயர்வதுதான் வாழ்க்கையின் பயன்.

அது நம்மால் முடியும். முதலில் நமக்கு அந்த ஆசை வேண்டும். அது நம்மால் முடியும் என்ற நம்பிக்கை வேண்டும். சந்தர்ப்பம், சோதனை, பிரச்சினை என்று வரும்போது நமது லட்சியத்தை முன் வைத்து நாம் முடிவுகளைச் செய்யவேண்டும். இருக்கிற நிலையில் எந்த முடிவு சுலபம் என்று நாம் பார்க்கக் கூடாது.

'இது சுலபம்' என்று எண்ணி ஒரு முடிவை எடுத்தோமானுல் பின்னுல் அதை மாற்ற விரும்பினுல்

முடியாமல் போகலாம். சுலபமான முடிவுகள் நம் சுதந்திரத்தைப் பாதிக்கக்கூடியவையாக அமையலாம்.

மகாத்மா காந்தி 'வெள்ளைக்காரனே ஆண்டு விட்டுப் போகட்டுமே' என்று ஒரு சுலபமான முடிவை எடுக்கவில்லை. 'இது எனது நாடு, சுயராஜ்யம் எனது பிறப்புரிமை. அதற்காக சிறைமட்டுமல்ல என் உயிரையும் கொடுக்கத் தயார்' என்ற முடிவை எடுத்தார். அதனால் விடுதலைப் போராட்டம் பிறந்தது. இந்தியா சுதந்திர நாடாகியது.

அதே சமயம் ஜின்னா 'இது எனது நாடு. நாங்கள் முஸ்லீம்கள். எங்கள் கலாசாரம் வேறு, எங்களுக்குத் தனி நாடு வேண்டும்' என்று ஒரு துணிச்சலான முடிவை எடுத்தார். கடைசிவரை போராடி வெற்றி பெற்றார். பாகிஸ்தான் பிறந்தது.

'இது திராவிடநாடு. நான் திராவிட இனம். எனது மொழி கலாசாரம், பாரம்பரியம் எல்லாம் வேறு. நான் என்றுமே சரித்திரத்தில் தனித்து வாழ்ந்தவன்' என்று போராடினார் பெரியார் ஈ. வெ. ராமசாமி. அவர் அதை அடையவில்லை. அவர் ஏன் அதை அடையவில்லை என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அவர் செய்த முடிவில் என்ன கோளாறு இருந்தது என்று நீங்கள் ஆராய்ச்சி மாணவனாக அலசிப் பார்க்க வேண்டும்.

'மாநில சுயாட்சி', 'இந்தி எதிர்ப்பு' என்று பெருத்த குரலோடு சிம்மநாதம் எழுப்பினார் கலைஞர் மு. கருணாநிதி. இன்று தேசிய ஒருமைப்பாட்டுக் குழுவின் ஓர் உறுப்பினராக இருக்கிறார். இந்திராகாந்தியின் பரம சிஷ்யராக வெளிநாட்டுத் தூதர் பதவியைப் பெற்றால் ஆச்சரியமில்லை. அவர் முடிவுகள் என்ன ஆயின? ஏன் இத்தகைய விளைவுகளில் கொண்டுபோய் கலைஞர்

தன்னை வைத்திருக்கிறார் என்று கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ஒரு விஷயம் புரியவரும்.

முடிவுகளின் அடிப்படைக் கருத்தை ஒருவன் மாற்றிக் கொண்டே போக முடியாது. அப்படிப் போனால் அவன் லட்சியபுரிக்குப் போக மாட்டான், சகாயபுரிக்குத்தான் போவான். முடிவுகளில் — நாம் எடுக்கும் கொள்கைகளில் நமக்குப் பற்று வேண்டும்; நம்பிக்கை வேண்டும்; உறுதி வேண்டும்; நாணயம் வேண்டும்.

இவை இல்லாவிட்டால் முடிவுகள் நாம் விரும்பும் பயனைத் தருவதில்லை. லட்சியத்தை மாற்றிக் கொண்டே செல்பவர்கள் திருவாரூர் தேரில் ஊர்வல மாகத் துவங்கக் கூடும். திடீரென்று சத்யா ஸ்டுடியோ போகும் எல்லையாக அது மாறும். அல்லது டில்லிக்குக் காவடி எடுத்துக் கொண்டிருப்பார்கள். லட்சியத்தை மாற்றிக் கொண்டே இருப்பவர்கள், வாழ்க்கையில் எதையும் அடைவதில்லை.

முடிவு எடுக்கும் கலையில் ஓர் உதாரணத்துக்கு கலைஞர் மு. க. வைப் பற்றிக் கூறினேன். இதே உதாரணம் இந்திராகாந்திக்கும், எம். ஜி. ஆருக்கும் பொருந்தும். ஏழ்மையை விரட்ட, "ஹரிபி ஹட்டோ" என்று துவங்குவார்கள். பதவிக்கு வந்தவுடன் எந்த அமைச்சரவையை எப்படிக் கவிழ்க்கலாம் என்பதில் முடியும்.

எதை எப்படிச் செய்யக்கூடாதென்று தலைவர்கள் நமக்கு வழி காட்டுகிறார்கள்.

# முடியும் என்று நம்புவோம்

பல வேலைகள் முதலில் மலைப்பாகத் தோன்று கின்றன. 'நம்மால் முடியுமா?' என்ற சந்தேகம் நம் முன் எழுகிறது. பல வேலைகள் உடல் சக்தியை முன் வைத்துப் பாடுபடும் உழைப்பாளியின் வேலைகள். அலுவலகத்தில் பேனா பிடித்து எழுதி வந்தவர்கள், நிர் வாகியாக இருப்பவர்கள், வீட்டுக்கு அருகில் தோட்டம் போடுவதையோ, காருக்கு அடியில் படுத்துக் கொண்டு காரின் எண்ணெயை மாற்றுவதையோ 'ஓ! அது கஷ்டமான வேலை! என்னால் முடியாது!' என்கின்றனர்.

கஷ்டமான வேலை என்று சொல்வதுடன் நிறுத்திக் கொண்டால் பரவாயில்லை. அத்துடன் 'என்னால் முடி யாது' என்று கூறித் தங்களைத் தாங்களே முடவர் களாக்கிக் கொள்கிறார்கள். அத்துடன் ஒரு போலி கௌரவத்தையும் சேர்த்து, 'நான் என்றுமே அறிவு வர்க்கத்தைச் சேர்ந்தவன்; இன்டெலெக்சுவல் டைப். உடலுழைப்பு வராது' என்று பெருமையாக வேறு பேசுகின்றனர். அதாவது முடியாததில் ஒரு பெருமை; கையாலாகாத்தனத்திற்கு ஒரு பூமாலை.

அதேபோல உடல் உழைப்புள்ளவர்கள், படிப்பு சம்பந்தமான, அலுவலக சம்பந்தமான வேலை எது வந்தாலும் 'எனக்கு என்னங்க தெரியும்? நான் கிராமத்து ஆள். மம்புட்டி கொடுத்தீங்களானால் கொத்துவேன், மூளை வேலை ஒண்ணும் வராது படிக்கலிங்க!' என்கிறார்கள். இது பேதமை.

நம்மால் முடியாதது என்பதில்லை; நாம் முயன்று பார்க்கவில்லை என்பதுதான் உண்மை. 'முடியும்; முயல்வேன்' என்று மனத்தைத் திடப்படுத்தாதது தான் நமது குறை.

பொதுவாக காரியங்கள் முதலில் மலைப்பாகத்தான் தோன்றுகின்றன.

ஒன்பதாவது வகுப்பில் ஆங்கில இலக்கணப் புத்தகம் ஒன்றைப் பாடமாக வைத்தார்கள். ரென் அண்டு மார்ட்டின் என்பவர்கள் எழுதிய இலக்கணப் புத்தகம், சுமார் 400 பக்கங்கள். அதுவரை அத்தனை பெரிய புத்தகத்தைப் பார்த்தறியாத நான், இவ்வளவு பெரிய புத்தகத்தை, அதுவும் ஆங்கிலத்தில் படித்து முடிப்பது என்பது எப்படி? எங்கோ தவருக வந்து மாட்டிக் கொண்டோமே என்று மாய்ந்து போனேன்.

ஆனுல், ஆசிரியரோ பாடத்தைத் துவங்கினுர். தினம் ஒரு பக்கம் மூன்று பக்கம் என்று கொஞ்சங் கொஞ்சமாகச் சொல்லிக் கொடுத்தார். மூன்று ஆண்டு களில் ரென் அண்டு மார்ட்டின் முடிந்துவிட்டது. இலக்கண அமைப்பு அத்துபடி.

முதலில் விஷயங்கள் மலைப்பாகத்தானிருக் கின்றன. ஆனுல் நாலுமுறை எந்தத் திட்டத்துடனும் பழகத் துவங்கிவிட்டால் நமக்குப் பயம் அற்றுப்போய் விடுகிறது. மாளிகை ஒவ்வொரு கல்லாக வைத்துத் தான் எழுப்பப்படுகிறது. கொஞ்சங் கொஞ்சமாக பூமியை வெட்டித்தான் தாதுப் பொருள்கள் எடுக்கிருர் கள். கொஞ்சங் கொஞ்சமாகத் தோண்டித்தான் பெட்ரோலிய எண்ணெய் எடுக்கிருர்கள். இமயமலை மீது ஏறுபவன் ஒவ்வொரு காலடியாக வைத்துத்தான் ஏறுகிருன். எனினும் முதலில் நமக்கு மலைப்பாக இருக்

கிறது. பயமாக இருக்கிறது. நமது பயத்தைப் பிறருடன் பகிர்ந்துகொண்டு அதிகப்படுத்திக் கொள்கிறோம். பிறருடைய அனுதாபத்தை எதிர்பார்த்து ஆறுதல் அடைய விரும்புகிறோம். முடியுமானால், அக்கம் பக்கம் பார்த்துவிட்டு யாரும் பார்க்காதபோது ஓடிவிட முயல்கிறோம்.

ஓட முயலாதீர்கள்!

கொஞ்சம் நில்லுங்கள்!

சற்று சிந்தியுங்கள்!

ரென் அண்டு மார்ட்டின் புத்தகத்தை எத்தனை எத்தனை லட்சம் மாணவர்கள் நமக்கு முன் படித்துத் தேறியிருக்கிறார்கள்? எத்தனை எத்தனை லட்சம் மாணவர்கள் கணக்குப் பாடத்தையும், பொறி இயலையும், மருத்துவத்தையும், கட்டடக் கலையையும் நமக்கு முன் படித்து வெளி வந்திருக்கிறார்கள்?

நாம்தானா முதலில் மிகப் பெரிய காரியங்களைச் செய்கிறோம்? இல்லை. பிறரால் செய்து முடிக்கப்பட்ட காரியங்கள்கூட 'நமக்கு' என்று வரும்போது பிரமிப்பையும், மலைப்பையும், அச்சத்தையும் ஊட்டுகின்றன.

நாம்தானா முதன் முதலில் பெரிய பணக்காரனாக வேண்டும்; பெரிய தொழில் அதிபராக வேண்டும்; வெளி நாட்டுக்கெல்லாம் நாம் உற்பத்தி செய்யும் பொருளை ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று யோசிக்கிறோம்? இல்லை. உலகில் ஆயிரமாயிரம் பணக்காரர்கள் இருக்கிறார்கள். உலகில் அத்தனை பேரும் பணக்காரர்களாக முடியும். அவ்வளவுக்கு இவ்வுலகில் நிலவள, நீர்வள, தாதுவள, மூலதனம் இருக்கின்றன.

அதனைச் சாதிக்கும் அரிய மூளையும் நம்மிடம் இருக்கிறது.

பின் ஏன் தயங்குகிறோம்?

பயம்; அச்சம்; நம்மால் முடியுமா என்ற சந்தேகம். பயமும் சந்தேகமும் நமது சாதனைகளின் ஆணிவேரை அரித்துவிடும் கரையான்கள். "பயத்தாலும் சந்தேகத் தாலும் யாரும் எதையும் சாதித்ததில்லை" என்கிறார் ஜேம்ஸ் ஆலன்.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். பயத்தாலும் சந்தேகத்தாலும் யாராவது ஏதாவது சாதித்திருக்கிறார் களா என்று. பயத்தையும் சந்தேகத்தையும் மேவி வரு வதில்தான், நம்மால் முடியும் என்று நம்புவதில்தான் சாதனை வெளிப்படுகிறது.

"நம்மால் முடியும் என்று நம்பும்போது ஆயிரம் ஆயிரம் கடவுள்கள் நமக்குத் துணை வருகிறார்கள். இயற்கையின் எல்லா சக்திகளும் நமக்குத் துணை நிற்கின்றன" என்று எழுதுகிறார் அறிஞர் ஆலன். "பயமெனும் பேய்தனை ஒழிப்போம்" என்று சும்மாவா பாடினார் கவிஞர் பாரதி?

நமது தமிழ் நாட்டிலே, சம்பளத்தை வாங்கிக் கொண்டு வேலை பார்க்கும் இனம்தான் அதிகமாயிருக் கிறது. பஞ்சாப், குஜராத் போன்ற மாநிலங்களில், சுய திறமையில் நம்பிக்கை வைத்துத் தொழில் செய்யும் மக்கள் அதிகமாயிருக்கிறார்கள்.

ஏன் இந்த வித்தியாசம்?

நாம் எல்லோரும் ஒரே விதமான மக்கள்தான். ஒரேவிதமான கல்வியைப் பெற்றிருக்கிறோம். ஒரே

தமான வாய்ப்புக்கள் இருக்கின்றன. நாம் வளர்க்கப் பட்ட விதத்தில் எங்கோ கோளாறு இருக்கிறது. நமக்குக் கல்வி புகட்டப்பட்ட முறையில் எங்கோ கோளாறிருக்கிறது. நமக்கு முன்மாதிரியாகத் தமிழ் நாட்டிலிருந்து ஒரு காலத்தில் எல்லோரும் ஐ. ஏ. எஸ்ஸாக போனார்களே... அந்த முன்மாதிரி நம்மை எங்கோ இழுத்துச் சென்றுவிட்டது. இன்றைய தமிழ் நாட்டில், மாபெரும் லட்சியமாக, சினிமாவையும் அரசியலையும் நம் இளைஞர் முன் வைத்துப் பத்திரிகைகள் டமாரம் கொட்டுகின்றனவே... கிசுகிசுக்கின்றனவே... அந்த வழி நடத்துவோரின் சிந்தனையிலே கோளாறு ஏற்பட்டு விட்டது.

இந்தச் சமூகத்தை—சமூகத்தில் நமக்கு வழி காட்டுவோரை முதலில் தூக்கில் போட வேண்டும் என்று உறுமுகிறீர்களா? சரி.

ஆனால், அவை எல்லாம் புற விஷயங்கள். நம்மைச் சுற்றி இருக்கும் சூழ்நிலைகள். நமது மனம் மட்டும் நம்மால் முடியும், நாம் இப்படிப் போகக் கூடாது, என் எதிர்காலத்திற்கு நான் ஒரு பஞ்சாபி போல, குஜராத்தி போல சுய சம்பாத்தியத்தில் இறங்கி தொழில் செய்வேன் என்று தீர்மானித்துவிட்டால், நம்மை யாரும் எதுவும் செய்ய முடியாது.

அவர்கள் குற்றவாளிகள். அது வேறு விஷயம். முதலில் நாம் குற்றவாளிகள். ஏனெனில், அவர்கள் நம் வாழ்க்கையை அமைக்குமாறு நம் சிந்தனையில் இடம் கொடுக்கிறோமே, அந்த நாம்தான் குற்றவாளிகள். அவர்கள் காட்டுகிற கவர்ச்சி விஷயங்களைப் பின்பற்றி நாம் சிந்தனையைச் செலுத்துகிறோமே, அந்த நாம்தான் குற்றவாளிகள்.

நாம் நம் உள்ளத்தால் மாறும்போது, தெளிவும் தைரியமும் பெறும்போது, நம்மால் முடியும் என்ற மனோபாவம் பெறும்போது நாளை உலகின் பத்திரிகை ஆசிரியர்கள், சினிமாக்காரர்கள், வேறு விதமாக ஜாலராப் போடுவார்கள். மாற்றம்—நம் வாழ்விலும் சரி, புற உலகிலும் சரி, ஒரு 'ஐடியா'விலிருந்துதான் பிறக்கின்றன. அந்த எண்ணத்தின் உறுதியிலிருந்து தான் மலருகின்றன. அவை அனைத்தும் மனிதன் என்ற நம்மிடமிருந்துதான் புறப்படுகின்றன. நம் வாழ்க்கை வளம்பெற நாடு நலம்பெற நம் எண்ணங்களை மாற்றி அமைப்போம். முடியும் என்று நம்புவோம்.

# நமது முடிவுகளும் தன்மானமும்

முடிவெடுக்கும்போது நாம் பல விஷயங்களையும் ஆராய்கிறோம். 'இது எனக்குப் பிடித்திருக்கிறது' என்று ஒரு எண்ணத்தை மட்டும் கொண்டு எதையும் தீர்மானித்து விடுவதில்லை.

நமது முடிவெடுக்கும் தன்மையைப் பல விஷயங்கள் பாதிக்கின்றன ...

'விஷயங்கள் இதேபோல என்றும் ஓடிக்கொண்டிருக்கும்' என்று நம்பி நாம் எதையும் செய்ய முடியாது. தேர்தலில் ஜெயித்து வந்த தலைவனிடம் மக்கள் அபிமானம் சுமார் ஆறுமாத காலத்திற்கு நீடிக்கிறது. இதை 'ஹனிமூன் பீரியட்' என்று சொல்கிறார்கள். 'மக்களது நம்பிக்கை எனக்கிருக்கிறது' என்று தலைவன் கேளிக்கைகளில் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்க முடியாது. எங்காவது ஏற்படும் கலவரம், அடிதடி, போராட்டம் திடீரென்று நிலைமையை மாற்றிவிடும். மாறுதலுக்கு எப்போதும் நாம் தயாராக இருக்க வேண்டும். மாறுதலை ஏற்றுக் கொள்ள வேண்டும். மாறுபட்டுவரும் சூழ்நிலையை உணர்ந்து முடிவெடுக்க வேண்டும்.

மாறிவரும் சூழ்நிலையைப் போல எல்லாவித முடிவுகளிலும் ஒரு நிச்சயமற்ற தன்மை நிலவும். 'இது இப்படித்தான் போகும்' என்று உறுதி செய்து கொண்டு நாம் முடிவெடுக்க முடியாது. ஒரு அனுமானத்தில்தான் நாம் முடிவெடுத்துப் போய்க் கொண்டே இருக்க வேண்டும்.

நமது முடிவெடுக்கும் தன்மையைப் பாதிக்கும் மற்ெறாரு விஷயம், நமக்கிருக்கும் வரையறைகள்; கட்டுப்பாடுகள்; குறைபாடுகள். 'இப்படி ஒரு கட்டுப் பாட்டுக்குள்—நெருக்கடிக்குள் மாட்டிக் கொண்டேனே' என்று ஏங்காமல், அதை எதிர்த்துப் போராடி நேரத்தையும் சக்தியையும் செலவழிக்காமல், 'இருக்கும் நிலையில், இந்தச் சூழ்நிலையில் நாம் என்ன செய்ய லாம்?' என்று எண்ணிச் செயல்படவேண்டும்.

அதேபோல 'அதிர்ஷ்டம்' என்பதும் எதிர்பாராது அமையும் சம்பவங்களும் நமது முடிவைப் பாதிக் கின்றன. ஆனால், நாம் அதிர்ஷ்டத்திற்காகக் காத் திராமல் செயல் பட்டுக்கொண்டே இருக்க வேண்டும். நமது முடிவுகளை சமூகச் சூழ்நிலை பல சமயம் நெருக்கக் கூடும். முடிவெடுப்பதில் சில சமயம் அவசரம் தேவைப் படும். பல தலைவர்கள் தங்கள் வாழ்நாள் வரை விஷயங் களைத் தள்ளிப் போடலாம் என்று எண்ணிச் செயல் படுகிறார்கள். இவர்களால் அந்தத் தலைமுறைக்கே முன்னேற்றமில்லாது போய்விடுகிறது.

முடிவெடுப்பவன் எல்லாவற்றையும் ஆராய்ந்து தர்க்கித்துக் கொண்டிருக்கும் தத்துவ ஞானியல்ல. முடிவெடுப்பவன் நடைமுறைவாதி. அவன் இவ்வுலகில் வாழ விரும்புகிறான்; வாழ்வதை சிறப்பாக வாழ விரும்புகிறான். அதற்காக என்னென்ன செய்ய வேண்டுமோ அதை எல்லாம் ஒழுங்காகச் செய்கிறான்; 'டக் டக்' கென்று முடிவெடுத்து மேலே போய்க் கொண்டே இருக்கிறான். அவன் செயல்திறன் கொண்டவன்.

தனி மனித வாழ்வில், இந்தக் குணம் உள்ளவன் வேகமாக முன்னேறுகிறான். சுறுசுறுப்புடன் நடந்து

கொள்கிறான். அவனைச் சுற்றிலுமுள்ள சூழ்நிலை அவன் மனோபாவத்தைப் பிரதிபலிக்கும் வகையில் துடிப்பாய் நிற்கிறது. இந்தக் குணம் ஒரு தொழில் அதிபருக்கு, வியாபாரிக்குத் தேவைப்படுகிறது. இந்தக் குணம் ஒரு அதிகாரிக்கு, ஆட்சியில் உள்ளோருக்குத் தேவைப்படு கிறது. இத்தகைய மக்கள் உள்ள சமுதாயம் தேனீ போல செயல்படுகிறது. அமெரிக்காவும், ஜப்பானும், சிங்கப்பூரும் அத்தகைய சமுதாயங்கள்.

நமது ஊரில் ஓர் அலுவலகத்தில் ஒரு விஷயத்தில் முடிவெடுக்க எத்தனை பேர் ஒரு 'பைலி'ல் கையெழுத் துப் போட வேண்டும் என்று கவனியுங்கள். 'ஊர் கூடிச் செக்குத் தள்ளுவது' என்பார்களே, அதுபோல நமது சமுதாயம் இயங்குகிறது. ஆட்சியில் இருப் போரும் சரி; இதனால் அவதிப்படும் பொதுமக்களும் சரி யாரையும் தட்டிக் கேட்பதில்லை. கிராமத்தில் கிணறு வெட்டுகிறோமென்றால், கிணறு வெட்ட அனுமதி, கடன் என்று வாங்கி முடிவதற்குள் பல மகசூல் காலங்கள் வந்து போய் விடுகின்றன.

நாம் சுலபமாக 'சட் சட்'டென்று முடிவெடுக்க முடியாததால் விஷயங்கள் நாட்டில் எருமை மாடு போல் நகர்கின்றனவா? இல்லை, இதைத் தட்டிக்கேட்க ஆளில்லாததால் வீஷயங்கள் குளத்தில் ஊறிய மட்டை ஊறி நாற்றமெடுத்து கொண்டிருக்கிறதா என்று கேட்டால், பின்னால் சொன்னதுதான் உண்மை யாக இருக்கும்.

'நம் விஷயம்' என்று வரும்போது, நாம் எல்லோரும் வேகமாகச் செயல்படுகிறோம்; செயல்பட விரும்புகிறோம். பொதுக் காரியங்கள் என்று வந்ததும் 'நமக்கென்ன?' என்ற அசிரத்தை பலருக்கு ஏற்படு

கிறது. ராமன் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டால் என்ன என்று நினைக்கிறார்கள். விரைவாக முடிவெடுப்பதும் செயல்படுவதும் பெரிய காரியமல்ல. நம்மைப் பிடித்திருக்கும் கொடுமை, நாட்டு மக்களிடையே இருக்கும் தைரியமின்மைதான். தட்டிக் கேட்கும் துணிவு இல்லை. ஆட்சி செய்வோருக்கும் துணிவில்லை. கீழே பொதுமக்களாக வாழ்வோருக்கும் அந்தத் துணிவு இல்லை. இரு தரப்பாரும், தேங்கிச் செயல்படும் ஓர் அரசாங்க அமைப்பைக் குறை கூறிக் கொண்டு நிகழ்காலத்தைக் கோட்டை விடுகிறார்கள்; நமது வளர்ச்சியையும், முன்னேற்றத்தையும் கோட்டை விடுகிறார்கள்.

நினைவு தெரிந்ததிலிருந்து வறுமையில் வாடி வாடிப் பழக்கப்பட்ட ஓர் இனம், 'ஒரு சாண் வயிறுக்காக எதையும் செய்வேன்' என்று ஏற்றுக் கொள்ளப் பழகிவிட்டதோ என்று நான் யோசிப்பதுண்டு. நமது வறுமையும் இல்லாமையும்தான் மனிதனின் முதுகெலும்பை ஒடித்து மனிதனை மண் புழுவாக நெளியச் செய்துவிட்டதோ என்று நான் சிந்திப்பதுண்டு.

வறுமை இருக்கலாம். கஷ்டங்கள் இருக்கலாம். ஆனால், மனிதன் தன் தனித்தன்மையை, சுயமரியாதையை, தன்மானத்தை இழந்து வாழ முடியாது. ஒரு வேளை நம் இனத்திற்குத் 'தன்மானம்' மிகமிகக் குறைவோ? அதனால்தான் பெரியார் தோன்றிச் சுய மரியாதை, தன்மானம் என்று நமக்கு உபதேசித்தாரோ? தன்மானம் இல்லாத இனம் என்பதால்தான் தன்மான இயக்கம் இங்கே முளைத்ததோ என்று நான் யோசிக்கிறேன்.

# தடைகள் மீறுவதற்காக அமைக்கப்பட்ட படிகள்...

சமூகத்தில் ஏற்படும் மாறுதல்கள் நம் முடிவு களைப் பாதிக்கின்றன.

பழைய காலத்தில் 'பெண்களின் இடம்' பற்றி மக்கள் கொண்டிருந்த அபிப்ராயம்—முடிவு எல்லாம் வேறு. பெண்களைப்பற்றி இன்றைய சமுதாயம் எடுக்கும் முடிவு வேறு.

அமெரிக்காவில் கல்யாணம் ஆகாத பெண்கள் குழந்தைகளைப் பெற்றுக்கொண்டால் சீந்துவாரில்லாத ஒரு நிலைமை இருந்தது. இன்றோ பல பெண்கள் திருமணம் ஆகாமல் குழந்தைகளைப் பெற்றுக்கொண்டவர்கள். தங்கள் குழந்தைகளைத் தாங்களே எடுத்து வளர்க்க ஆசைப்படுகிறார்கள்.

## சமூக நியதிகள் மாறுகின்றன!

ஐந்து ஆண்டுகளுக்கு முன் நமக்கு எது பிடித்தது, இப்போது எது பிடிக்கிறது என்று ஆராய்ந்தோமானால் நாம் எத்தகைய மாறுதலகளைக் கடந்து வந்திருக்கிறோம் என்பது புரியும்.

மாறுதல்கள் பொதுவாக வளர்ச்சியின் முன்னோடிகள். நாம் மாறுதலுக்கு அஞ்சக் கூடாது. உலகம் இப்படியே போய்க் கொண்டிருக்கும் என்று எண்ணி முடிவெடுக்கக் கூடாது. மாறிவரும் சூழ்நிலைகளை எதிர்பார்க்கவும் அதற்கேற்ப இயங்கவும் நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

ஒரு கட்சியில் ஓர் இளைஞன் வேகமாக முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறான் என்றால் அவனைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டி ஊக்குவிக்க வேண்டும். மாறாக அவனை அப்புறப்படுத்தித் தன் பதவியைப் பத்திரப் படுத்த நினைப்பவர்கள், தங்கள் பதவியை விரைவில் பறிகொடுக்கிறார்கள். மாறுதல்களைக் கவனிக்க வேண்டும்.

திருமணத்திற்குத் தயாராயிருக்கும் ஓர் இளைஞனிடம் அல்லது ஒரு பெண்ணிடம் பெற்றோர் தங்கள் காலத்து அனுபவங்களுக்கேற்ப இளைஞர்கள் செயல் படவேண்டும் என்று எதிர்பார்ப்பது மடமை. முடி வெடுப்பவன் யார் என்பதை நாம் முதலில் தீர்மானிக்க வேண்டும். அவரவர் வாழ்க்கையைப் பாதிக்கும் விஷயங்களை, அவரவர்கள்தான் தீர்மானிக்க வேண்டும்.

'மாறுதல்கள் சமூகத்திலும் சூழ்நிலையிலும் ஏற்படு கின்றன' என்று நாம் நம் முடிவுகளை மாற்றிக் கொண்டே இருக்க முடியாது. தங்கள் முடிவுகளை அடிக்கடி மாற்றிக் கொண்ட அரசியல்வாதிகளான மதியழகனையும், நெடுஞ்செழியனையும், மனோகரனையும் வாசகர்கள் நினைவில் கொள்ள வேண்டும். அடிப் படையை நீங்கள் அடிக்கடி மாற்றிக் கொண்டிருப்பீர் களானால் உங்கள் வாழ்வின் பலம் ஈனமடையும்.

மாறி வரும் சூழ்நிலையையும், நாட்டு மக்களின் ருசியும், ஆர்வமும், தேவையும் எந்தத் திசையில் செல் கிறது என்பதைக் கணிக்கும் தன்மையும் ஒரு தலைவனுக்கும், வியாபாரிக்கும் தேவைப்படுகின்றன. மாறுதல்களைக் கணிக்கும் தன்மையால தனிமனிதன் வாழ்க்கையில் வளமடைய பல வாய்ப்புக்கள் உண்டாகின்றன.

## எப்படிச் சமாளிப்பது?

முடிவெடுப்பவர்கள் அதிகம் திணறுவது, ஒரு நிச்சயமற்ற நிலை பற்றித்தான். எப்படி முடிவெடுப்பது என்று புரியாத—ஒரு நிச்சயமற்ற நிலை.

நீங்கள் விரும்பிய கல்லூரியில் படிக்க இடம் கிடைக்காமல் போகலாம். நீங்கள் விரும்பிய கம்பெனியில் வேலையில்லாமல் போகலாம். நீங்கள் விரும்பிய ஆணோ பெண்ணோ உங்கள் வாழ்க்கைத் துணையாகக் கிடைக்காமல் போகலாம். இவற்றில் பல நம்மை மீறியன. நம் சக்திக்குள் நாம் என்னென்ன செய்ய முடியுமோ அவற்றைச் செய்துவிட்டு முடிவில் 'ஆண்டவன் விட்ட வழி' என்று ஏற்றுக் கொண்டு செயல்பட வேண்டும்.

ஒரு காரியம் துவங்கும்போது நமது நோக்கமே உறுதியில்லாததாக — நிச்சயமற்றதாக இருக்கலாம். அதேபோல நாம் ஒரு நல்ல முடிவுக்கு வந்துவிட்டோம் என்று எண்ணிச் செயல்படும்போது அதன் விளைவுகள் நல்லவையாக இல்லாமல் முடியலாம். அத்தகைய சந்தர்ப்பங்களில் ஒவ்வொரு விஷயமும் வேறு எந்த விதமாக முடியலாம் என்று அறிய வேண்டும். அவற்றைக் கற்பனையில் சமாளிக்க முயல வேண்டும். நாளைக்கு வேலை போய்விட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள். என்ன செய்யலாம் பிழைக்க என்று பல கோணங்களில் ஆராயுங்கள். ஒரு மூன்று தொழில்களைத் தேர்ந்தெடுங்கள். அத்தகைய தொழில்களைத் துவங்க மனத்தில்—தாளில்—திட்டமிடுங்கள். இப்படி எல்லா பிரச்னைகளிலுமுள்ள நிச்சயமற்ற தன்மையை நாம் சமாளிக்கக் கற்றுக் கொள்ளலாம்.

இதன்மூலம் நாம் என்ன செய்கிறோம். நாம் எதிர்பாராத முடிவுகள், நம்மைத் திடீரென்று தாக்கும் போது இத்தகைய கற்பனை எதிர்பார்ப்புகள் நமக்கு ஒரு சக்தியைத் தருகின்றன. மனமானது மலைத்து, மரத்து, முடமாகிப் போவதைத் தடுக்க நமது கற்பனைகள் உதவுகின்றன.

மூன்றாவதாக, முடிவெடுக்கும்போது நாம் பல கட்டுப்பாட்டுக்குள் இருந்து செயல்பட வேண்டி இருக்கிறது. உதாரணமாக, நீங்கள் கல்லூரியில் படிக்க ஆசைப்படலாம். ஆனால் உங்களிடம் கல்லூரிக்குப் பணம் கட்ட வருமானம் இல்லாமல இருக்கலாம்; உங்களது மதிப்பெண்கள் குறைவாக இருக்கலாம்; அல்லது உங்களுக்கு வயதேறி இருக்கலாம். ஆனால் சரியாகத் திட்டமிட்டால் இந்தக் குறைபாடுகள் உங்கள் ஆசையைத் தடுக்க முடியாது.

## நமது குறைபாடுகள் ஏராளம்

"காலில் செருப்பில்லை என்று குறைபட்டுக் கொண்டிருந்தேன். அங்கே காலில்லாதவனைச் சந்தித்தேன். ஆண்டவனே! செருப்பு இல்லை என்று நான் குறைப்படுவதற்கு என்னை மன்னித்துவிடும். எனக்கு அற்புதமாக இரு கால்களைக் கொடுத்திருக்கிறாயே, நடக்க, ஓட, விளையாட. அதற்கு உனக்கு நன்றி செலுத்துகிறேன்" என்று கூறியவனின் கதையைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

ஊருக்கு எதிராகப் பெரிய மலை இருந்தது. கையாலாகாதவனோ, "பெரிய மலை இருக்கிறதே என் செய்வேன்;" என்று குறைப்பட்டுக் கொண்டிருந்தான்.

மற்ருெருவனே மலைமீது ஏறிக் கொண்டிருந்தான். மற்ருெருவன் மலையைக் குடைந்து கொண்டிருந்தான். மற்ருெருவன் மலையைப் பிளந்து கொண்டிருந்தான்.

## தடைகளெல்லாம் தடைகளல்ல

தடைகள் மீறப்படுவதற்காக வைக்கப்பட்ட படிக்கட்டுகள்.

வெள்ளைக்காரனிடமிருந்து ஆட்சியைப் பெற முடியாது என்று சொல்லிக் கொண்டிருந்த காலத்தில் காந்தி தோன்றினார். பாகிஸ்தான் என்பது வெறும் கற்பனை என்று ஹிந்து மகா சபை கூறிக் கொண்டிருந்த காலத்தில் ஜின்னுதோன்றினார். பங்களா தேசத்தைத் தனியாக வாழவிட மாட்டோம் என்று பாகிஸ்தான் உறுமிக் கொண்டிருந்தபோது, முஜிபுர் ரகிமான் தோன்றினார். தனித் தமிழ்நாடு பற்றி யாருக்கும் நினைவே இல்லாதபோது பெரியார் தோன்றினார். திராவிட நாடு கேட்டார். காந்தியும், ஜின்னுவும், முஜிபுர் ரகிமானும் அவரவர்கள் லட்சியத்தை அடைந்தபோது ஏன் பெரியார் தோற்ருர்? எண்ணிப் பாருங்கள்.

எண்ணங்களால் முடமாக்கப்பட்ட மக்கள் நிறைந்ததுதான் தமிழகமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

# வாழ்க்கை நிர்ப்பந்தங்களால் நிறைந்ததல்ல!

**வா**ழ்க்கை நம்மை இடறிவிழச் செய்யும் கற்கள். உண்மையிலேயே நமது முன்னேற்றத்திற்காக அமைக்கப்பட்டிருக்கும் படிக்கட்டுகள். வாழ்வில் எத்தனையோ நிர்ப்பந்தங்கள், நெருக்கடிகள். சில சமயம் நாம் ஒரு சில எல்லைக்குள்ளிருந்து—சில வரையறைக்குள்ளிருந்துதான் செயல்பட வேண்டி இருக்கிறது.

நமக்கு ஏற்பட்டிருக்கும் வரையறைகள், நம்மை நிறுத்த முடியாது. நம்மால் அதை மீற முடியும். இதை நம் மனத்தின் அடித்தளத்தில் போட்டுச் செயல்பட வேண்டும். "நீ நோஞ்சான் பேர்வழி. உன்னால் ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட முடியாது" என்று சொன்னார்கள். அவனே அதைச் சவாலாக எடுத்துக் கொண்டான். தினமும் ஓடினான்; வியர்க்க வியர்க்க ஓடினான்; கடைசி மூச்சுவரை ஓடினான். அவன் அடுத்த ஆண்டு ஓட்டப் பந்தயத்தில் முதலாவதாக வந்தான் என்ற சொல்லவும் வேண்டுமா?

வரையறைகளை, வாழ்க்கையின் நிர்ப்பந்தங்களைப் புரிந்துகொள்ளுங்கள். ஆனால், அதனால் கட்டுப் படுத்தப் படாதீர்கள். அதை மீறக் கற்றுக் கொள்ளுங் கள். வெள்ளைக்காரன் ஆண்டபோது வெள்ளைக் காரனிடமிருந்து சுதந்திரம் பெற முடியாது என்று எல்லா மிதவாதிகளும் சொன்னார்கள். இந்தப் பரந்த தேசத்து மக்களை ஒன்றுபடுத்த முடியாது என்று படித்தவர்கள் பேசினார்கள் ஆனால் ஓர் இளைஞரின்

மனத்தில் மட்டும் இந்த வாதங்கள் சரியான வாதங்களாக—மீற முடியாத வரையறைகளாகப் படவில்லை இந்த இளைஞரின் பெயர் மகாத்மா காந்தி. அதே போலத்தான் சுயாட்சி பற்றியும் தமிழ் நாட்டில் பேசினால் 'முடியாது' என்று சொல்பவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் எண்ணத்தினால் முடமானவர்கள். அவர்கள் தங்களது எண்ணத்தின் கையையும், காலையும், சிறகையும் தானே ஒடித்துப் போட்டு விட்டு முடமாகி ஆகாயத்தை நோக்குகிறார்கள்.

நிர்ப்பந்தங்களைக் கண்டு அஞ்சாதீர்கள்! நமது நாட்டுக்கு அதிக உரிமைகள் வேண்டும் என்று ஆசிரியர்கள் எல்லாம் ஒரு நாள் ஸ்ட்ரைக் செய்தால் என்ன ஆகும்? போலீஸ்காரர்கள் பிடித்துக் கொண்டு போய்விடுவார்களா? சிறையில் போட்டு விடுவார்களா? ஏன் பயந்து போய் உட்கார்ந்திருக்கிறோம்? சுயாட்சியை வெள்ளித் தட்டுமீது வைத்துக் கலைஞரிடமோ, நாட்டுத் தலைவரிடமோ அளிக்கப் போகிறார்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோமா?

ஒரு மனிதன் தன் உள்ளத்தில் தன் லட்சியத்தைத் தீயாக வளர்த்துக் கொண்டிருப்பானேயாகில், அந்தத் தீ எல்லா எதிர்ப்புகளையும், எல்லாத் தடைகளையும், சுட்டுப் பொசுக்கிவிடும்.

ஆனால் பெரும்பாலோர் என்ன சொல்லிப் பழக்கப் பட்டிருக்கிறோம்? நமது வரையறைகளை—நிர்பந்தங்களைக் கூறிப் பெரிதுபடுத்தி அதை நாமே நம்பக் கற்றுக் கொண்டிருக்கிறோம்.

வாழ்க்கையில் முன்னேற ஆணாகத்தான் பிறந்திருக்க வேண்டும் என்ற நியதி இல்லை. வாழ்க்கையில்

முன்னேறக் கல்லூரிக்குப் போயிருக்க வேண்டும் என்று கட்டாயம் இல்லை.

இவை எல்லாம் நம்மை முடக்கிக்கொள்ள நாமாக ஏற்படுத்திக்கொண்ட நிர்ப்பந்தங்கள்.

முதலில் நாம் மனத்தால் மீறப் பழகிக்கொள்ள வேண்டும். பின் தடைகளை மீற உழைக்க வேண்டும். கற்பனை வேண்டும்; துணிச்சல் வேண்டும். துணிச்சலும் கற்பனையும் கொண்ட லட்சியவாதிகள் தான் இவ்வுலகை நிர்மாணித்திருக்கிறார்கள்.

'ஆண்டவன் மனிதனுக்கு இறக்கைகளைக் கொடுக்கவில்லை' என்று கூறி, பறக்காமல் இருக்கவில்லை, ரைட் சகோதரர்கள்? இறக்கை இல்லாமலேயே பறக்க முயன்றார்கள்.

'புவி ஈர்ப்பு சக்தியை மிஞ்ச முடியாது' என்று கூறிக் கொண்டு சந்திரமண்டலப் பயணத்தை வெறும் கற்பனை என்று கூறிச் சும்மா உட்கார்ந்திருக்கவில்லை வானவெளி விஞ்ஞானிகள்.

இப்படி மகத்தான சாதனைகள் உலகில் சாத்தியமாயிருக்கும்போது தமிழ் நாட்டின் ஒரு மூலையிலே உட்கார்ந்து கொண்டு, 'இது முடியாது, அது முடியாது' என்று நாம் ஒவ்வொன்றுக்கும் சமாதானம் கூறிக்கொண்டிருந்தோமானால் நாம் எந்த மனிதர்களில் சேர்த்தி?

நான் புதிதாக ஒரு கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்த சமயம். எங்கள் கம்பெனியில் ஒரு 'முகாரி ராகம்' பாடுபவர் இருந்தார். நான் காலையில்

கம்பெனிக்குப் போனதும், "இது நடக்கவில்லை. அது ஒடிந்து போயிற்று. அவர் அப்படிச் சொன்னார். இன்று மோசமான நாள்" என்று தினம்தினம் மனிதர் ஒப்பாரி வைப்பார். முதலில் அந்த மனிதரை மரியாதை யோடும் அனுதாபத்தோடும் அணுகினேன். முடிவில் அவருக்கிருந்த பயத்தை என்னிடமும் அவர் ஏற்படுத்தி விட தினமும் முயன்றதைக் கண்டேன்.

சிலநாள் கழித்து அவரிடம் கூறினேன். "இன்று நல்லநாள். இதைப்போன்ற நல்லநாள் என்றுமே இருந்த தில்லை. 'முடியாது!' என்று இனி என்னிடம் கூறாதீர் கள். எப்படி அதை முடிக்கலாம் என்ற வழியுடன் வாருங்கள். நீங்கள் அப்படி வராவிட்டால் உங்களை விட்டுவிட்டு, முடிக்கக்கூடிய மனோபாவம் கொண்ட வர்களை நாடி கம்பெனி போய்க் கொண்டிருக்கும்" என்றேன். மனிதர் அதிர்ச்சிக்குள்ளானார். விரைவில் விழித்துக் கொண்டார்.

இப்போதெல்லாம் அவரைக் காலையில் பார்க்கும் போது, "சார், இதை அப்படிச் செய்யலாம். இங்கி ருந்து ஆர்டர் வந்திருக்கிறது" என்ற நல்ல செய்தி களுடன் நல்ல மனோபாவத்துடன் பேசி வருகிறார்.

"என் மனைவி அப்படி! என் தந்தை அப்படி!" என்று பல வாசகர்கள் கடிதம் எழுதுகிறார்கள். "பிறருடைய வார்த்தைகள் உங்களது உற்சாகத்தை, உங்களுடைய முயற்சியை—ஒரு நாளும் குறைத்துவிட முடியாது. நீங்கள் அனுமதித்தாலொழிய" என்று நான பதிலளிப்பதுண்டு.

பிரச்சினை என்று வரும்போது — முடிவெடுக்கும் போது 'நிலைமை இப்படி இருக்கிறதே' என்று ஒரு

நாளும் அயர்ந்து விடாதீர்கள்! உங்களது திறமைகள் என்னென்ன என்றும், உங்களுடைய குறைபாடுகள் என்னென்ன என்றும், பட்டியல் போடுங்கள்.

'சாதிக்க விரும்பும் ஒரு ஐந்து காரியங்களைத் தேர்ந்தெடுங்கள். அவற்றை எப்படிச் சாதிக்கலாம்' என்பதைப் பற்றிய கற்பனையைப் பறக்கவிடுங்கள். நீங்கள் இன்று மனதில் விவரிக்கும் லட்சியம் நாளை வாழ்வில் நடைபெறுவது சாத்தியமாகும். கற்பனை— இடையூறுகளை எல்லாம் மிஞ்சுவது. அது பிரச்சினைகளுக்கு வழி காட்டும்.

# வாழ்க்கை நெறியும் வாழ்வின் திசையும்

**வா**ழ்வில் என்ன நெறிகளுடன் வாழ்ந்துவரு கிறோம் என்பதைப் பொறுத்து நம் முடிவுகள் அமை கின்றன.

பொதுப்பணம் நம் கையில் இருக்கும்போது, நமது வருமானம் நம் வாழ்வுக்குப் போதாமல் இருக்கும் நிலையில் மனிதர்கள் பல்வேறு விதமாக நடந்து கொள் கிறார்கள். ஓர் அரசியல்வாதி சொல்கிறான்: 'எல்லாரும் தான் பொதுப் பணத்தைச் சூறையாடுகிறார்கள்; நான் திருடுவது தப்பல்ல' என்று. ஓர் அரசியல் தலைவன் சொல்லிக் கொள்கிறான்: 'நான் எனக்காகவா திருடு கிறேன்? இல்லை. கட்சிக்காகப் பொதுப்பணத்தைத் திருடுகிறேன். கட்சி வளர்ந்தால்தானே நான் பதவியி லிருந்து மக்களுக்கு நன்மை செய்ய முடியும்?' என்று. தாலூகா ஆபீஸ் குமாஸ்தாவிலிருந்து பாங்கு நிர்வாகி வரை ஒரு நெருக்கடி வரும்போதுதான் அவர்கள் வாழ்க்கை நெறிகள் புலப்படுகின்றன.

மகாத்மா காந்தி தன் மனைவி கஸ்தூரிபாயிடம் 'நான் செய்த பொதுத்தொண்டை மெச்சித்தான் இந்த தங்கச் சங்கிலிகளை எனக்குப் பரிசாகக் கொடுத்தார்கள். நீ என் மனைவியாக எனக்குப் பணி செய்ததன் மூலம் அந்தத் தங்கச் சங்கிலி உனக்கு உரிமை உடையது என்று வாதாடுகிறாய். இந்தத் தங்கச் சங்கிலி பொதுப் பணம். இது பொதுமக்கள் வாழ்க்கைக்காகத்தான் செலவழிக்கப் பட வேண்டும். என் சொந்த வாழ்க்கைக்

காக அல்ல'' என்றார். அவர் அப்படி ஓர் உயர் தலைவன்!

அவர் எடுத்த முடிவை அவர் வாழ்ந்து காட்டிய நெறிகள் உருவகப்படுத்தின.

திருவள்ளுவர் கூறினார். 'இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகு இயற்றியான்' என்று. 'பிச்சை எடுத்துத்தான் வாழவேண்டுமானால் இந்த ஊர் உலகம் அழியட்டும். கடவுள் அழியட்டும். தீ வையுங்கள் அந்த நாட்டை' என்று பொருள்படக் கூறினார். திருவள்ளுவர் உயர்ந்த லட்சியங்களைக் கொண்டவர். மகாத்மா காந்தி உயர்ந்த லட்சியங்களைக் கொண்டவர். பாரதி மிக உயர்ந்த லட்சியங்களைக் கொண்டவர். 'கல்கி' என்ற மாபெரும் எழுத்தாளர் மகத்தான லட்சியங்களை நாட்டு மக்கள் முன் வைத்தார். அதை வாழ்ந்து காட்டினார். ஆனால், பல தலைவர்களோ இரந்து பிச்சை கேட்பது சிறுமையல்ல; உயிர் வாழ்வதுதான் முக்கியம் என்று வாழ்கிறார்கள்.

குதிரையும், கழுதையும் தொலைவிலிருந்தே பார்க்கும் போது குதிரை போலத்தான் தோன்றுகிறது. அருகில் சென்று பார்க்கும்போதுதான் குதிரைக் குட்டி எது, கழுதை எது என்று புரிகிறது. அதுபோல சாதாரண நாட்களில் நாம் எல்லாரும் தத்துவங்களைப் பேசிக் கொண்டும் ஊர், உலகத்தைக் கண்டனம் செய்து கொண்டும் பெரிய மனித வேடங்களுடன் வாழ்கிறோம். நெருக்கடி, சிக்கல், பிரச்சினை என்று வரும்போதுதான் மனிதனின் சாயம் வெளுக்கிறது. அடிப்படையில் அயோக்கியனாயிருப்பவன் தன் வேஷத்தைக் காட்டுகிறான். அடிப்படையில் நாணயமாயிருப்பவன் புடம் போட்ட பொன் போல ஒளி விடு

கிறுன். அதனுல்தான் போலும், 'மக்களே போல்வர் கயவர்' என்றுர் வள்ளுவர்.

கயவர்களும், அயோக்கியர்களும், திருடர்களும் பார்ப்பதற்கு மக்கள் போலத்தான் இருப்பார்கள். அவர்கள் எடுக்கின்ற முடிவுகளும், செய்கின்ற செயல்களும் தான் அவர்களேக் 'கயவர்' என்று காட்டிக் கொடுக்கும் என்று கூறுகிறுர் வள்ளுவர்.

'ஒரு தலேவன் எடுக்கும் முடிவுகள் அவன் எந்த நெறிகளுடன் வளர்க்கப்பட்டான் என்பதைப் பிரதிபலிக்கின்றன.'

லெனின் ரசிகத்தன்மையில்லாத—கலே, ஓவியம், சிற்பம், இசை, நாட்டியம், நாடக ரசிகத்தன்மை இல்லாத ஒரு குடும்பத்தில் வளர்ந்தார். பின்னுல் கம்யூனிச சித்தாந்தத்தில் தலேவனுனதும், 'கலேகள் எல்லாம் பொய் என்றும் அவை பணக்காரரின் சுகபோக சின்னங்கள்' என்றும் சாடினுர். ஒரு மனிதன் வளர்ந்த விதம் எப்படி கம்யூனிசக் கொள்கையையே பாதித்தது என்று கவனியுங்கள்.

எந்த விஷயத்தைப் பற்றியும் நீங்கள் எடுக்கும் முடிவில் முழுமையாக நீங்கள் உங்களேப் பார்க்கலாம். உங்களது தனித்தன்மையின் முத்திரை உங்கள் முடிவில் இருக்கிறது. உங்கள் ஆசைகளுக்கேற்ப கொள்கைகளுக்கேற்ப நீங்கள் எடுக்கும் முடிவுகளால் உங்கள் முடிவு தனித்தன்மையைப் பெறுகிறது.

'இப்படி முடிவெடுத்தால்தான் பிறருக்குப் பிடிக்கும்' என்று நீங்கள் விஷயங்களேத் தீர்மானிக்கிறீர்களா அல்லது 'இது என் லட்சியம். நான் நாணயமாக வாழ்பவன். பிறருக்குத் தீங்கு செய்ய விரும்பாதவன்.

எனக்குத் தன்மானம்தான் பெரிது' என்று எண்ணு கிறீர்களா என்பதைப் பொறுத்து நீங்கள் எடுக்கும் முடிவுகள் அமைகின்றன.

எனது நண்பர் போஸ்டாபீசில் சார்ட்டராக வேலை பார்த்துக் கொண்டிருந்தார். ஒருநாள், 'இது என்ன வாழ்க்கை' என்று உதறிவிட்டு எழுத்தாளராக மாறினர். 'வாழ்க்கையை நாம் குமாஸ்தாவாக வாழ்ந்து முடிக்கப் போவதில்லை' என்று கூறிக்கொண்டு வெளியேறினர் பெர்ஞட்ஷா. 'வெறும் வக்கீலாக வழக்குகளைத் தீர்த்து வைத்துக்கொண்டிருக்கப் போவதில்லை. நாட்டுக்காகப் பாடுபடப் போகிறேன்' என்று தொழிலை உதறிவிட்டு வெளிவந்தார் மகாத்மா காந்தி தென்ஞப்பிரிக்காவிலிருந்து.

கிட்டத்தட்ட முப்பது வயதுக்குமேல் பலருக்கு இந்தச் சுய சோதனை தோன்றுகிறது. இந்த வாழ்க்கையை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறேன் என்ற கேள்விகள் கிளம்புகின்றன. அப்போது, உங்கள் கொள்கைகள் என்ன என்பதும், வாழ்வில் உங்கள் லட்சியம் என்ன என்பதும், என்ன நெறிகளுடன் நீங்கள் வாழ்கிறீர்கள் என்பதும் உங்கள் வாழ்வின் திசையை நிர்ணயிக்கிறது.

# வாழ்வில் நெறிகளை மேற்கொள்ளுங்கள்

நமது வாழ்க்கை நெறிகளைப் பூரணமாக ஆராய்ந்துவிட்டு இதன்பின் நாம் முடிவெடுப்பதில்லை. நமது அறிவு, அனுபவம், சூழ்நிலை, நாம் வளர்ந்த விதம் என்ற இவை நமது வாழ்க்கையில் சில நெறிகளை ஏற்படுத்துகின்றன.

சிலர் 'பணக்காரனிடம் திருடலாம், ஏழையிடம் திருடக்கூடாது' என்று சில நெறிகளை (?) வைத்துக் கொண்டிருக்கிறார்கள். 'அவர் வெத ஆசாரம். ஆம், ஆம்லெட் மட்டும்தான் சாப்பிடுவார்' என்கிறவர்களைப் பார்த்திருக்கிறீர்களா? அப்படி ஓர் வகை.

நம் வாழ்க்கையில் சில நெறிகள் வேண்டும். இந்த நெறிகள்தான் நமது குணநலமாக நம்மைப்பற்றிக் கூறுகின்றன. இந்த நெறிகளை முன்வைத்துத்தான் நாம் சிக்கலான பிரச்சினைகளில் முடிவெடுக்கிறோம். அயோக்கியர்களைச் சந்தர்ப்பங்கள் காட்டிக் கொடுத்து விடும்.

நமக்கே அப்படி ஓர் இக்கட்டான நிலைமை வருகிறதென்றால் அப்போதுதான் நமது நெறிகளில் நமக்கு எவ்வளவு ஈடுபாடு உண்டு என்பது நமக்கே புரிய வரும்.

சில மகான்களின் நெறிகளைப் பார்ப்போம். புத்தர், 'கள் விற்றுப் பணம் சம்பாதிக்காதே' என்றார். 'பிறருடைய மூளையை, சிந்திக்கும் திறனைப் பாதிக்கும் பொருளை விற்று அதன் மூலம் வாழ முயல்வது வாழ்க்கை நெறி அல்ல' என்றார்.

'பணத்தை வட்டிக்கு விட்டு அந்த வட்டியை வாங்காதே' என்றார் இஸ்லாமிய மதத்தலைவர் முகம்மது நபி.

'தின்ன வரும்புலி தன்னையும் அன்புடன் சிந்தையில் போற்றிடுவாய்' என்றார் பாரதி. புலி நம்மைத் தின்ன வருகிறது. நாம் கண்களை மூடிக்கொண்டு கையை உயரே கூப்பிக்கொண்டு, அந்தப் புலியில் ஆண்டவனின் தரிசனத்தைக் காண்கிறோம். கொல்ல வரும் புலியைக்கூட அன்பால் சிந்தையில் போற்றும் ஓர் குணம் வாழ்க்கையின் ஓர் அற்புத நெறி.

புத்தரும், முகமதும், காந்தியும், பாரதியும் எப்படி வேறுபட்டிருக்கிறார்கள்? அவர்கள் வாழ்க்கை நெறிகளால் வேறுபட்டிருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கை நெறிகளால் உயர்ந்து நிற்கிறார்கள். ஒவ்வொரு பிரச்சினை வரும்போதும் காந்தி மீண்டும் தன் உயர் நெறிகளால் மகாத்மா காந்தி ஆகிறார். நாமோ வாழ்க்கையில் ஓரிரு முறைதான் அந்த உயர் தன்மைகளால் தொடரப்பட்டு காந்தி ஆகிறோம்.

அந்த வாழ்க்கை நெறிகள்தான் அவருக்குத் தனித் தன்மையை அளிக்கிறது.

இவ்வுலகில் நாம் பிறரிடமிருந்து பல்வேறு விதங்களில் வேறுபட்டிருக்கிறோம். நம்மிடம் தனித்தன்மை இருக்கிறது. அந்தத் தனித்தன்மையின் மொத்த உருவத்திற்குத்தான் உங்கள் பெயரையிட்டு அழைக்கிறார்கள். நாம் பிறரிடமிருந்து வேறுபட்டிருக்கிறோமே அது நம் சொத்து. அது நம் வாழ்க்கை நெறிகள் கொஞ்சங் கொஞ்சமாக ஏற்படுத்திக் கொடுத்த சொத்து; குணநலன்.

நம்மிடையே வாழும் நகைச்சுவை நடிகர்கள் பிறரைப் போல இல்லை. அவர்களாக இருக்கிறார்கள்.

அதனுல்தான் அவர்களைக் கண்டு நாம் சிரிக்கிறேம். வாழும் கவிஞர்கள் பிறரைப்போல 'நக'லாக கவிதை எழுதுவதில்லை. அதனுல்தான் அவர்களை நாம் மதிக்கிறேம்.

நாம் நாமாக இருக்க முயலவேண்டும்.

'நான் யார்' என்ற கேள்வி எழுகிறது; 'எனக்கு எது முக்கியம்?' என்ற கேள்வி பிறக்கிறது. 'நமக்கு எது முக்கியம்' என்ற தீர்மானத்திலிருந்து நாம் எது செய்ய விரும்புகிறேம்; எது செய்ய விரும்புவதில்லை என்ற பாகுபாடு கிளம்புகிறது. இந்தப் பாகுபாடு ஓர் நெறியாய் நம் வாழ்வில் அமைகிறது.

ஜான் எர்லிக்மனின் கதை நமக்குப் பல விஷயங்களைப் புலப்படுத்தும்.

நிக்சன் அமெரிக்காவின் ஜனுதிபதியாக இருந்தபோது அவருக்கு அந்தரங்க ஆலோசகராக இருந்தார் ஜான் எர்லிகமன். சட்டம் படித்தவர். புத்திசாலி, சாமர்த்தியசாலி என்று பெயரெடுத்தவர். உள்நாட்டு விவகாரங்களைக் கவனித்து ஆலோசனை கூறும் முக்கிய பொறுப்பில் எர்லிக்மனை நிக்சன் நியமித்திருந்தார்.

நிக்சன் மீண்டும் தேர்தலில் வெற்றி பெற்று வருவதற்காகப் பலத்த முன்னேற்பாடுகளைப் பதவியிலிருக்கும் போதே செய்யத் துவங்கினுர். அதன் விளைவாக ஏராளமான கறுப்புப் பணம் கைமாறியது. எர்லிக்மன்தான் இடையே சென்ற ஆள். பலபேருடைய டெலிபோனை ஒட்டுக் கேட்டு எதிர்ப்பாளர்களின் போக்கைத் தெரிந்துகொள்ள நிக்சன் விரும்பினுர். அப்படியே ரகசிய உத்தரவிட்டார் எர்லிக்மன். 'வாட்டர்கேட்' விடுதியில் எதிர்கட்சியின்

அலுவலகத்தில் இரவில் புகுந்து அவர்கள் திட்டங்களைத் தெரிந்துகொள்வது நல்லது என்று நினைத்தார் நிக்சன். எர்லிக்மன் இதற்கு ஏற்பாடு செய்தார்.

முடிவில் பதவியில் இருக்கும் ஜனாதிபதி 'பெரிய திருடன், பெரிய அயோக்கியன்' என்று சட்டசபையின் நீதித்துறை தீர்மானித்தது. நிக்சன் பதவியிலிருந்து இறங்கினார். எர்லிக்மனுக்குச் சிறைத்தண்டனை கிடைத்தது. கையில் இருந்த பணம் வக்கீலுக்குக் கொடுப்பதில் செலவழிந்தது. அவர் மனைவி எர்லிக்மனை விவாகரத்து செய்தார். எர்லிக்மன் சிறை சென்றார். தாடி வளர்த்தார். 'ஏன் இப்படி நேர்ந்தது?' என்று சிந்திக்கத் துவங்கினார். 'எங்கே தவறு செய்தேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டார்.

'ஜனாதிபதியின் ஆலோசகன்' என்று உயர்மதிப்பளித்து உலகம் நடத்திய முந்தைய நாள்வரை, உண்மையிலேயே தான் உயர் மதிப்புக்குரிய கொள்கைகள்— நெறிகள்—கொண்ட உத்தமமான மனிதன் தானா என்று கேட்டுக்கொண்டார்

அதன் விளைவாக எர்லிக்மன் தன் வாழ்வில் ஒரு பெரும் மாற்றத்திற்குள்ளானார். அதைப்பற்றி அவரே கூறுகிறார் கேளுங்கள்:

"வாழ்வில் எது முக்கியம். எது முக்கியமில்லை என்ற அடிப்படையைக்கூட சிந்திக்காமல் நான் ஐம்பது வயது வரை வளர்ந்துவிட்டேன். எது முக்கியம் எது போற்றத் தகுந்தது என்பது பற்றி சிந்திக்காமலே காலம் ஓடி விட்டது.

இப்போது அதுபற்றிச் சிந்திக்கிறேன். எனது குழந்தைகள் இந்த இளவயதில் சில வாழ்க்கை

நெறிகளை அமைத்துக்கொள்ளக் கற்றுக்கொள்கிறார்களோ அவர்களுடன் நானும் இன்று ஆரம்பப் பாடம் படிக்கிறேன்."

"ஜான் எர்லிக்மன் கஷ்டப்பட்டு—அனுபவப் பட்டுப் பாடம் கற்றுக்கொண்டார். இன்று சிறையிலுள்ள பிற கைதிகளின் உரிமைக்காகவும், அமெரிக்க இந்திய சமூகத்தின் சில அடிப்படை உரிமைகளுக்காகவும், வாதாட—வாழத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார் எர்லிக்மன். கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்யாமல் கண் மங்கும்போதே எர்லிக்மன் விழித்துக்கொண்டடார்.

நாம் வாழ்க்கையில் 'ஓடு ஓடு' என்று ஓடுகிறோம்; சம்பாதிக்கிறோம்; சாப்பிடுகிறோம்; தூங்குகிறோம்; பிள்ளை குட்டிகளைப் பெற்றெடுக்கிறோம். நம் வாழ்வில் எது முக்கியம் என்று நாம் யோசிப்பதுண்டா? என் வாழ்வின் வாழ்க்கை நெறிகள் என்ன என்று எவனாவது கேட்டுக் கொண்டு சிந்தித்ததுண்டா? 'என்னைப்பற்றிக் கூறும்போது பிறர் என் வாழ்க்கை நெறிகளை எப்படி வருணிக்கிறார்கள்' என்றாவது நாம் யோசித்தது உண்டா?

உயர் பதவியில் உள்ளவர்களிலிருந்து சாமானியன் வரையில் பலர் இந்த உண்மைகளைத் தெரிந்துகொள்ள விரும்பாமல் காலங்கழிக்கின்றனர். உங்கள் லட்சியத்தை எண்ணிப் பாருங்கள். உங்கள் வாழ்க்கை நெறிகளைப் பற்றி யோசித்துப் பாருங்கள்.

வாழ்க்கை பயனுடையதாக அமைய, சாதனைகள் புரிய, நம் நெறிகளை நாமே தெரிந்துகொள்ள வழி பிறக்கும்.

# நமது குணப்பட்டியல் என்ன?

**வா**ழ்க்கை மாறிக்கொண்டே இருக்கிறது. காலத்திற்கேற்ப, வாழ்வில் நம் அனுபவத்திற்கும் வயதிற்கும் ஏற்ப—நமது லட்சியங்களும் மாறிக்கொண்டிருக்கின்றன. புதிய லட்சியங்களை மேற்கொள்கிறோம்.

பள்ளி மாணவனாக இருந்தபோது நமக்கிருந்த லட்சியம், திருமணம் செய்துகொண்டு வேலை பார்க்கத் துவங்கியதும் ஏற்பட்ட லட்சியம், 30—35 வயதில் நமக்கு ஏற்பட்ட லட்சிய மாற்றம், கொள்கைத் தெளிவு, உலக அனுபவம் என்றெல்லாம் பார்க்கும் போது நமது லட்சியங்கள் எப்படி மாறுகின்றனவோ அதற்கேற்ப நம் வாழ்க்கை நெறிகளை எப்படி மாற்றிக் கொள்கிறோம் என்பது புரிய வரும்.

இளவயதில் அருணகிரிநாதர் முழுக்க உடலுறவில்—பெண்கள் விஷயத்தில் ஈடுபட்டிருந்தார். சட்டென்று வேறொரு லட்சியத் தெளிவு ஏற்பட்டது அவருக்கு. தான் செய்யும் காரியங்களின் இழிவு—அவருக்குப் புரிந்தது.

பாரிஸ்டராக வாழ்க்கை நடத்த வேண்டுமென்று தான் மோகன்தாஸ் காந்தி தென்னாப்பிரிக்கா சென்றார். தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் உரிமைக்காகப் போராடியபோது இந்தியத் தலைவர்கள் கூறினார்கள், "சொந்த நாட்டிலேயே நமக்கு உரிமைகள் இல்லையே" என்று. காந்தியின் வாழ்க்கை திசை திரும்பியது. அதற்கேற்ப வாழ்க்கை நெறிகளும் மாறின.

நம் வாழ்க்கையின் நோக்கம் என்ன, எதற்காக வாழ்கிறோம், வாழ்வில் எது நமக்கு முக்கியம் என்று

நம்மை நாமே கேட்டுக்கொள்ள வேண்டும். அப்படிக் கேட்டுக்கொள்ளும்போது புரியும்.

"ஏதோ, வருகிற பிரச்சினைகளுக்கு ஈடுகொடுத்துக் கொண்டு வாழ்க்கை ஓடுகிறது. இதற்குள் வயதாகி விடுகிறது'' என்ற விளக்கம்.

பலரும், 'இது பரவாயில்லை. அது பரவாயில்லை. என்று வாழ்க்கையை ஒரு சமாதானமாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்களேயொழிய, 'இது என் வாழ்க்கை; இதை இப்படி அமைப்பேன்' என்று தீர்மானிப்பதில்லை. இதனால் வாழ்வின் சூத்திரக் கயிற்றை நாம் தவற விடுகிறோம்; இழக்கிறோம். வாழ்க்கையை ஓர் ஆற்றோட்டமாகப் பலரும் எடுத்துக் கொள்கிறார்கள். அதாவது சம்பவங்கள் நம் வாழ்வை அமைக்க அவர்கள் விட்டுவிடுகிறார்கள். ஒரு சிலரே எதிர்நீச்சல் போடு கிறார்கள்.

'தேடிச் சோறு நிதம் தின்று வாழும் வாழ்வை வாழ்வேன் என்று நினைத்தாயோ' என்று கேட்கிறார் பாரதி, அன்னை பராசக்தியைப் பார்த்து.

உயர்திரு. மு. அருணாசலம், சர். எஸ். ராதா கிருஷ்ணனிடம் படித்தவர். பின் பனாரஸ் பல்கலைக் கழகத்திலே தத்துவப் பிரிவிலே பேராசிரியராக இருந் தார். திடீரென்று ஒருநாள் வேலையை விட்டுவிட்டு, காந்தியின் எளிய வாழ்க்கையை மேற்கொண்டு இளம் குழந்தைகளுக்குக் காந்தியின் அடிப்படைக் கல்வியைப் போதிப்பதற்காக ஒரு பள்ளிக்கூடம் துவங்கினார். அந்தப் பணியில் ஊறிப் போனார். குத்தாலத்துக்கருகில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் அவர் பள்ளி இன்னும் இருக்கிறது. அவர்தான் 'காய்கறித் தோட்டம்' என்ற

ஓர் அரிய நூலை தமிழில் எழுதி, 'காய்கறித் தோட்டம் மு. அருணுசலம்' என்று பெயர் பெற்ற அறிஞர்.

இப்படித்தான் வாழ வேண்டும் என்று சிலர் தீர்மானிக்கிருர்கள். அந்த நெறிகளுக்கேற்ப அவர் களது லட்சியங்கள் உருவாகின்றன. நகரத்தின் வேகமும், ஓட்டமும், மனிதத் தன்மையற்ற நிலையும் எனக்கு ஏற்றதல்ல என்று கூறிவிட்டுப் பெரிய வேலையை ராஜினுமா செய்துவிட்டுச் சென்னையை விட்டுக் கிராமத்தில் போய் குடியேறினுர் ஓர் அதிகாரி.

கல்லூரி ஆசிரியராக இருப்பதன் மூலம் என் செயலின் பலன்களை நான் காண முடியவில்லை. 'என் அறிவுக்கும் திறமைக்கும் இங்கே போதுமான வருமானமும் இல்லை' என்று கூறி வேலையை விட்டார் —என் நண்பர். இன்று அவர் ஒரு தொழில் அதிபராக விளங்குகிருர். "வாழ்வில் என்ன செய்ய வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளவே எனக்கு முப்பத்தைந்து ஆண்டு ஆகியிருக்கிறது" என்கிருர் அவர்.

'நாம் விரும்பியதை அடைவதற்காக நாம் என்ன செய்ய முயன்ருேம்?' என்று அடிக்கடி சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்கிருர் கார்டன் மில்லர் என்ற பிரபல எழுத்தாளப் பேராசிரியர்.

"பல சமயம் நாம் பிறர் அபிப்பிராயங்களுக்காக வாழ்ந்து கொண்டிருக்கிருேமோ என்ற சந்தேகம் எனக்கு வரும்" என்கிருர் அவர்.

வாழ்க்கையின் தாத்பரியத்தை உணராமலேயே பலரும் வாழ்க்கையை முடித்துக் கொள்கிருர்கள். வாழ்க்கை ஒரு வாய்ப்பு; ஓர் அரிய சாதனம். அதில் நாம் நமக்கு ஒரு சந்தர்ப்பத்தை அளிக்க வேண்டும்.

நாம் அடைய விரும்பும் லட்சியத்தை அடைய முயல வேண்டும். நாம் எதை அடைய விரும்புகிறோம் என்பதில் ஒரு தெளிவும், அந்த வாழ்க்கை முறையில் உயர்நெறிகளும் நமக்கு வேண்டும். வாழும்போதும் சரி, வாழ்ந்து முடிந்ததும் சரி, நாம் அதை எண்ணிப் பெருமைப்பட வேண்டும்; நிறைவு கொள்ள வேண்டும்.

உங்கள் முடிவு செய்யும் திறன்தான், உங்கள் முன் உள்ள பல ஆசைகளையும் பல லட்சியங்களையும் பரிசீலித்து, எடை போட்டு, சரியானதை, முக்கிய மானதை அவசரமானதைத் தேர்ந்தெடுக்கிறது. அதே போல உங்கள் வாழ்க்கை நெறிகள், உங்கள் முடிவு செய்யும் திறனைப் பெரிதும் பாதிக்கின்றன.

"எந்த நெறிகள் உங்கள் வாழ்வை ஆட்டுவிக் கின்றன என்பதை அறிய உங்களைப் பற்றிய ஒரு குணப் பட்டியலைத் தயாரியுங்கள்" என்கிறார்கள் மன நூலார். எது உங்கள் குணம்? விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம், முன்னேறும் துடிப்பு, பணக்காரனாக வேண்டுமென்ற ஆசை ஏற்படுத்தும் உந்துதலால் காரியம் செய்யும் பரபரப்பு...பிறரைச் சார்ந்து வாழ்வதுதான் உங்கள் குணமாயிருக்கலாம். சினிமா நடிகைகளின் படத்தைச் சேகரிப்பது அல்லது அவர்களது ஆட்டோ கிராப்பைப் பெறுவதுதான் உங்கள் ஆசைகளாக இருக்கலாம். அவை எல்லாம் உங்களைப் பற்றிக் கூறுகின்றன.

நம்மைப்பற்றிப் பிறர் எப்படி விளக்கம் கொடுப்பார் கள் என்று கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். 'யோக்கி யன்; சந்தர்ப்பவாதி, நல்லவன், இவனை நம்ப முடியாது

வெறும் பேச்சாளன், ஊருக்கு உதவுபவன்' என்று பிறர் கூறும் அடைமொழிகளில் உங்கள் உருவத்தைக் காணலாம்.

ஒரு பெருந்தனக்காரர் நெறிகளோடு வாழ்வதாகத் தான் கூறிக்கொண்டார். முக்கியமான பிரச்சினை என்று வந்தபோதுதான் அவருக்கு, "வாழ்க்கை நெறிகள் முக்கியமல்ல. சுயபெருமையும் செல்வாக்கும்தான் முக்கியம். அதற்காகத்தான் அவர் வாழ்கிறார்" என்பது அவருக்கே புலப்பட்டது.

குழந்தைப் பருவத்திலிருந்தே நம்மிடம் நெறிகள் வளர்க்கப்படுகின்றன. ஆரம்பப் பள்ளிப் பருவத்திலேயே ஆண் எப்படி நடந்துகொள்ள வேண்டும், பெண் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்ற நடத்தைகளைக் குழந்தைகள் கற்றுக் கொள்கின்றன. பின் நம் பெற்றோர் கூறுகிறார்கள், ஆசிரியர்கள் பாடம் புகட்டுகிறார்கள். நமது பெற்றோரது வாழ்க்கையும், ஆசிரியரது வாழ்க்கையும் ஒரு முன் மாதிரியாக அமைந்து நமக்குச் சில நெறிகளைக் கற்றுக்கொடுக்கின்றன. புதிய அனுபவம், புதிய உறவு, புதிய சூழ்நிலை என்று பலவும் நமது வாழ்க்கை நெறிகளைச் சீர்படுத்திக் கொண்டே போகின்றன.

மனோதத்துவ அறிஞர்கள், சில குணாதிசயங்களைப் பட்டியலிட்டுத் தந்திருக்கிறார்கள். அவற்றில் எது முக்கியம் என்று வரிசைப்படுத்துங்கள். எது மிக முக்கியமோ அதை ஒன்று என்று குறிப்பிடுங்கள். அடுத்து முக்கியமானதை இரண்டு என்று குறிப்பிடுங்கள். இப்படி வரிசைப்படுத்தும்போது உங்களின் தன்மை உங்களுக்கே புரியவரும்.

நம்மைப்பற்றி அறிந்து கொள்வது என்பது மேலே செல்வதற்கான முதல் படி.

உங்கள் தோற்றம்

வெற்றி காணுதல்

கலவி

குடும்பப் பொறுப்பு

சுயகௌரவம்

சுதந்திரம்

ஒழுங்கு

பண்டம், பொருள் சேர்ப்பது

செல்வாக்கு

உடல் நலம்

சமத்துவம்

பணம் சேர்ப்பது

ஆக்கபூர்வமான சிந்தனை

சொந்த வாழ்க்கை

காதல்.

# வாழ்வில் எது முக்கியம்?

மனித வாழ்வில் மிக முக்கியமான விஷயம் ஒன்றை நாம் எப்போதும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

'நம்மில் பல திறமைகள் இருக்கின்றன. உடலுழைப்பிலிருந்து கலை வரை; சுவைப்பதிலிருந்து அறிவால் உணர்வது வரை. மனிதன் ஒரு கலைக் களஞ்சியம்; வற்றாத நீரூற்று!'

பலர் தங்களிடம் உள்ள திறமைகளைத் தட்டி எழுப்பாமலே—வாழ்க்கை வீணையை மீட்டாமலே வாழ்க்கையை முடித்துக்கொள்கின்றனர். இதைவிடப் பரிதாபத்துக்குரிய விஷயம் பலர் தங்களிடம் பல திறமைகள் உண்டு என்று அறியாமலே வாழ்க்கையை முடித்துக் கொள்கின்றனர்.

**ஆபிரகாம் மாஸ்லோ** என்ற ஒரு மகத்தான மனோ தத்துவப் பேராசிரியர்—ஆராய்ச்சியாளர், 'மனிதன் தன் முழுத் திறமையையும் வெளிக்கொண்டு வருவது தான் வாழ்க்கை' என்று கூறினார். அந்தக் கொள்கையை நிரூபிக்க, பல பெரிய மனிதர்களது, தலைவர்களது வாழ்க்கையையும் ஆராய்ந்தார். அதன்மூலம் **Self—Actualizaton**' என்ற ஒரு தத்துவத்தை உலகுக்கு அளித்தார். 'மனிதன் தன் முழுத்திறமைக்கும் செயல் வடிவம் கொடுத்து முழு மனிதனாவது' என்பதுதான் அவர் தத்துவம்.

'வயலின் வாசிக்க எனக்கு வராது' என்று சொல்வதற்குப் பதில் இதுவரை வயலினை வாசித்ததில்லை

என்று சொல்லிப் பாருங்கள். ஒரு மனோபாவ மாறுதலை உணர்வீர்கள்! இந்த மனோபாவ மாறுதல் உங்களுக்கு ஒரு வளர்ச்சியைக் கொடுக்கும். எதைப்பற்றி எல்லாம் ஆசைப்படுகிறீர்களோ அதை எல்லாம் முயற்சி செய்யுங்கள்.

தத்துவஞானி எமர்சன் கூறுகிறார்:

"ஆசையின் வித்து மனதில் முளைக்கும்போது அந்த ஆசையை அடைவதற்கான பூரணத் திறமையும் வாய்ப்பும் அந்த ஜீவனிடம் இருக்கிறது என்று பொருள். அந்தத் திறன், அந்த ஜீவனிடம் இருப்பதால் தான் அந்த ஆசையே முளைக்கிறது" என்று.

வாழ்வில் எல்லாவற்றையும் ரசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள்! பூவைப் பார்த்து ரசியுங்கள்! தென்றலைத் தடவிக் கொடுங்கள்! புலியிடமும் சிங்கத்திடமும் பொல்லாத மனிதர்களிடையேயும் உள்ள நல்லவற்றை—அழகைக் கவனியுங்கள்!

மாட்யூ—ஆர்னல்ட் என்ற ஆங்கிலேய எழுத்தாளர் 'சுவையும் ஒளியும்' (Sweetness & Light) என்றோர் மிக அற்புதமான கட்டுரை எழுதி இருக்கிறார். அதாவது வாழ்வு பூராவுமே தித்திப்பும், ஒளியுமாக அமைய வேண்டும், அமைத்துக்கொள்ள வேண்டும் என்பது தான் அவரது நோக்கம்—அவரது வாழ்க்கையின் தாத்பரியம். ஓரிடத்தில் அவர், "மனித மனத்தின் பல்வேறு துறைகளையும் வளர்த்து, வாழ்க்கையில் இன்பங் காண வேண்டும். அந்த ஒருமித்த வளர்ச்சி, ஒன்றோடொன்று இசைந்து, ஓர் இசைக் கச்சேரிபோல இருக்க வேண்டும்" என்கிறார்.

இந்த அறிவை நாம் எப்படிப் பயன்படுத்தலாம். நான் எழுத்தாளனாகப் போகிறேன் என்று குமாஸ்தா

வேலையை விட்டவர்களை எனக்குத் தெரியும். நான் தொழில் செய்யப் போகிறேன் என்று ஆசிரியர் வேலையை உதறியவர்களை நான் அறிவேன். விஞ்ஞான ஆராய்ச்சி மூலம் ஒரு புதிய கண்டுபிடிப்பைச் செய்து பணம் குவிக்கப் போகிறேன் என்று மாதச் சம்பளம் தரும் வேலையை விட்டவர்களை நான் அறிவேன்.

மாறாக, அருமையாக நிர்வாகத் திறன் கொண்ட என் நண்பர், கல்லூரி ஆசிரியராக நாளை ஓட்டிக்கொண்டிருப்பதையும் நான் அறிவேன். நாம் விரும்பியதை அடைய நமக்குத் துணிச்சல் வேண்டும்; நம்மீது நம்பிக்கை வேண்டும்; கஷ்டங்கள் வரும்போது கலங்காத மனம் வேண்டும்.

அப்படி முடிவெடுக்கும்போதுதான் நாம், விரும்பியதை அடைய முடியும்.

உங்கள் கனவு எது வேண்டுமானாலும் இருக்கலாம். புதிய பாதைகளில் நடக்க அஞ்சாதீர்கள்...! புதிய கதவுகளைத் திறக்க மலைக்காதீர்கள்! புதிய ராகம் என்று ஒன்றுமே இல்லை என்று கூறுவோருக்குச் செவிமடுக்காதீர்கள்!

உங்கள் வாழ்வில் புதிய கீதம் பாட முயலுங்கள்.

கடன் உங்களது பளுவாக இருக்கலாம்... கடனிலிருந்து மீள்வேன். அதற்கு இன்ன இன்ன திட்டம் வகுப்பேன்! என்று வகுங்கள்.

குடும்ப வாழ்க்கை இனிமையற்று இருக்கலாம். 'என் மனைவியை (கணவனைப்) புரிந்து கொள்வேன். புதிய அற்புதமான வாழ்க்கை வாழ்வேன்!' என்று சொல்லிக் கொள்ளுங்கள்.

திருமணம் உங்கள் கவலையாயிருக்கலாம். 'நல்ல அறிவாற்றலும், திறமையும், அழகுங்கொண்ட ஒரு ஆள் எங்கோ பிறந்திருக்கிறார்' என்று நம்புங்கள்.

அத்தோடு செயல்படுங்கள். திட்டமிடுங்கள். லட்சியத்தை எப்படி அடையலாம் என்று பல்வேறு கோணங்களிலிருந்தும் ஆராயுங்கள்.

"உங்களுக்குப் பிடித்த இடத்தில், பிடித்த வேலையில் இருப்பதாகக் கற்பனை செய்யுங்கள்" என்கிறார்கள் மனசிகிச்சை நிபுணர்கள். அப்படி அடிக்கடி சிந்தித்து—கற்பனை செய்து பழகுங்கள். நம்பிக்கையுடன் நடக்கப் போவதாக எண்ணிச் சிந்தியுங்கள். லவலேசமும் சந்தேகத்தை அங்கே புகவிடாதீர்கள்! அந்தக் கற்பனை அந்த ஆசை இருக்கிறதே அதுதான் ஜீவதாகம், உயிர்த் துடிப்பு. அது வாழத் துடிக்கும் ஒரு ஜீவனின் அடிப்படைத் துடிப்பு. அந்தத் துடிப்பு இப்பிரபஞ்ச சக்தியில கலந்து உங்களுக்காக இயங்கத் துவங்குகிறது.

ஆனால் நீங்கள் கற்பனையுடன் நின்றுவிடாமல் அதை அடைய என்ன வழிகள் உள்ளன என்று பாருங்கள். பல வழிகளிலும், 'எது முக்கியம்? எது முக்கியமானதல்ல' என்பதை ஆராயுங்கள. நீங்கள் விரும்பும் முக்கியமான விஷயத்தைப் பின்பற்றுங்கள். ஆங்கிலத்தில் இதை ஒரு சின்னச் சொல்லினால் அழகாக சொல்லி இருக்கிறார்கள், Priorities என்று. எது முக்கியம் எது முதலில் செயயப்பட வேண்டும் என்பது வாழ்வில் மிகமிகக் கவனமாகச் செய்யப்பட வேண்டிய விஷயம்.

குதிரைக்குமுன் வண்டியை நிறுத்தி நாம் குதிரையைக் கொண்டு வண்டியைத் தள்ளச் செய்வதில்லை. வண்டிக்கு முன் குதிரை நின்று இழுத்தால்தான் வேலை எளிதாகும்.

பொதுவாழ்விலும் தனிமனித வாழ்விலும் இதற்கான சில உதாரணங்களைப் பார்ப்போம்.

கிராமத் தன்னிறைவு என்று பலகோடி ரூபாயக கான திட்டம் ஒன்று தீட்டி இருக்கிறார்கள்—சாலை, மருத்துவமனை, குடிநீர் என்று. அற்புதமான திட்டம். ஆனால் உடனடியாக அந்தப் பலகோடி ரூபாய்களை மூலதனமாக வைத்து, கிராமத்திற்குக் கிராமம் தொழில்பேட்டைகளை நிறுவினால் பணம் புரளும்: வருமானம் வரும்; வேலைவாய்ப்புக் கிடைக்கும். போட்ட மூலதனம் பெருகும். அதிலிருந்து குடிநீர், சாலை எல்லாம் அமைக்கலாம். நிரந்தரமான செல்வம் பெருகும். ஏழைக்குக் கிராமத்தில் வீட்டைக் கட்டிக் கொடுத்துவிட்டால் அவன் வயிற்றுக்கு என்ன செய் வான்? ஒரு மனிதனிடம் ஒரு நாள் உணவுக்கான மீனைக் கொடுப்பதா? அல்லது வாழ்நாள் பூராவும் பயன்தரும் மீன் பிடிப்புத் தொழிலைக் கற்றுத் தருவது நல்லதா? பாருங்கள்! எப்படி குதிரைக்கு முன் வண்டி யைக் கொண்டு நிறுத்தி இருக்கிறோம் என்று.

தனிமனித வாழ்வுக்கு வாருங்கள்.

ஒரு பெண் அழகுடனும் பணத்துடனும் மரு மகளாக வர வேண்டுமென்று எண்ணிப் பெண் பார்க் கிறார்கள் அல்லது மாப்பிள்ளை பார்க்கிறார்கள். வாழ்க் கையை வாழ குணங்கள் தேவை; நல்ல குணங்கள் தேவை.

பணத்துடனும் அழகுடனும், வீட்டில் அடங்காப் பிடாரியை வைத்துக்கொள்ள முடியுமா? அல்லது ஒரு தறுதலைக்கு மாலை சூட்ட முடியுமா? முடிவெடுக்கும் போது எது முக்கியம் என்று கருதாமல் வாழ்க்கை பூராவுமே மனிதர்கள் அல்லல் படுகிறார்கள். வாழ்க்கை சுமையாகிறது. அவல வாழ்க்கை நடத்துகிறார்கள்.

அடுத்தமுறை பிரச்சினை வரும்போது 'எது முக்கியம்' என்று கொஞ்சம் ஆராயுங்கள்.

# நமது பிரச்சினைகளில் நாமே முடிவெடுப்போம்!

பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எளிதான விஷயமல்ல. 'சில சில வழிகள், சில சில காரியங்கள் சரியானவை அல்ல' என்று நமக்கு நாமே முன் கூட்டியே முடிவு செய்துகொண்டு நாம் சில சமயம் மாற்று வழியின்றிக் கஷ்டப்படுகிறோம்.

ஓர் உதாரணம் கூறுகிறேன்:

நான் முன்பு வேலை பார்த்த கல்லூரியில் ஒரு செயிண்ட் ஜெர்மேன் என்ற ஒரு பேராசிரியர், கலை, ஓவியம், சிற்பம் முதலிய பாடங்களைச் சொல்லிக் கொடுத்து வந்தார். நேர்மையான மனிதர்; சுறுசுறுப்பானவர்; கற்பனை நிறைந்த பேராசிரியர்.

ஆனால் அந்தக் கல்லூரியிலோ ஒரு 'மலை விழுங்கி மகாதேவன்' தலைவராக-முதல்வராக இருந்தார். கல்லூரி முதல்வர் 'ஒண்ணும் நம்பர்' தகடுதத்தக்காரர். கல்லூரி விஷயங்களைத் தன்னிஷ்டப்படி நடத்திக் கொண்டிருந்தார். தன்னிஷ்டப்படி கல்லூரி ஆசிரியர் களுக்குச் சீட்டுக்கிழிப்பார்.

கல்லூரி ஆசிரியர்களால் கல்லூரி முதல்வரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. முதல்வர் தனது அதிகாரத்தையும் செல்வாக்கையும் உபயோகித்துக் கல்லூரி ஆசிரியர்களை மிரட்டுவார். ஒருநாள் ஒருநல்ல கல்லூரி ஆசிரியரை முதல்வர் வீட்டுக்கனுப்பவே, கல்லூரி ஆசிரியர் சங்கம் இதற்கெதிராகத் தீர்மானம் போட்டது. கல்லூரி முதல்வர் மசியவில்லை. இந்த

நிலையில் விஷயத்தை வேறு எப்படி அணுகுவது என்று தெரியாத நிலையில் பேராசிரியர் செயிண்ட் ஜெர்மேன், கல்லூரி முதல்வரிடம் போனார்...ஐயா! நீர் கல்லூரி முதல்வராயிருக்கலாம். ஆனால் நீ முதல்தர அயோக்கியன். உன்னைப் போல் அயோக்கியனை நான் பார்த்த தில்லை' என்று சராமாரியாகத் திட்டிவிட்டு வெளியே வந்தார்.

கல்லூரி ஆசிரியர்களிடையே இது பெரிய அதிர்ச்சியைத் தந்தது. எல்லாரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். என்ன நடந்தது என்று மீண்டும் மீண்டும் கேட்டார்கள். கடைசியில் மெதுவாக ஒரு தத்துவப் பேராசிரியர் அவரை அணுகி, 'செயிண்ட்! அந்தப் பயல் நாளைக்கு உன்னையும் வீட்டுக்கனுப்ப முயல்வானே! அதை யோசித்தாயா?' என்றார்.

செயிண்ட் ஜெர்மேன் சொன்னார் நிதானமாக. 'நான் யோசித்தேன். என்னிடம் இரண்டு வலுவான கரங்கள் இருக்கின்றன. என்னால் மண் வெட்ட முடியும். தலையில் மண்கூடை சுமக்க முடியும். அந்த வேலை இந்தப் பேராசிரியர் வேலையைவிட மோசமானதல்ல!'

நான் விக்கித்து நின்றேன் ஒரு கணம். சிற்பம் வடிக்கும் கரங்கள், ஓவியத் தூரிகை ஏந்தும் விரல்கள், கலைப் பொருளை நுணுகி ஆராய்ந்து அதன் ரசனையை வெளிப்படுத்தும் திறம் கொண்ட சிந்திக்கும் மனம், இதோ, மண்வெட்டிச் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றத் தயார் என்று கூறுகிறது! முடிவு செய்கிறது.

நானோ வேறு ஏதாவது கல்லூரியில் கல்லூரிப் பேராசிரியர் வேலை இருக்குமா என்றே முயன்று

கொண்டிருக்கிறேன். மண்வெட்ட என்றாலும் முடியும்—கரங்களில் வலு உண்டு; மனத்தில் திடம் உண்டு. எனினும் அது ஒரு கல்லூரிப் பேராசிரியர் செய்யும் வேலை அல்ல என்று நானே போட்டுக் கொண்ட மதிப்பு என் சிந்தனையை முடமாக்கி இருந்தது.

நான் என் மனதினுள் சொல்லிக் கொண்டேன்; 'மண் வெட்டும் வேலை, இந்தக் கல்லூரியில் பார்க்கும் வேலையைவிட இழிவானதல்ல. நான் ஏன் தயங்க வேண்டும்? மண்வெட்டினால்—ஒரு நியாயமான வேலை பார்த்து சம்பாதித்தால் — யார் என்னைத் தாழ்த்திப் பேசிவிட முடியும்? நான் அதனால் தாழ்ந்துவிடுவேனா? இல்லை. என் சுய மதிப்பில் நான் உயர்ந்து நிற்பேன்.'

செயிண்ட் ஜெர்மேன் அந்த ஆண்டே கல்லூரியை விட்டு விலகினார். நான் அடுத்த சில ஆண்டுகளில் விலகினேன். சில ஆண்டுகளில் கல்லூரிப் பணத்தைத் திருடினாரென்று அந்தக் கல்லூரி முதல்வரை வீட்டுககு அனுப்பினார்கள்!

பல விஷயங்களில் முடிவு எடுக்கும் நிலை வரும் போது, 'இது முடியாது', 'இது சரியில்லை' என்று நமக்கு நாமே கூறிக்கொண்டு நம்மை முடமாக்கிக் கொள்கிறோம். சில சமுதாயக கோட்பாடுகள், நம்மை முடமாக்கி வைத்திருக்கின்றன.

யாராவது பிரச்சினையுடன் என்னிடம் வந்து, நான் ஏதாவது அவர்களுக்குக் கூறும்போது அவர்கள், 'அது எப்படி முடியும்?' என்று கேட்டால் எனக்கு செயிண்ட் ஜெர்மேன் சம்பவம்தான் நினைவுக்கு வரும்... எது முடியாது? ஏன் முடியாது?

பல நல்ல வழிகளை...பல நல்ல மாற்று வழிகளை 'முடியாது' என்று முதலிலேயே தீர்மானம் செய்கிருர்கள் பலர். இதனுல் பிரச்னைக்கு வழி காண முடியாமல் பிரச்சினையைப்பற்றியே சிந்தித்துச் சுற்றிச் சுற்றி வருகிருர்கள் அவர்கள்.

பிரச்சினைகளுக்கு வழி காண முயலும்போது, 'முடியும், 'முடியாது' என்று நாம் முன்கூட்டியே தீர்மானம் செய்யக் கூடாது. நமது தர்க்கவாத அறிவை அடித்துப் பையில் போட்டுவிட்டு, நமது கற்பனையைப் பறக்கவிட வேண்டும் நாம். அப்போது தான் தங்கு தடையின்றிப் பலவித யோசனைகள் நமக்கு வரும்; நல்ல வழிகள் தோன்றும்.

ஒவ்வொரு பிரச்னைக்கும் தீர்வு காண பல வழிகள் இருக்கின்றன. அவற்றில் நம் நிலைக்கேற்ப, நம் லட்சியத்திற்கேற்ப ஒரு நல்ல வழியை நாம் தேர்ந்தெடுக்கவேண்டும்.

பிரச்னைகள் வரும்போது,'என்ன! இப்படிப் போய் மாட்டிக் கொண்டேனே!' என்ருே அல்லது 'இதிலிருந்து எப்படி மீள்வது...என்ன செய்யப் போகிறேன்,' என்ருே பயப்படாதவர்கள் இல்லை.

அத்தகைய பயம் ஒருகணம் ஏற்படலாம். ஆனுல் அதைப் பெரிதுபடுத்தாதீர்கள். 'போச்சுடா போச்சு! எல்லாமே போச்சு!' என்று இடிந்து உட்கார்ந்திருப் பதன் மூலம், பிரச்சினைகளுக்கு வழி தோன்றுவதில்லை. நம் துக்கத்தையும் பயத்தையும் கண்டு அனுதாபப் பட்டு நமக்கு யாரும் துணைக்கு வரப்போவதில்லை. பிறரது அனுதாபம் நமக்கு எந்த விதத்திலும் உதவாது. யாரும் நம்மை உட்கார வைத்துச் சோறு போட மாட்டார்கள்.

நம் விதி நம் கையிலிருக்கிறது. நாம்தான் எழுந்து நடந்து, நீந்தி ஆற்றைக் கடந்தாக வேண்டும். புயலடிக்கும் போதும் மழை பெய்யும் போதும் நாம் தான் அவற்றைச் சமாளிக்க வேண்டும். நாம்தான் நமக்குக் குறுக்கே நிற்கும் மலைகளைத் தகர்த்தாக வேண்டும். அல்லது மலைமீது ஏறிப்போக முயல வேண்டும். அல்லது மலையைக் குடைய வேண்டும். அதுபோன்ற சமயங்களில் 'ஒரு மலைஎலி கூட ஒரு மலையைக் குடைகிறது' என்று நமக்கு நாமே சொல்லிக் கொள்ள வேண்டும். ஒரு சின்ன நாய்க் குட்டி எத்தனை லாகவமாக ஆற்றில் நீந்து கிறது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். மலையைத் தாண்டி அநாயசமாகப் பறக்கும் பறவை களைப் பற்றி எண்ணிப் பார்க்க வேண்டும். நம் மனத்திற்கு நாம்தான் ஊக்கமூட்ட வேண்டும்; உற்சாகப்படுத்த வேண்டும்.

பிரச்சினைகளுக்கு வழி காண்பதில் மற்ெருரு நல்ல வழி இருக்கிறது.

'நிலைமை மோசம். மகாமோசம். வேறு வழியே இல்லை. வாழ்வின் கடைசிக் கட்டத்தில் ஊசலாடிக் கொண்டிருக்கிறேன்' என்ற பெருங் கனத்துடன் விஷயத்தை அணுகுங்கள், அதே சமயம் 'இந்தப் பிரச்னைக்கு வழி எங்கோ இருக்க வேண்டும்' என்ற அடிப்படை எண்ணத்தை மனத்தில் ஓடவிடுங்கள்.

அதாவது உங்கள் தந்தை சாலையில் கால் ரூபாய் நாணயத்தைத் தவறவிட்டு விட்டார். இங்கேதான் விழுந்தது என்கிறுர். நீங்கள் என்ன செய்கிறீர்கள்? பணம் இங்கேதான் எங்கோ கிடக்கிறது என்ற நம்பிக்கையுடன் தேடுகிறீர்கள். அதேவிதமான நம்பிக்கையை அடிமனத்தில் ஓடவிடுங்கள்.

உலகில் எல்லாப் பிரச்சினைகளுக்கும் வழிகள் இருக்கின்றன. 'இந்தப் பிரச்னைக்கு எங்கோ ஒரு நல்ல முடிவு இருக்கவேண்டும். சிந்தித்துச் சிந்தித்து நான் கண்டு பிடிக்கப் போகிறேன்' என்று சொல்லிக் கொள்ளுங்கள். அத்துடன் அந்தப் பிரச்சினையை எல்லா கோணங்களிலிருந்தும் அலசுங்கள்; எல்லாவித மாற்று வழிகளையும சிந்தியுங்கள். உங்கள் மனம் அந்தப் பிரச்சினையில் ஊறிப் போயிருக்கட்டும். இரவு நேரத்தில் மன அமைதிக்காக ஒரு சிறு பிரார்த்தனையைக் கூறிக்கொண்டு படுக்கச் செல்லுங்கள்.

தூக்கத்தில் கனவிலோ, வேலை செய்யும் போதோ சில சமயம் உருவகமாக நம் ஆழ்மனம் பிரச்னைக்கு வழிகாட்டிக் கொடுக்கும்.

எது எப்படியானாலும் இடிந்துபோய் விடாதீர்கள். உங்களால் இந்தப் பிரச்சினையிலிருந்து மீண்டுவர முடியும் என்று நம்பிச் சிந்தியுங்கள்.

# இலட்சியத் தெளிவு வேண்டும்!

முடிவெடுப்பதில் ஒரு தெளிவு வேண்டும். ஒவ்வோர் பிரச்சினையின்போதும் முடிவெடுக்கும்போதும் நாம் கடந்து செல்லவேண்டிய பல விஷயங்களையும் பற்றிய ஒரு 'கவனம்' ஒரு நினைவு வேண்டும். வாழ்க்கையில் நமது லட்சியம் என்ன, எதுநமக்கு முக்கியம், இந்த லட்சியத்தை அடைய எதை விட்டுக கொடுப்போம, எந்த வாழ்க்கை நெறிகளை உயிர் போனாலும் விட்டுக்கொடுக்க மாட்டோம், நமக்கு முன் உள்ள வழிகள் என்ன, எது சிறந்தது நமது முடிவைச் செயலாக்க என்ன செயல் திட்டம் வைத்திருக்கிறோம். நமது திட்டம் தோற்றுப்போனால் என்ன மாற்றுத் திட்டம் நம்மிடம் இருக்கிறது—என்பதை எல்லாம் பற்றி ஒரு தெளிவு வேண்டும்.

நம்மில் பலரும் ஒரு தெளிவான லட்சியத்தைக் கொண்டிருப்பதில்லை. நமது லட்சியம் என்ன, நாம் வாழ்வில் எதை அடைகிறோம் என்பதைப் பற்றி முதலில் நாம் தீர ஆராயவேண்டும்; சிந்திக்க வேண்டும். ஒருதாளில் அதைத் தெளிவாக எழுத முடியுமா என்று பார்க்க வேண்டும்.

'காலேஜ் படித்தேன். மேலே என்ன செய்வதென்று தெரியவில்லை. ஏதோ ஒரு வேலை கிடைத்தால் போதும்...'

'கல்யாணம் செய்துகொண்டேன். அப்புறம் என்ன செய்வது...என்ன லட்சியத்தை கைக் கொள்வது?'

'எனக்கு நிறைய கவலைகள். கவலைகளே என் வாழ்வை அரித்துத் தின்கின்றன. கவலையைத் தீர்க்க ஒருவழி சொல்லுங்கள்...'

—இப்படிச் சொல்பவர்களை—கடிதங்கள் எழுதுபவர்களை நிறைய பார்க்கிறோம். நாம் பொதுப் படையாகச் சிந்திக்கிறோம். வேலை வேண்டும் என்பதற்குப் பதிலாக 'என்ன வேலை வேண்டும்?' என்று குறிப்பாகச் சிந்திக்க, அடுத்த கட்டத்திற்குச் சென்று சிந்திக்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும். கவலை என்றால் என்ன கவலை, எந்தச் சந்தர்ப்பத்தில் வருகிறது கவலை என்று குறிப்பிட்டுப் பிரச்சினையை அணுகவேண்டும். ஒரு குறிப்பிட்ட லட்சியம்—குறிக்கோள் இல்லையானால் நாம் எந்த ஊருக்கும் போக மாட்டோம்—நின்ற இடத்திலேயேதான் நிற்போம்! வருகின்ற—கிடைக்கின்ற சந்தர்ப்பங்கள் எல்லாம் மறைந்து போகும். வாழ்க்கை தேங்கிக் கிடக்கும் குட்டைபோல் நாற்றமெடுக்கும். வாழ்வில் ஒரு நிறைவு —திருப்தி ஏற்படாது.

லட்சியத்தைத் தெளிவுபடுத்த நமக்கு நாமே பல கேள்விகளை எழுப்பவேண்டும். சில சமயம் யாரை யாவது முன் மாதிரியாக எடுத்துக் கொள்வதுநல்லது.

நமது நாட்டில் அரசியல் தலைவர்கள்தான் எடுத்த எடுப்பில் நம் கண் முன் பவனி வருகிறார்கள். புத்தகங்களிலும் அரசியல் தலைவர்களின் வாழ்க்கை வரலாறு புத்தகங்கள்தான் கிடைக்கின்றன. இல்லாவிட்டால் சினிமா நட்சத்திரமாக, சினிமாக் கதை எழுதுபவராக, சினிமா டைரக்டராக வரவேண்டும் என்ற ஆசை எங்கும் எதிரொலிக்கிறது. அந்த அளவுக்கு நமது சிந்தனையுலகை நிறைக்குமாறு நம்மைச் சுற்றியுள்ள தமிழ் உலகம்—பத்திரிகை உலகம், அரசியல் உலகம்,

சினிமா உலகம் இயங்குகின்றன. எல்லோருடைய எண்ணமும் சிந்தனையும் இவைபால் இருக்கின்றன.

அரசியலையும் சினிமாவையும் விட்டுவிட்டால் தமிழ் படித்து தமிழ்ப் பண்டிதராக, அறிஞனாக, பேச்சாளனாக உலவ வேண்டும் என்ற ஆர்வம் அதற்கு அடுத்து நிற்கிறது.

வாழ்வின் ஆரம்பக் கட்டத்தில் அடிஎடுத்து வைக்கும் இளைஞர்கள் எல்லோரும் தங்களைக் கேட்டுக் கொள்ள வேண்டும். அரசியலிலும், சினிமாவிலும் எனக்கென்ன வாய்ப்பு? எல்லோரும் தெருவுக்குத் தெரு டீக்கடையும் தையற்கடையும் வைத்தால் என்ன ஆகும்? இத்துறைகளில் நான் எளிதாக முன்னேற முடியுமா? பணம் சம்பாதிக்க முடியுமா? இத்துறைகள் தான் எதிர்காலத்தில் வளரும் தொழில்துறைகளா?

நாட்டு மக்களிடையே அரசியல்வாதியும், சினிமா தயாரிப்பாளர்களும், புதிய பணத்தைக்கொண்டு வருகிறார்களா? அல்லது இருப்பவற்றை இடம் பெயர்க்கிறார்களா? என்பன போன்ற கேள்விகளை நாம் கேட்டுக் கொள்ள வேண்டும்.

அதே சமயம் இத்தகைய மானுபவே சூழ்நிலை நாட்டில் நிலவக் காரணமாயிருப்போர் யார்? அரசியல் வாதிகளா? சினிமாக்காரர்களா? பத்திரிகைக்காரர் களா? அவர்கள் இளைஞர் சமுதாயத்திற்கு உண்மையில் வழிகாட்டுகிறார்களா? என்றும் நாம் சிந்திக்க வேண்டும். இது நாட்டின் எதிர்காலத்திற்கு நல்லதில்லை என்றால் நாம் கோபப்படக் கற்றுக்கொள்ள வேண்டும். ஆத்திரப்படக் கற்றுக்கொள்ள வேண்டும். ஒரு பஸ் கண்டக்டர் அவமரியாதையாக நடத்தி

விட்டார் என்று ஒரு கல்லூரியே சீறியெழுந்து போராட்டம் நடத்தும் தன்மானமுள்ள மாணவ சமுதாயம், எதிர்கால இளைஞர் சமுதாயத்தையே தவருன பஸ்ஸில் ஏற்றிச் செல்லும் கபோதிகளேயும் விஷயம் தெரியாதவர்களேயும் கண்டு ஏன் சீறி எழ வில்லே? ஏன் விட்டு வைத்திருக்கிறது? எங்கே தன் மானம்? எங்கே சென்றது விழிப்புணர்ச்சி?

இந்த நாட்டின் வளர்ச்சி ஒரு நடிகையின் அழகு, கவர்ச்சியில் இல்லே. ஓர் அரசியல்வாதி மாற்றுக் கட்சியைத் தாக்கும் கீழ்த்தரமான பேச்சாற்றலிஞல் நாடு முன்னேறிவிடப் போவதில்லே. எனது முன்னேர் பூம்புகாரிலிருந்து யவன, மிசிர, ரோம சாம்ராஜ்யங் களுடன் வியாபாரம் செய்து வந்தனர் என்று பழம் தமிழ்ப் பெருமை பேசுவதால் முன்னேறப் போவ தில்லே.

நாம் எல்லோரும் பொருளாதாரத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். பத்திரிகைகள் புதுப்புது தொழில் செய்து வெற்றி காண்போரைப்பற்றி எழுத வேண்டும். வெளிநாட்டில் நிகழும் புதிய கண்டுபிடிப்புகளேயும், ஜப்பானின் முன்னேற்றம் பற்றியும் எழுத வேண்டும். நாட்டில் தொழில்துறையால் வளர்ந்தோரின், மில்லியனர் ஆனவர்களது வரலாறுகள் எழுதப்பட வேண்டும். பள்ளிதோறும், கல்லூரிதோறும், விஞ் ஞான காட்சிகள், புதியன கண்டுபிடிக்கும் ஆர்வம் வளர்க்கப்பட வேண்டும். பல்கலேக் கழக ஆராய்ச்சிக் கூடங்களிலும், தேசிய ஆராய்ச்சிக் கூடங்களிலும் வாழ்க்கைக்குப் பயன்படும் ஆராய்ச்சி நடத்தப்பட வேண்டும். பணம் படைத்தவர்களும், அரசாங்கமும் புதியவர்கள் தொழில்துறையில் இறங்க ஆர்வமூட்ட

வேண்டும். சொல்லப்போனால் இத்தகைய எண்ணங்களால் நாடு நிறைக்கப்பட வேண்டும்.

எந்த மாநாட்டில் மனித எண்ணங்கள் தொழிலைப் பற்றியும், வியாபாரம் செய்வதைப் பற்றியும், புதியன கண்டுபிடிப்பதைப்பற்றியும், வெளிநாட்டின் தொழில் நுணுக்கங்களை அறிந்து பயன்படுத்துவது பற்றியும் எண்ணுகிறதோ அந்த நாடுதான் முன்னேறும். வறுமையின் கோரப் பிடியிலிருந்து மீளும்.

வறுமை நீங்க வேண்டும் என்று 'ஹரிபிகடோ' என்று முழக்கமிடும் அரசியல் தலைவர்கள், ஒரு பைசா கூடச் சுயமாகச் சம்பாதித்து முன்னேறியவர்களல்ல. அவர்கள் தொழில்துறையின் கஷ்டநஷ்டங்களை அறியாதவர்கள். எப்படி ஜப்பானில் தனியார் தொழில் துறையும் அரசாங்கமும் சேர்ந்து இயங்குகிறது என்பதை அறியாதவர்கள். எப்படி அமெரிக்காவில் தனியார்துறை தொழில் முன்னேற்றத்தில் அக்கறையாயிருக்கிறது? எப்படி அரசாங்கம் தன் கெடுபிடிகளை அதற்காகத் தளர்த்தி உதவுகிறது என்பதை அறியாதவர்கள். நமது தலைவர்களுக்குப் பொதுவான லட்சியம் தான் இருக்கிறது. குறிப்பிட்ட லட்சியமோ அதை அடைய தெளிவான, செயல்படுத்தக்கூடிய சரியான திட்டமோ இல்லை.

வெறும் பேச்சாளராகி மக்களிடையே அறிமுகப் பெற்று அரசியலில் நுழைந்தவர்களும், தொழில்துறை பற்றி அதிகம் அலட்டிக் கொள்ளாது மாதாமாதம் பத்திரமான சம்பளத்தை வாங்கிக்கொண்டு வீடு செல்லும் அதிகார வர்க்கமும் சேர்ந்து நம் நாட்டை நடத்துகின்றன! எங்கே இருக்கும் லட்சியம்? எப்படி வரும் பயன்படும் திட்டங்கள்?

இந்நிலை மாற தனிமனிதன் தான் ஒவ்வொரு துறை யிலும் ஆர்வம் காட்டவேண்டும். நாட்டின் ஒவ்வொரு குடிமகனுக்கும் நாட்டு நிலைமையைப் பற்றிய தெளிவு இருக்கும்போது முடிவு எடுப்பது சுலபமாக இருக்கும்.

நாடு வறுமையால் பீடிக்கப்பட்டிருக்கிறது. 33 ஆண்டுகள் ஆகியும் நம் வறுமை நம்மை விட்ட பாடில்லை. வாழ்க்கையை வசதியாய் வாழப் பணம் தேவை. பணம்தான் தேவை; ஆகவே தொழில் செய்யுங்கள்! சவுதி அரேபியாவில் உங்கள் உழைப்புத் திறனை விற்க முடியுமா? செல்லுங்கள். அமெரிக்கா வில் நமது கைத்தறிச் சட்டையோ, செம்மீனையோ, தோல் பொருட்களையோ ஏற்றுமதி செய்ய முடியுமா? செய்யுங்கள். வடஇந்தியாவிற்குச் சென்று நமது மசாலாதோசை மாவை விற்க முடியுமா? செய்யுங்கள்.

உலகம் எங்கே செல்கிறது, தொழில்துறையின் புதிய வளர்ச்சி எந்தத் துறையில் நடக்கிறது என்று கவனியுங்கள். சூரிய சக்தி (Solar Energy), மாற்று எரி பொருள்கள் (Alternative Energy) எலக்ட்ரானிக்ஸ் பாரம்பரியத்தை மாற்றும் உயிரியல் தொழில் (Genetic Engineering) என்று தொழில்கள்—புதிய துறைகள்— வேகமாக வளர்கின்றன. அவை என்ன என்று ஆராயுங்கள். கொஞ்சங் கொஞ்சமாக இறங்குங்கள். நாட்டுத் தலைவர்கள் வழி காட்டுவார்கள் என்று காத்திருக்காதீர்கள்.

# லட்சியத்தை அடைய எது தடை செய்கிறது?

முதலில் நாம் நம் லட்சியத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

நான் பணக்காரனாக வேண்டும்.

நான் டாக்டருக்குப் படிக்க வேண்டும்.

நான் பெரிய தொழிலதிபராக வரவேண்டும்.

இந்நாடு அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற வேண்டும்.

இப்படி முதலில் எது நமது லட்சியம் என்று தெளிவுபடுத்திக் கொள்ளவேண்டும். 'நான் பணக்காரனாக வேண்டும் என்று பொதுவாக நினைப்பதற்குப் பதில் 'என்ன செய்து நான் பணக்காரனாவேன்' என்று லட்சியத்தைத் தெளிவுபடுத்த வேண்டும்.

லட்சியத்தை அடைய என்ன தடைகள் ஏற்படும்? என்ன சிக்கல்கள் தோன்றும், அவற்றை எப்படிச் சமாளிக்கலாம் என்று நாம் சிந்திக்கவேண்டும். இது மனப்பயிற்சி. பலமுறை இது போன்ற மனப் பயிற்சியை ஒரு குறிப்பிட்ட லட்சியத்திற்காகத் திரும்பத் திரும்பச் செய்தால் நடைமுறையில் காரியத்தைச் செயல்படுத்தும் போது, ஏதோ பழகிய ஊரில் உலவுவது போன்ற ஒரு பயமின்மை நம்மை லட்சியத்தை நோக்கி அழைத்துச் செல்கிறது.

லட்சியத் தடைகள் யாவை? உங்களுக்குத் தன்னம்பிக்கை இல்லாமலிருக்கலாம். எடுத்த எடுப்பிலேயே 'என்ஞல் முடியாது' என்று தோன்றலாம்.

'எனக்கு ஆசைதான், ஆனல், அந்தப் பெண்ணுக்கு முறைமாமன் தாலி கட்ட உட்கார்ந்திருக்கிறான். என்ஞல் எப்படி முடியும்? என்று உங்களது ஆசையில் உங்களுக்கே ஊக்கமும் உறுதியும் இல்லாதிருக்கலாம். "நமது லட்சியத்தைப் பத்தாண்டுகளில் அடைய முடியாது. இந்தத் தலைமுறையில் முடியுமா என்பதே சந்தேகம்" என்று 'காலம் போதாது' என்று உங்கள் மனம் உபதேசிக்கக் கூடும். லட்சியத்தை நோக்கி நீங்கள் செயல்படும் போது ஏற்படும் மாற்றங்கள் புதிய அனுபவங்கள் உங்களுக்குப் பயத்தை ஊட்டலாம். தவருய்ப் போய் விடுமோ, தோற்று நஷ்டமடைவோமோ என்ற சந்தேகங்கள் தோன்றக்கூடும்.

இவை எல்லாம் லட்சியத் தடைகள்.

அத்துடன் உங்கள் குடும்பப் பொறுப்பு உங்கள் லட்சியத்திற்குக் குறுக்கே நிற்கலாம். நமது நண்பர்கள் தரும் நெருக்கடியும் உபதேசமும் நமது லட்சியத்தைக் கைவிடத் தூண்டலாம். இதற்கிடையில் 'அக்கரைப் பச்சை' என்று ஒரு புதிய லட்சியம் உங்களை ஆட்கொள்ளலாம்.

இவை அனைத்தையும் மேற்கரிக்க நாம் வழிகாண வேண்டும்.

லட்சியத்தை மாற்றிக்கொண்டே போகாதீர்கள்.

ராமசாமிப் பெரியார் நம் நாட்டில் எத்தனையோ நல்ல சமுதாய மாற்றங்கள் நிகழக் காரணமாயிருந்தார்.

காந்தியும், ஜின்னுவும் லட்சியத்தை அடைந்த போது பெரியார் தனது லட்சியத்தை அடையாத தற்குக் காரணம், அவர் லட்சியத்தை மாற்றிக் கொண்டே போனதுதான் என்பது என் அபிப்ராயம். ஜஸ்டிஸ் கட்சி என்றுர், சுயமரியாதை இயக்கம் என்றுர், பின் திராவிட நாடு என்றுர், பின் கடவுள் சிலை உடைப்பு என்றுர், இப்படி லட்சியங்களை மாற்றிக் கொண்டே செல்பவர்கள் எந்த ஊருக்கும் செல்ல மாட்டார்கள் என்பது சரித்திரம் காட்டும் உண்மை. அறிஞர்கள் இது பற்றிப் பாரபட்சமில்லாமல் ஆராய வேண்டும்.

அதேபோல இப்போதும் நம்மிடையே உள்ள பல தலைவர்களும் தங்கள் லட்சியத்தை மாற்றிக்கொண்டே இருப்பதையும், கட்சியை மாற்றிக்கொண்டே இருப்ப தையும், கவனியுங்கள். என்ன சாதிக்கிருர்கள் என்பதையும் அத்துடன் சேர்த்து எடை போடுங்கள்.

சுயவளர்ச்சிப் புத்தகங்களை நிறைய எழுதிய நெப்போலியன் ஹில் கூறுகிருர்: 'வெற்றியாளர்கள் தங்கள் லட்சியத்தை மாற்றிக்கொண்டே இருப்ப தில்லை. அந்தக்காலத்து மக்களால் ஒரு தரமாவது அவர்கள், 'உலகமறியாத பிடிவாதக்காரன்' என்று தூற்றப்பட்டிருக்கிருர்கள். மாருக தோல்வியாளர்கள் காற்று வீச வீச வேறு ஒரு புதிய லட்சியத்திற்குத் தாவிகொண்டிருப்பார்கள்.

'தேவையானுல் லட்சியத்திற்கான பாதையை மாற்றுங்கள். ஆனுல், லட்சியத்தை மாற்ருதீர்கள். வெற்றியாளர்கள் கொண்ட லட்சியத்தை மாற்று வதில்லை'' என்று எழுதுகிருர். இதையே வள்ளுவரும் 'எண்ணித் துணிக கருமம்' என்கிருர்.

உங்கள் லட்சியத்தைத் தீர்மானிக்கும்போது, "நான் லாட்டரிச் சீட்டு வாங்கிப் பணக்காரனுவேன்!" என்று திட்டம் தீட்டாதீர்கள். வெளி உலக உதவி யின்றி—எதிர்பாராத அதிர்ஷ்டத்தை எதிர்பார்க்காது —உங்கள் லட்சியம் அமைக்கப்பட வேண்டும்.

உங்கள் லட்சியம் உங்கள் மனத் திட்டத்தாலும் திறமையாலும், சாதுரியத்தாலும், பேச்சு வன்மை யாலும், துணிச்சலாலும், முடிவெடுக்கும் திறமையா லும் சாதிக்கக் கூடியதாக இருக்க வேண்டும்.

சரித்திரத்தைப் பார்த்தோமானுல், பிரபல அரசியல் தலைவர்கள் எல்லாம், பெரிய தொழிலதிபர்கள் எல்லாம், லட்சியத்தில் விடாப்பிடியான நம்பிக்கை கொண்டு, யாரையும் லட்சியம் செய்யாமல், கொண்ட காரியத்தைச் சாதித்திருப்பது புலப்படும்.

ஆகவே சரித்திரம் படியுங்கள்

நாட்டுத் தலைவனுக வர ஆசையா? தேசத்தின் வரலாறுகளைப் படியுங்கள். பெரிய தொழிலதிபராக வரவேண்டுமா? டாடா, பிர்லா, ஜி. டி. நாயுடு போன் ருேரின் வாழ்க்கை வரலாறுகளைப் படியுங்கள். விஞ்ஞானியாக வரவேண்டுமா? ஐன்ஸ்டைன், நியூட் டன், கெகுலே, சர். சி. வி. ராமன் போன்ருேரின் வரலாறுகளைப் படியுங்கள். எந்த ஓர் இடத்திலாவது நீங்களும் அவர்கள் இருந்த நிலையில்தான் இருப்பதாக ஒரு தொடர்பு ஏற்படும். அவர்களது கற்பனையும், உழைப்பும் விடாமுயற்சியும் நமக்கு ஊக்கத்தை அளிக்கும்.

நமது ஊரில் நாவல்களையும், தொடர் கதைகளை யும் சிறுகதைகளையும் படிக்கிற அளவுக்குத் தமிழ்

நாட்டு வாசகர்களின் ஆர்வத்தைக் கட்டுரை படிப்பதிலும் வரலாறு படிப்பதிலும், சரித்திரம் படிப்பதிலும், விஞ்ஞானம், தொழில் பற்றி படிப்பதிலும் தமிழ் நாட்டுப் பத்திரிகாசிரியர்கள் வளர்த்திருந்தால் தமிழ் நாடு இன்று போல் 'எடுப்பார் கைப்பிள்ளையாக' இருந்திருக்காது.

நமது ஊர் பத்திரிகாசிரியர்கள் சற்று சுயசோதனை செய்து கொள்ளவேண்டும்.

ஆனால், அவர்கள் என்ன சொல்கிறார்கள், 'மக்கள் எதை விரும்புகிறார்களோ அதைக் கொடுக்கிறோம்' என்று. 'ஒரு பெண்ணின் ஆடை நெகிழ்ந்த நிலையை வருணிப்பதில், அல்லது அத்தகைய 'கவர்ச்சிப் படத்தை'க் காண்பதில் மக்கள் ஆர்வம் காட்டுகிறார்கள். ஆகவே அதைத் தருகிறோம்' என்கிறார்கள். பெண்ணையும், செக்ஸையும் மட்டுமே கொண்டு இவர்கள் வியாபாரம் செய்தால் நாடு எங்கே போகும்? 'ஏன், அரசியலார்க்கு தாளம் போட பக்க வாத்தியக் குழுவே வைத்திருக்கிறோமே' என்று சில பத்திரிகாசிரியர்கள் கூறக்கூடும்.

எனக்குப் பத்திரிகாசிரியர்கள்மீது ஏதும் காழ்ப்பு அல்ல.

'குமுத'த்தின் எஸ். ஏ. பி., 'விகடனின்' பாலன், 'இதயத்'தின் மணியன்—இவர்களிடம் எனக்கு மதிப்பு உண்டு.

ஆனால், நாம் நன்றாக நினைவில் கொள்ள வேண்டும். நாம் எதை விதைக்கிறோமோ அதுதான் வளரும். மக்கள் மனத்தை எதனால் நிரப்புகின்றோமோ அத்தகைய செயல்கள்தான் மக்களிடமிருந்து புறப்

படும். சினிமாவையும், அரசியலையும் அத்தைபாட்டிக் கதையையும் இட்டு நிரப்பினால் என்ன மிஞ்சும்?

நம்மிடமிருக்கும் பத்திரிகை என்கிற அற்புதக் கருவியை வைத்துக்கொண்டு நாமே அதைச் சரியாகக் கையாளாமல், இவர்கள், 'நாடு இப்படிப் போகிறதே' என்று அடிக்கடி தலையங்கங்கள் மூலம் அங்கலாய்ப் பதை என்னவென்று சொல்வது?

தெரிந்துதான் செய்கிறார்களா? இல்லை, உண்மை யாகவே தெரியாமல்தான் செய்கிறார்களா? ஆண்டவனே!

லெட்ஸ் ஆன்!

# சொந்தமாகச் சிந்தித்து சுயமாகச் செயல்படுங்கள்

இரண்டு காரணங்களுக்காக முடிவெடுப்பதில் மனிதர்கள் தயக்கம் காட்டுகிறார்கள். ஒரு பிரச்சினைக்கு எல்லா வழிகளையும் நாம் கண்டுபிடித்துவிட முடியாது. முடிவெடுக்கத் தயங்குபவர்கள், 'வேறு ஏதாவது வழி இருக்குமோ! கொஞ்சம் தாமதித்துப் பார்க்கலாமோ!' என்று எண்ணுகிறார்கள். உண்மை.

பல விஷயங்கள் நம் கவனத்திற்கு வராமலே போகும். அதை நிவர்த்திக்க, விஷயம் தெரிந்தவர்களை நாம் யோசனை கேட்கலாம். அதற்காக 'ஆகட்டும் பார்க்கலாம். ஆகட்டும் பார்க்கலாம்' என்று விஷயங்களை ஒத்திப் போட்டுக்கொண்டே போக முடியாது. போடுவதனால் நாளுக்கு நாள் அப்பிரச்சினை பெரிதாகி, தட்டிக்கழிக்கும் குற்ற உணர்வும், 'நாம் கையாலாகாத மனிதன்' என்ற தாழ்வு உணர்வும்தான் அதிகரிக்கும். ஆகவே கூடுமானவரை சட்டென்று முடிவு செய்ய முயலுங்கள். தலைவனின் குணங்களான 'கருரும் கண்டிப்பும்' முடிவெடுப்பதில் ஒரு தீர்மானமாக—துணிச்சலாகப் பிரதிபலிக்க வேண்டும். அது இல்லாத போது தலைவன் மதிக்கப்படுவதில்லை.

ஈரானின் அமெரிக்கத் தூதுவரகத்தைச் சேர்ந்தவர்களைச் சிறை வைத்தபோது, அமெரிக்க ஜனாதிபதி கார்ட்டர் என்ன செய்வதென்று தெரியாமல் நாளைக் கடத்திக் கொண்டிருந்தார். 'வெட்டொன்று துண்

டிரண்டு' என்பதுபோல அவர் சட்டென்று ராணுவத்தையோ, வேறு ஏதாவது வழியையோ உடனடியாக எடுத்திருந்தாரானால், மக்கள் மனத்தில் அவரைப் பற்றிய கம்பீரம் உயர்ந்திருக்கும். அவர் தயக்கம் காட்டியதன் விளைவாக, மக்கள் அவரை 'ஜனாதிபதி பதவிக்கு லாயக்கில்லாத மனிதர்' என்று தீர்மானித்தனர்.

நாளைக்குப் போகலாம், நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லிக் கொண்டிருந்தால் அது 'திருநாளைப் போவார்' கதையாகத்தான் முடியும்! விளைச்சல் நிலத்தில் கூடுகட்டி இருந்த தாய்ப் பறவைக்கு, குஞ்சுகள் கூறின: "அம்மா! நாளைக்கு ஆட்களை அழைத்து வந்து அறுவடை செய்வதாகக் கூறிவிட்டுப் போனார்கள்!" என்று. தாய்ப் பறவை கவலைப்படவில்லை. தன் வேலைக்குப் பிறரை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறவரை—வேலையைத் தள்ளிப் போடுகிறவரை—நாம் கவலைப்பட வேண்டியதில்லை என்று எண்ணி—குஞ்சுகளுக்குத் தைரியம் கூறியது தாய்ப்பறவை!

முடிவெடுப்பதற்கு மனிதர்கள் தயங்கும் இரண்டாவது காரணம், 'அந்த வழியில் போயிருந்தால் இந்தக் கஷ்டம் வந்திருக்காதோ' என்று எண்ணும் அவலம்.

ஒரு காரியத்தை எடுத்துக் கொள்ளும்போது நம்மால் எல்லா மாற்று வழிகளையும் உபயோகித்து அவை ஒவ்வொன்றின் விளைவுகளையும் முன்கூட்டியே அறிந்துகொள்ள முடியாது.

பள்ளிக்கூடத்தில் கரும்பலகையில் எழுதியதை அழித்துவிட்டு, மீண்டும் புதிதாக எழுதுவதைப் போல நாம் செய்த காரியங்களை அழித்துவிட்டு மீண்டும்

முதலிலிருந்து வேறு வழியில் துவங்க முடியாது. எந்த வழியைப் பின்பற்றினோமோ அந்த வழியின் விளைவுகளை நாம் சந்தித்தாக வேண்டும். அவற்றை அழித்துவிட முடியாது.

இந்த இரண்டு வழிகளும் இல்லாமல், பேசாமலிருந்துவிட்டால் பிரச்சினை தானே போய்விடும் என்று சிலர் எண்ணுகிறார்கள். ஒத்திப் போட்டால் மறைந்துவிடும் என்று எண்ணுகிறார்கள். ஒரு விஷயத்திற்காக ஒரு நபர் உங்களிடம் வருகிறார் என்றால் 'உண்டு' 'இல்லை' என்று தெளிவாகக் கூறிவிட வேண்டும். மாறாக 'நாட்களைக் கடத்துவோம். மனிதன் தானே புரிந்துகொள்வார்' என்று சிலர் நமது ஊரில் விஷயங்களைக் கையாளுகின்றனர்.

'உண்டு' அல்லது 'இல்லை' என்று கூறும்போது உங்களது உண்மையான செயலுக்காகவும் நேர்மைக்காகவும் மற்றவன் பாராட்டுவான். ஒத்திப் போட்டு, இழுத்தடிக்கும்போது உங்களைப் பிற மனிதன் கேவலமாகக் கருதுவான். உங்கள் குணநலனில் இதனால் களங்கம், குறை, பழுது ஏற்படுகின்றன. மனிதர்கள் இதை மதிப்பதில்லை.

'பெட்ரோலிய எண்ணெய்ப் பொருட்கள் வருங்காலத்தில் அரிதாகிவிடும்; ஆகவே எரிபொருள் தட்டுப்பாடு ஏற்படும்' என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். நாம் என்ன செய்ய வேண்டும்?

கிடைக்கும் எரிபொருட்களை நிறைய சேகரித்து வைக்கலாம். மாற்று எரிபொருள் கண்டுபிடிக்க முயலலாம். புதிய இடங்களில் தோண்டி எண்ணெய் கண்டுபிடிக்க முயலலாம்.

இதைப் போலவே நமது சொந்த வாழ்வில் ஏற்படும் பிரச்னைகளுக்கும் பலவித மாற்று வழிகள் உண்டு. அவற்றில் சிறந்ததை, நம் நிலைக்கு ஏற்றவாறு எது நல்லது, எது அதிக பலன் தரும் என்று நாம் தேர்ந்தெடுக்க வேண்டும். விஷயம் சிக்கலாக இருக்கும் போது சற்று குழப்பம்—பயம் ஏற்படக்கூடும். அந்தச் சமயங்களில் வாழ்வில் முன்பு எப்படி இக்கட்டான சம்பவங்களைச் சமாளித்தோம். என்ன முடிவு எடுத்தோம் என்று நாம் பழைய பாதையை மனத்தில் விரிவுபடுத்த வேண்டும். முன்பு முடிவெடுத்ததைக் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

முன்பு எப்படி முடிவு செய்தீர்கள்?

பள்ளிப் படிப்பு முடிந்ததும் மேலே என்ன செய்வது என்று எப்படித் தீர்மானித்தீர்கள்?

எப்படி மனைவியையோ, கணவனையோ தேர்ந்தெடுத்தீர்கள்?

எப்போது குழந்தை பெற்றுக்கொள்வது என்று எப்படித் தீர்மானித்தீர்கள்?

எந்த வேலைக்குப் போவது என்று எப்படி முடிவு செய்தீர்கள்?

இவற்றைப் பற்றி அமைதியாகச் சிந்தியுங்கள்.

இவற்றிற்குப் பதிலை அண்ணா நகர் சோணாசலம் சொல்வதைக் கேளுங்கள்:

“பள்ளியில் படித்து முடித்ததும் கல்லூரிக்குப் போ என்றார்கள். பச்சையப்பன் கல்லூரிதான் அருகில் இருந்தது.”

“நான் என்ன சார் முடிவு செய்தேன். மாமன் மகள் தயாராக சேலத்தில் இருந்தாள். பி. யூ. சி.

படித்துக் கொண்டிருந்தாள். அப்பாவும் அம்மாவும் தீர்மானித்தார்கள். நான் சரி என்று சொன்னேன். நானுகக் காதலித்தா முடிவு பண்ணினேன்?"

"குழந்தை பழனியப்பன் பிறந்ததைக் கேட்கிறீர்களா? கல்யாணமான புதிது. ஒன்றும் தெரியாது. 'பிளான்' ஒன்றும் இல்லை. நாங்கள் இருவரும் அறியாமல், திடீரென்று, 'முழுகாமல் இருக்கிறேன்' என்ருள். அவ்வளவுதான்!"

"வேலைக்கு எங்கே போய் நாம் பிடித்த வேலையைப் பெறுவது? இந்தக் காலத்தில் வேலை கிடைத்தால் போதாதா? என் மாமனுருடைய மைத்துனியின் கணவர் ஒரு எம். எல். ஏ. அவரும் நம்ப அமைச்சர் மன்னூர்சாமியும் கிளாஸ்மேட். நம்ம மாமனுர் அவரிடம் கொஞ்சம் தள்ளினுர். நல்ல வேலை கிடைச்சது!"

திரு. சோணுசலம் ஒரு கற்பனை மனிதராக இருந்தாலும் பெரும்பாலும் வாழ்வில்—நமது ஊரில்—சம்பவங்கள் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கின்றன. நமது கட்டுப்பாட்டில் நாம் தீர ஆராய்ந்து முடிவெடுத்து விஷயங்கள் நிகழ்வதில்லை.

நமது அப்பா, அம்மா நமக்காக முடிவு செய்கிருர்கள். நமது ஆசிரியர்கள் முடிவு செய்கிருர்கள். நமது மாமனுர், மேலதிகாரி, சமுதாயம் என்று இப்படிப் பிறர் நமக்காக முடிவெடுக்கிருர்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே நாம் நம் காலில் நிற்காமல், சுயநிர்ணயப் பயிற்சி இல்லாமல் வளர்ந்து வருகிருேம். இது பெரிய குறை.

இந்த நிலையை எதிர்காலத்திலாவது நாம் மாற்ற முயல வேண்டும். குழந்தைகளைச் சிறு வயது முதலே எல்லா விஷயங்களிலும் ஈடுபடுத்துங்கள். தெரிவியுங்

கள். கலந்தாலோசிக்கும் ஒரு பண்பை வளருங்கள். வழி காட்டுங்கள். அவர்கள் விஷயத்தில், ஒரு பொம்மை வாங்குவதிலிருந்து அவர்களாகவே முடிவு செய்யப் பழக்குங்கள். அவர்களது அபிப்பிராயங்களைக் கேளுங்கள். மதியுங்கள். முடிவெடுக்க அனுமதி யுங்கள். நிர்ப்பந்திக்காதீர்கள். தவருனாலும் ஏற்றுக் கொள்ளுங்கள். திருந்துவதற்கு ஏற்ற வகையில் கோடிட்டுக் காட்டுங்கள்.

எடுத்த முடிவு தவருனால், 'நீ அப்படி எடுத்தாயே பார்! எப்படி ஆயிற்று!' என்று சதா குத்திக் காட்டி அவர்கள் நம்பிக்கையைப் பாழ்படுத்தாதீர்கள். 'அடுத்தமுறை நன்ருகச் செய்வாய்' என்று உற்சாகப் படுத்துங்கள். வீட்டில் கெடுபிடிகளைக் குறையுங்கள். முன்னேறும் எதிர்கால சமுதாயம் உங்கள் வீட்டுக் குழந்தையிலிருந்துதான் கிளம்புகிறது.

# திட்டமிடுங்கள்; செயல்படுங்கள்...

சரியான தெளிவின்றி, சரியான வழிகாட்டுவோரின்றி, நம் திறமையைப்பற்றி நாமே அறியாமல், நாம் பல பிடிக்காத வேலைகளில் ஈடுபட்டிருக்கிறோம். 'எப்போதுமே எனக்குச் சொந்தத் தொழில் செய்ய வேண்டும் என்று ஓர் ஆசை உண்டு' என்றோ, 'கல்லூரிப் பேராசிரியராக ஆக வேண்டுமென்று வெகு நாளாய் எனக்கு ஓர் ஆசை' என்றோ பலர் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

உலக மனிதர்கள் தங்கள் திறமைகளுக்கேற்ற தொழிலில் இறங்குவதில்லை. மனிதர்கள் பெரும்பாலும் எதில் தங்கள் திறமை என்பதை உணர்வதில்லை. தனக்குத் தானே அப்படி ஒரு சந்தர்ப்பம் கொடுப்பதில்லை. ஏதோ கிடைத்த வேலையில் நுழைகிறார்கள். 'வேலை கிடைத்தால் போதும் என்கிற நிலையில் எது பிடிக்கிறது என்று வேறு கூற முடியுமா?' என்று கேட்பது காதில் விழுகிறது.

நமக்குப் பிடித்த துறையில் நாம் புகும்போதுதான் நமது முழுத்திறமையும் வெளி வரும். பிடிக்காத துறையில், பிடிக்காத வேலையைச் செய்பவர்கள், வேலை எந்த அளவுக்குத் தேவையோ அதைத்தான் செய்வார்கள். அதே போல் அலுவலகத்தில் சுதந்திரம் அளிக்கப்படாதவர்கள் மாலை எப்போது வரும், நாடகக் குருப்புடன் நாடக ஒத்திகைக்குப் போகலாம் என்று எண்ணிக் கொண்டிருப்பார்கள்.

வாழ்க்கை என்பது வருகிற சந்தர்ப்பங்களுக்கேற்ப நடந்து கொள்வது என்பதாக இருக்கக்கூடாது.

அப்படி நேரும்போது பிற விஷயங்கள் உங்கள் வாழ்க்கையின் சூத்திரக் கயிருகி ஆட்டிப் படைப்பதை உணர்வீர்கள். பிற விஷயங்கள் நேர நேர அதற்கேற்ப நாம் ஆடுவதற்கும் பதில், எந்த விஷயங்கள் புற வாழ்க்கையில் நேர வேண்டுமென்று நாம் விரும்பு கிருேமோ அதை நாம் செயல்படுத்த வேண்டும்.

ஆகவே, நம் வாழ்க்கை நாம் விரும்புமாறு அமைய நாம்தான் திட்டமிட வேண்டும்.

'இன்ன துறையில்தான் இறங்குவேன்' என்று தீர்மானியுங்கள். சொந்தத் தொழில் செய்து லட்சாதி பதியாவேன் என்று சொல்லிக்கொள்ளுங்கள். கடனி லிருந்து மீள்வேன் என்று சபதம் செய்யுங்கள். என் மனைவி மக்களுடன் மீண்டும் நல்லுறவு கொள்வேன் என்று சொல்லிக்கொள்ளுங்கள். அறிவாற்றலும், திறமையும் கம்பீரமும் கொண்ட ஆணையோ பெண்ணையோமணந்துகொள்வதாகத் தீர்மானியுங்கள்.

எது உங்கள் லட்சியமானாலும் திட்டமிடுங்கள். அதை எப்படிச் செயல்படுத்தலாம் என்று விவரமாக யோசியுங்கள்! ஜேம்ஸ் ஆலன் கூறுகிருர், "ஆசை களும் கனவுகளும் பலிக்க வேண்டுமானுல், எண்ணமும் செயலும் ஒன்றையொன்று தழுவி இணைந்து செயல்பட வேண்டும்" என்று. ஆசைகளைக் காற்றிலே உலாவவிடாதீர்கள். அவற்றைப் பிடித்து தாளுக்குக் கொண்டு வாருங்கள்; ஒரு தாளில் எழுதுங்கள். பின் நடைமுறையில் இந்த எண்ணத்தை எப்படிச் செயல்படுத்தலாம் என்று யோசியுங்கள்; செயல்படுத்துங்கள்.

லட்சியத்தை, அடையக்கூடியதாக—சமாளிக்கக் கூடியதாகத் தேர்ந்தெடுங்கள்.

கோலிக்குண்டு விளையாட்டு விளையாடும்போது ஒரு குறிப்பிட்ட தொலைவில் நின்றுகொண்டு குழியை

நோக்கிக் கோலிக் குண்டை உருட்டுகிறோம். குழியி லிருந்து வெகுதொலைவில் நின்றுகொண்டு உருட்டினால் அது குழியில் விழாது. நமக்கே தெரியும், அது விழப் போவதில்லை என்று. பதிலாகக் குழிக்கு அருகில் நின்றுகொண்டு கோலியைக் குழியில் போட்டால் அதில் நம் திறமைக்கு வேலையில்லை. நமக்கே வெட்கம் தான் ஏற்படும். பயந்தவனின் செயல் அது; தன் திறமையில் நம்பிக்கை இல்லாதவன் செயல் அது. ஆகவேதான் ஒரு குறிப்பிட்ட தொலைவில் நின்று கொண்டு கோலிக் குண்டை வீசி எறிகிறோம்.

'அடையக்கூடியதாகவும், அதே சமயம் சுலப மாய் அடைய முடியாததாகவும் இருக்க வேண்டும் லட்சியம்' என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர்கள். இதன் அவசியத்தைப்பற்றிக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

சொந்தத் தொழில் செய்பவர்கள் வெற்றி அடை வார்களா, மாட்டார்களா என்பதற்கு இப்படி ஒரு கோலிக் குண்டு—குழி விளையாட்டை ஒரு சோதனை யாகக் கொடுக்கிறார்கள். தொழிலில் இறங்குப வனுக்குத் தன்னம்பிக்கை வேண்டும். கஷ்டங்களைச் சமாளிக்கும் துணிச்சல் வேண்டும். குண்டு, குழியில் விழுமா விழாதா என்பது நூறு சதவிகிதம் அவன் கையில் இல்லை. அதை அவன் உணர்ந்திருக்க வேண்டும்.

எல்லா திட்டங்களுக்கும், ஒரு கால வரையறையை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 40-வது வயதில் லட்சாதிபதியாயிருப்பேன் என்றோ, 30 வயதுகளுள் புகழ்பெற்ற நடிகாராய் இருப்பேன்என்றோ 35 வயதிற்குள் விஞ்ஞானியாக ஒளிவிடுவேன் என்றோ ஒரு காலவரையறையை ஏற்படுத்திக்கொள்ளுங்கள்.

ஆறு மாதத்தில் என்ன, இரண்டு வருடத்தில் என்ன, ஐந்தாண்டுகளில் என்ன என்று, வரிசையாக

முன்கூட்டிச் சிந்தியுங்கள்; திட்டமிடுங்கள். என்றோ ஒருநாள் நான் அந்தப் பிரபல நாவலை எழுதுவேன் என்றோ, பெரிய தலைவனாக ஆவேன் என்றோ எண்ணாதீர்கள். காலவரையறை இல்லாத திட்டங்கள் வெறும் கற்பனைகள்.

எதற்கும் கால அவசரம் வேண்டும். இல்லா விட்டால் காலங்கள் ஓடும்; லட்சியங்கள் நிறை வேறாது.

தினமும் படுக்கப் போகும்முன், 'என் லட்சியத் திற்காக இன்று என்ன செய்தேன்' என்று கேட்டுக் கொள்ளுங்கள். காலையில் எழுந்ததும் 'என் லட்சியத் திற்காக இன்று இன்ன காரியம் செய்யப் போகிறேன்' என்று சொல்லிக் கொண்டு துவங்குங்கள்.

செயல், செயல், செயல்! அதில்தான் வெற்றியின் ரகசியம் இருக்கிறது. ஆசை செயலாகாதவரை அது கற்பனையில்தான் நிற்கிறது. ஆகவே லட்சியத்தை நோக்கிச் செயல்படுங்கள்.

பதினாறு மொழி பேசும் மக்களையும் தன் லட்சியத் தால் மகாத்மா காந்தி ஒற்றுமைப்படுததினாரே அது செயல். தேசியப் பாடல்களைப் பாடிக்கொண்டே நாட் டுக்காகச் சிறை சென்றாரே பாரதி, அது செயல். தண்ணீர் வேண்டும் என்று கிணறு தோண்டுகிறோமே, அது செயல். தொழில் துவங்குவேன் என்று நீங்கள் பாங்கு மானேஜரை அணுகி உங்கள் தொழில் திட்டத்தை விவரிக்கிறீர்களே, அது செயல். அரிஜனப் பிள்ளைகள் படிப்பின்றிக் கெட்டுப் போகிறார்கள் என்று தானே அவர்களுக்காக ஒரு பள்ளியைத் துவங்கு கிறாரே ஒரு பிராமணர், தஞ்சை மாவட்டத்தில், அது செயல்!

செயல் புரியுங்கள்.

கர்மவீரனாக மலருங்கள்.

# செயல் மட்டுமே
# விரும்பிய பலனைக் கொடுக்கும்...

"நீங்கள் எது சொன்னாலும் சரி, நீங்கள்தான் எனக்குக் குரு" என்று சொல்பவர்களைக் கண்டிருக்கிறீர்களா? "நீங்கள்தான் என் தலைவன் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள்!" என்று தலைவனைத் தூக்கி வைத்து தன்னைத் தாழ்த்திக்கொண்டு 'சகாயம் பெறலாம்' என்று எண்ணும் சக பிரயாணிகளைக் கண்டிருக்கிறீர்களா?

இப்படிச் சொல்வதன் மூலம் நாம் நமது சுதந்திரத்தைப் பறி கொடுக்கிறோம். உரிமையைப் பறி கொடுக்கிறோம், நாம் எடுக்க வேண்டிய முடிவுகளைப் பிறர் கையில் ஒப்படைத்துவிட்டு நாம் நம் பொறுப்பைத் தட்டிக் கழிக்கிறோம்.

"நான் உங்களுக்கு ஓட்டுப் போடுவதும் போடாததும் உங்கள் கொள்கையைப் பரிசீலனை செய்தபின் தான் சொல்ல முடியும்!" என்று ஒரு தலைவன் முன் நீங்கள் கூறுவதாகக் கற்பனை செய்து பாருங்கள். 'எத்தனை சுய கௌரவம் எனக்கு' என்று உங்களை நீங்களே பாராட்டிக் கொள்வீர்கள் அல்லவா?

மனிதர்கள் தங்கள் உரிமைகளை இழப்பதும், ஒரு பெண் தன் கற்பை இழப்பதும் ஒன்றுதான். ஒரு மனிதன் தன் உரிமைகளை விட்டுக் கொடுப்பதும், ஒரு பெண் தன் கற்பை விட்டுக் கொடுப்பதும் ஒன்றுதான்.

நாம், நாமாக வாழ, நம் இஷ்டப்படி வாழ, நமக்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. பொதுவான சமுதாய விதிகளை மீறக்கூடாதே தவிர, நாம் சொந்த ஆசைகளுக்கேற்ப நம் வாழ்க்கையைப்பற்றி நாம்தான் முடிவெடுக்க வேண்டும். சமுதாய விதிகள்கூட பல நாமாக ஏற்படுத்திக் கொண்டதுதான். இதில் புனித என்றும் ஏதும் இல்லை. சில சமயம் பொது விதிகளைக் கூட தூக்கி எறியும் மனப்பக்குவமும் துணிச்சலும் நமக்கு வேண்டும்.

பெரும்பாலான மக்கள் எப்படியோ வாழ்ந்தால் போதும், ஈயாக, எறும்பாக, எருமை மாடாக என்று எண்ணும்வரை மனிதன் மனித வாழ்க்கையின் உச்சத்தை எய்த மாட்டான். "நான் நல்லவனாக வாழ்வேன், நாடு போற்ற வாழ்வேன், நாட்டுக்குப் பயன்படும் நல்ல காரியங்களைச் செய்வேன்" என்று நீங்கள் முடிவெடுக்கலாம். மாறாக "ஏதோ பதவி இருக்கிறது. அடிபடாமல், உதைபடாமல் பத்திரமாக எல்லாருக்கும் தாளம் போட்டுக் கொண்டு வாழ்வேன்" என்றும் நீங்கள் தீர்மானம் செய்யலாம்.

இப்படிப்பட்ட இக்கட்டான சமயங்களில்—இரண்டிலொன்று என்று முடிவெடுக்க வேண்டிய சமயங்களில் பலரும் சோதனைக்குள்ளாகிறார்கள். அவர்கள் சொல்லும் சமாதானங்கள் யாவை? அவர்கள் எழுப்பும் அழுகுரல் சொற்கள் எவை?

'குடும்பப் பொறுப்பு இருக்கிறதே என்ன செய்ய முடியும்?'

'விளைவு எப்படி முடியுமோ என்று பயப்படுகிறேன்!'

'என்னிடம் பணமோ வசதியோ இல்லையே, நான் என்ன செய்ய முடியும்?'

'இப்படி முடிவெடுக்க எனக்கு அவகாசமில்லை. ஆகவே இருக்கிற நிலையே மேல்'' என்று அங்கலாய்க்கிறார்கள் இவர்கள்.

ஒரு துணிச்சலான முடிவு நம் வாழ்வை எந்தவிதத்தில் முன்னேற்றும் என்று நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். இந்த முடிவு நமக்களிக்கப்பட்ட சந்தர்ப்பம் என்று நாம் கருத வேண்டும். நான் அடைய விரும்புவதை எதுவும் தடை செய்யவிட மாட்டேன் என்று நாம் சொல்லிக்கொள்ள வேண்டும்.

''நல்ல முடிவு எடுத்து வாழ்வில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி முன்னேற வேண்டும் என்ற ஆசை எல்லாருக்கும் இருக்கிறது. ஆனால் முடிவு எடுத்தபின், காரியம் என்று வரும்போதுதான் அவர்கள் தயங்குகிறார்கள்'' என்று கூறுகிறார்கள் மனோ இயல் அறிஞர்கள்.

''சரி! இந்த ஊரைவிட்டுப் போனால்தான் முன்னேற முடியும்!'' என்று தீர்மானிக்கிறீர்கள். சவுதி அரேபியாவுக்கோ, கென்யாவுக்கோ, அமெரிக்காவுக்கோ செல்ல ஆசைபடுகிறார்கள். இல்லை குறைந்த பட்சம் பம்பாய்க்கோ பஞ்சாபிற்கோ வேலை வாய்ப்பை நாடி குடிபெயரத் தீர்மானிக்கிறார்கள். காரியம் என்று வரும்போது 'எனக்கு மொழி தெரியாதே', 'கையில் போதுமான பணமில்லையே', 'அந்த ஊர் மக்கள் எல்லாம் முரடர்களாய் இருப்பார்களோ' என்ற எண்ணங்கள் பிறக்கின்றன.

ஊருக்குப் போகவேண்டும் என்று தீர்மானித்து விட்டால் போதாது; நாம் டிக்கெட் வாங்கியாக

வேண்டும். ரயில் பயணத்தை மேற்கொள்ள வேண்டும். அதாவது செயல் மட்டுமே உங்கள் முடிவு களின் பயன்களைக் கொண்டு தரும். வெறும் தீர்மானம் மட்டும் எதையும் செய்யாது.

இத்துடன் நமது ஊரில் கட்சி மாநாடுகளில் எடுக்கும் 27 தீர்மானங்களைப்பற்றி எண்ணிப் பாருங் கள். தீர்மானங்கள் பலத்த விவாதத்திற்குப்பின் நிறைவேறும். ஒருநாளும் செயலாக்கமாட்டார்கள்; செயலாக்கும் எண்ணமே லவலேசமும் இருக்காது. இப்படி நமது ஊர் கட்சி மாநாடுகளில் தீர்மானங்கள் நிறைவேற்றப்படுகின்றன. ஆக மொத்தத்தில் நாமெல்லாம் பேச்சு வீரர்கள். பேசிவிட்டாலே காரியம் ஆகிவிட்டது என்று எண்ணித் திருப்திப்படும் ஆத்மாக்கள்.

தீர்மானங்களைச் செயலாக்க முடியாது என்றால் மாற்றுவழி காணுங்கள். செயலாக்க முடியாதபோது அத்தகையதோர் முடிவை எடுக்காதீர்கள். முடி வெடுத்து நிறைவேற்றாத தீர்மானங்களைப் பார்த்துப் பார்த்து மனம், அப்படியே பழகிவிடும். இதன் மூலம் எட்டாத பழத்திற்குக் கொட்டாவிவிடும் கையா லாகாத மனிதனாக உங்களை உங்கள் மனப் பழக்கம் ஆக்கி விடும்.

காரியம் செய்ய வேண்டுமென்று வரும்போது, சட் டென்று செய்யுங்கள். நினைத்துப் பார்க்கப் பார்க்க தாமதிக்கத் தாமதிக்க, உங்களுக்குச் சந்தேகமும் பயமும் தோன்றி உங்களைக் காரியம் செய்ய முடியாத படி முடக்கி விடும்.

செயலில் இறங்கிவிட்டீர்களானால், அந்த செய் கையே உங்களுக்கு ஒரு தன்னம்பிக்கையைக் கொடுக் கும், 'வேகமாகச் செயல்படும் மனிதர்' என்ற சுயமதிப்பு

உங்கள் மனநிலையைத் தூக்கிவிடும். அதே சமயம், இப்போதுதான் உங்கள் நண்பர்களும் உறவினர்களும் நீங்கள் எடுத்த முடிவு சரிதானு என்ற கேள்விக் குறிகளைக் கிளப்புவார்கள். அதைரியமூட்டுவார்கள். உங்கள் தன்னம்பிக்கையைப் புறம்காட்டும் அளவுக்கு உங்களைக் கேள்விகளால் துளைத்தெடுப்பார்கள். இது ஒரு நியாயமான கட்டம்; எதிர்பார்க்க வேண்டிய கட்டம். இப்படி எதிர்பார்ப்பார்கள் என்று முன் கூட்டியே எதிர்பார்ப்பதன் மூலம் நாம் அவர்களுக்குத் தயாராக இருக்கிறோம்.

சிலர் இந்தச் சந்தர்ப்பங்களில் பின்வாங்குவார்கள். அவர்களுக்கு அந்தச் சமயத்தில் நம்பிக்கை போய்விடு கிறது. சந்தேகம் என்ற சிறையில் தங்களைத் தள்ளிக் கொண்டு சங்கடப்படுவார்கள்.

நாம் எடுத்த முடிவுகளுக்காக நாம் எழுந்து நிற்க வேண்டும். வாதாட வேண்டும். அப்படி வாதிடும் போது மீண்டும் நிலைமையைப் பரிசீலிக்க மற்றுமோர் சந்தர்ப்பம் கிடைக்கிறது. உங்கள் நிலையை நீங்கள் மட்டுமே அனுமானிக்க முடியும். உங்கள் வாழ்க்கையை பற்றிய நிபுணர் நீங்கள்தான். ஆகவே, நீங்கள்தான் துணிவுடன் உங்கள் முடிவுக்குப் பின்னு லும் முன்னுலும் நிற்க வேண்டும்.

உங்கள் சொந்த வாழ்க்கைக்கு நீங்கள்தான் தலைவன். ஆகவே மற்ற யாரையும் அங்கே தலைவ னுக்காதீர்கள். அத்தை, பாட்டி, அப்பா, அம்மா, ஆசிரியர், மருத்துவர், அறிஞர் என்று யார் கூறினு லும், காது கொடுத்துக் கேளுங்கள்; ஆனுல் எடுக்க வேண்டிய முடிவு உங்கள் முடிவு, உங்களுக்கே சொந்தமான முடிவு.

சில கற்பனைச் சம்பவங்களை உங்கள்முன் வைக் கிறேன். அத்தகைய சூழ்நிலைகளில் நீங்கள் எப்படி முடி

வெடுப்பீர்கள் என்று நிதானமாக யோசியுங்கள். உங்கள் முடிவுகளை ஒரு தாளில் எழுதிக் கொள்ளுங்கள். ஏன் அந்த முடிவுக்கு வந்தீர்கள் என்ற காரணத்தையும் எழுதுங்கள்.

1. தொழில் துவங்க விரும்புகிறீர்கள். சொந்தத் தொழில் துவங்க வேண்டுமென்றால் கையிலிருக்கும் நல்ல வேலையை விட வேண்டும். தொழில் துவங்குவது தான் உங்கள் எதிர்காலத்திற்கு நல்லதென்று தீர்மானித்துவிட்டீர்கள். காரியம் என்று வரும்போது தயங்குகிறீர்கள்.

2. உங்களது பெண் கல்லூரி தலைவி, எதற்கெடுத்தாலும் டிரஸ்டிக்கு ஏற்றாற்போல தாளம் போடுகிறார். இதை மற்ற ஆசிரியர்கள் கண்டித்து எதிர்த்து ஸ்டிரைக் செய்கிறார்கள். ஆனால் நீங்கள் அதில் கலந்து கொள்ள வேண்டாம் என்று ஒதுங்கி நிற்கிறீர்கள்.

3. நீங்கள் ஒரு பத்திரிகை நடத்துகிறீர்கள். அடிக்கடி "நம்மைப்பற்றிக் கட்டுரை வருகிறாற் போலிருக்கட்டும்,' என்று கூறுகிறார் அரசியல்வாதி. உங்களுக்குப் பத்திரிகைத் தர்மம் முக்கியமா அல்லது ஏன் வீண் வம்பு என்று ஏற்றுக்கொண்டு போவீர்களா?

4. உங்கள் கிராமத்தில் பாரதி கிராம முன்னேற்றக் கழகத்தின் காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெறுகிறது. அவர்கள் அழைத்துக் கௌரவிக்கும் பெரிய மனிதர் உங்கள் அபிப்பிராயத்தின் மதிப்புக்கு ஏற்றவரல்ல. நீங்களோ கூட்டத்தில் மைனாரிட்டி. எதிர்ப்புத் தெரிவித்து என்ன பலன் என்று ஓட்டின் போது கை தூக்குவீர்களா?

5. அப்பா, அம்மா, பாட்டி, தாத்தாவுக்குப் பிடித்திருக்கிறது என்று உறவினர் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள ஏற்பாடு செய்கிறார்கள். கல்லூரியில் நீங்கள் கண்டு பழகிய பெண்ணை "இதுதான் உலகம்!" என்று கைகழுவி விடுவீர்களா?

இவை எல்லாவற்றிற்கும் தயக்கத்துடன் 'ஆம்! ஆம்! ஆமாம்!' என்று அழுக்குரல் கொடுத்தீர்களானால் உங்களுக்குத் தன்னம்பிக்கை கொஞ்சம் குறைவு என்று சொல்கிறார்கள் மனோ தத்துவ நிபுணர்கள். 'நீங்கள் பயத்தால் ஆட்டிப் படைக்கப்படுகிறீர்கள்' என்கிறார்கள் "ஆட்டு மந்தைக் கூட்டத்தில் நீங்கள் நல்லதோர் பெயர் எடுப்பீர்கள்" என்று அபிப்பிராயப் படுகிறார்கள்.

"நாடே ஆட்டு மந்தையாக இருக்கும்போது நானும் அப்படி இருந்தால் என்ன குடிமுழுகிப் போயிற்று?" என்று நீங்கள் கேட்கலாம்.

அப்படித்தான் பல பேர் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு நாட்டில் ஒரு சிலர், "அது ஏன்? எதற்கு?" என்று கேள்விகள் எழுப்பி, "என் விதி என் கையில்" என்று உணரும்போது ஒரு நாட்டின் தலைவிதி மாறுகிறது. ஒரு சிலர் போதும்.

நம் நாட்டின் அந்த ஒரு சிலர் இன்னமும் இருக்கிறார்கள் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. அந்த ஒரு சிலரில் நீங்களும் ஒருவர் என்று நான் நம்புகிறேன்.

# விளைவுகள் நல்லவையா, சாத்தியமா!

ஒரு காரியம் செய்யத் துவங்கும்போது பல யோசனைகள் தோன்றுகின்றன. ஒரு காரியம் செய்யத் துவங்கியபின் அந்தப் பல யோசனைகளையும் ஆராய்வது உசிதமல்ல. பல யோசனைகளையும் சீர்தூக்கிப் பார்ப்பது முன்பே செய்திருக்கவேண்டிய விஷயம்.

ஒரு காரியம் செய்யத் துவங்கும்போது பலவித பயங்களும் மனத்தில் எழுகின்றன. இந்த உலகில் பத்திரமான காரியம் ஏதுமில்லை. உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்து நடந்தால்கூட தடுக்கி விழ நேரிடலாம். லாபமோ நஷ்டமோ எவ்வளவு தூரம் சாத்தியம்? இந்த லாபத்தை உத்தேசித்து இத்தகைய சோதனைகளில் என்னை உட்படுத்திக் கொள்வது நல்லதா, தீமையா என்று முனபே நாம் அனுமானிக்க வேண்டும்.

எல்லா மாற்று வழிகளையும் பாரபட்சமற்று உணர்ச்சி வசப்படாமல் ஆராயுங்கள். உங்கள் ஆசை வேறு; காரியம் நடக்குமா என்ற சாத்தியக்கூறு வேறு. 'வெறும் ஆசை மட்டுமே உங்கள் காரியத்தில் நீங்கள் விரும்பும் பலனைக் கொடுத்துவிடாது' என்று கூறுகிறார்கள் மனவியல் பேராசிரியர்கள்.

முடிவெடுக்கும்போது ஏற்படும் • முக்கியமான பிரச்சினை என்னவென்றால் நம்மால் விளைவுகளை முன் கூட்டியே சொல்ல முடிவதில்லை. யாராவது, நம்மிடம் வந்து, 'ஐயா! தேர்தலுக்கு நில்லுங்கள். ஜெயித்துவிடு வீர்கள்' என்றோ, 'ஐயா! தேர்தலுக்கு நிறகாதீர்கள்,

டெபாசிட்டை இழந்துவிடுவீர்கள்!' என்றோ கூறினால் எவ்வளவு நன்றாக இருக்கும்? யாராவது நம்மிடம் 'சுய தொழிலில் இறங்குங்கள். நல்ல தொழில், உங்களுக்கும் நல்ல அனுபவம், சக்கை போடுபோடுவீர்கள்!' என்றோ, அல்லது 'ஏன் ஐயா வீண் வேலை, இருக்கிற வேலையை விட்டுவிட்டுச் சுயமாகத் தொழில் செய்தால் நஷ்டம் வரும்!' என்று முன்கூட்டியே சொன்னால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

ஆகவே, நாம்தான் முடிவெடுக்குமுன் அதன் விளைவுகளைத் தீர ஆராயவேண்டும். இந்தப் பிரச்சினையை எங்கெந்த வழிகளில் அணுகலாம்? இந்த மாற்று யோசனைகள் எந்த என் தேவையைப் பூர்த்தி செய்கின்றன? எனது முக்கியத்தேவை — ஆசை என்ன? இதன்மூலம் அதை அடைவேனா? இந்த யோசனை நடைமுறை உலகிற்கு ஏற்றதா? என்று நாம்தான் தீர ஆராயவேண்டும்.

எனது நண்பர் ஒரு பத்திரமான அரசாங்க வேலையில் இருந்தார். வேலை பத்திரம். சம்பளம் ஏதோ போதுமானது. எனினும் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு அவருக்குத் திருப்தி இல்லை. இருக்கிற நிலைக்கு மேலே கிடைக்கக் கூடிய உயர் பதவி ஒன்றும் பெரிதாகத் தென்படவில்லை. எனது நண்பரின் முழுத் திறமையும்—அறிவு, திறமை, கற்பனை, துணிச்சல், சுதந்திரம் என்ற பலவற்றையும் இருக்கும் வேலையில் உபயோகப்படுத்த முடியவில்லை; அங்கே இடமில்லை.

இவருடன் படித்த பல நண்பர்கள் கணக்கர் வேலையை விட்டுவிட்டுச் சொந்தத் தொழில் துவங்கிப் பெரிய வீடு வாங்கியிருக்கிறார்கள்; கார் வாங்கி இருக்கிறார்கள். பணத்தைத் தாராளமாக—தண்ணீர்போல செலவழிக்கிறார்கள்.

என்ன செய்யலாம்?

இது நண்பரின் பிரச்சினை.

சில நாள் வரை 'விசுவாசம்' என்ற வார்த்தையின் கீழ் அரசாங்க வேலையை அணுகி வந்தார். ஒரு கால கட்டத்திற்குப் பிறகு, 'அவ்வளவுதான் என்விதி. என் தலையெழுத்து அவ்வளவுதான்' என்று கூற ஆரம் பித்தார். கொஞ்ச நாட்களுக்குப் பின் 'எனக்கு வயதாகி விட்டது. யார் வேறு வேலை தருவார்கள்?' என்று வயதின்மீது பழியைப் போட்டார். பின் தான் பிறந்த சாதியின்மீது பழியைப் போட்டார். பின் 'எக்கச்சக்கமான குடும்பப் பாரத்தில் மாட்டிக்கொண் டிருக்கிறேன். பெண் வயதுக்கு வந்து கொண்டிருக் கிருள். பையன் காலேஜுக்குப் போக வேண்டும்' என்று குடும்பப் பொறுப்பின்மீது பழியைச் சுமத்தினுர். எனினும் தினம் தன் நிலையை நொந்து கொண்டார்.

இந்தப் பூஜையைத் தினமும் கேட்டு அலுத்த மனைவி சொன்னுர்: "இதோ பாருங்கள்! கழுத்தில் இருபது பவுன் நகை இருக்கிறது. பணம் புரட்டலாம். துணிச்சலாகச் செய்து பார்க்கலாம். சொந்தத் தொழிலில் ஒரு விறகுக் கடை ஆரம்பிக்கலாம். அல்லது காய்கறி மொத்த வியாபாரம் செய்யலாம்" என்ருர்.

அப்போதுதான் மனிதர் 'தனது உண்மையான வாழ்க்கை லட்சியம் என்ன? அதை அடையத் தன்னிட முள்ள தகுதி திறமை என்னென்ன? தன்னிடமுள்ள கையிருப்பு என்ன? தன்னிடமுள்ள துணிச்சல் என்ன? தியாக மனுேபாவம் எவ்வளவு? உழைக்கும் போக்கு எவ்வளவு? தோற்ருலும் சமாளிக்கக்கூடிய பொருள்

வளம் மாற்று வழிகள் என்னென்ன' என்று சுய சோதனை செய்துகொண்டார்.

சுயசோதனை செய்ததில் பிறர் என்ன சொல்வார்கள், மனைவியும், சுற்றமும், நண்பர்களும் எத்தனை பரிகாசம் செய்வார்கள் என்ற பயமே அவரை ஆட்டிப் படைத்து அவரது முடிவெடுக்கும் திறனை முடக்கி இருப்பதை உணர்ந்தார்.

எந்த முடிவிலும் ஒரு நிச்சயமற்ற தன்மை உண்டு. அதாவது நாம் எடுத்த முடிவின் விளைவுகள் எப்படிப்போகும் என்று நமக்கு முன்கூட்டியே தெரியாது. லாபமும் வரலாம்; நஷ்டமும் வரலாம்.

பத்திரமான வாழ்க்கை வாழ்பவர்களெல்லாம் நஷ்டம் வந்தால் என்னுவது என்ற பயத்தில் இருந்த இடத்திலேயே இருப்பார்கள். முடிவைப் பற்றிச் சிந்திக்கும் போது அதன் விளைவுகள் எவ்வளவு தூரம் நல்லவை என்று நாம் சிந்திக்க வேண்டும். அடுத்து அந்த விளைவுகள் எவ்வளவு தூரம் சாத்தியம் என்று சிந்திக்க வேண்டும்.

சில சமயம் 'ஒரு குருட்டு யோசனை, ஓர் ஆசை, ஒரு யூகம்' என்ற விஷயங்கள் நாம் முடிவு செய்வதில் முக்கிய பங்கேற்கும். இப்படிப்பட்ட ஆதாரங்களின் மீது யோசனை செய்து தீர்மானிப்பது நல்லதல்ல.

பிரச்சினைகளில் இரண்டு வகை உண்டு. சில திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாக நிகழும் பிரச்சினைகள். பஸ்ஸுக்காக காத்திருக்கிறீர்கள். பஸ்ஸில் இடமில்லாமல் போய்விடுகிறது அல்லது பஸ் "பிரேக் டவுன்" ஆகிவிடுகிறது. அல்லது பஸ் ஓட்டுபவர்கள்

வேலை நிறுத்தம் செய்கிறார்கள். அதேபோல நீங்கள் ஒரு பத்திரிகை வைத்து நடத்துகிறீர்கள். அச்சு எந்திரம் 'மக்கார்' செய்கிறது. அல்லது எழுத்தாளரிடமிருந்து கட்டுரை சரியான நேரத்தில் கிடைக்கவில்லை.

இவை எல்லாம் எதிர்பாராத பிரச்னைகள் அல்ல. திரும்பத் திரும்பத் ஒரே மாதிரியாக அனேகமாக நிகழும் பிரச்சினைகள். இந்த நிலையில் நாம் நிரந்தரமாக ஒரு மாற்றுத் திட்டம் தயாரித்து, அதன்படி பிரச்சினைகளை அணுக முடியும்.

மற்றொரு வகைப் பிரச்சினை மனிதர்கள் சம்பந்தப்பட்டது. மனித ஆசை, உணர்ச்சி, உறவு சம்பந்தப்பட்டது.

ஒரு வேலையைத் தேர்ந்தெடுக்கிறீர்கள். உங்கள் எதிர்காலம் எப்படி இருக்கும்? அதேபோல ஒரு பெண்ணையோ ஆணையோ மணந்து கொள்கிறீர்கள். எதிர்காலம் இனிமையாக அமையுமா?

இவை சொந்த பிரச்சினைகள். இங்கேதான் நாம் நம் ஆசைகளையும் உணர்ச்சிகளையும் பின்னுக்கு வைத்துவிட்டு ஆராய வேண்டும். விருப்பு வெறுப்பில்லாமல் ஒரு விஞ்ஞான ரீதியில் விஷயங்களை அணுக வேண்டும். 'எந்த வழி நல்ல வழி? எந்த ஆதாரத்தின்மீது இந்தப் பெண்ணை அல்லது ஆணை மணந்துகொள்வது நல்லது என்று தீர்மானித்தேன்?' என்று பல்வேறு விளைவுகளையும் சாத்தியக் கூறுகளையும் ஆராய வேண்டும்.

ஒவ்வொரு பிரச்சினையும் ஒரு புதிய சூழ்நிலையில் உருவாகி இருக்கும் பிரச்சினைதான். மனிதர் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் பல்வேறு சூழ்நிலையில் ஒவ்வொரு

முறை தோன்றும் போதும் புதிய சூழ்நிலையில்தான் தோன்றுகின்றன.

ஆகவே, இங்கே நமது முன் அனுபவம் அதிகம் பயன்படாது. ஒரு பெண்ணிடம் அடைந்த காதல் தோல்வியைக் கண்டு பெண்ணினத்தின்மீதே வெறுப்புக் கொள்வதோ அல்லது அதற்காகத் துறவு பூணுவதோ நடைமுறைக்கேற்றதல்ல.

முன் அனுபவம் ஒரு உறைகல். ஆனால் ஒவ்வோர் அனுபவமும் ஒரு புதிய அனுபவம்.

பிரச்சினைகள் வரும்போது நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம், விளைவு நல்லதா? நாம் எதிர்பார்க்கும் விளைவு நிகழும் சாத்தியக்கூறு எவ்வளவு என்பதுதான்!

# முடிவின் விளைவுகளைத் தீர ஆராயுங்கள்!

பிரச்சினைகளுக்கு முடிவு காணும்போது எதிர் பார்க்கின்ற விளைவுகள் நிகழலாம். அதே சமயம் எதிர் பாராத விளைவுகளைச் சமாளிக்கவும் நம்மை நாம் தயார்ப் படுத்திக்கொள்ள வேண்டும்.

வாழ்வில் சில சிக்கலான பிரச்சினைகளையும் அதில் நாம் விரும்பும் முடிவுகளையும் கவனிப்போம்.

* குடும்பம், வேலை, பொறுப்பு என்று தொல்லைகள் உங்களை அலைக்கழிக்கிறது. எதற்காக வாழ்கிறோம் என்றே உங்களுக்குச் சந்தேகம் ஏற்படுகிறது. உங்கள் தந்தை, 'மகனே! ஒரு ஆறு மாதம் காசி, ராமேஸ்வரம், திருவண்ணாமலை என்று புண்ணியத் தலங்களைத் தரிசித்து விட்டு வா' என்கிறார். 'வேலை என்னாகும்? குடும்பப் பொறுப்புக்களை யார் சமாளிப் பார்கள்? பணம் எங்கே இருக்கிறது?' என்று எண்ணுகிறீர்கள். ஆனால் கோயில்களைச் சுற்றிப் பார்த்து மன அமைதி பெறத் தீர்மானித்து விட்டீர்கள்.

* "கூட்டுக் குடும்பத்தில் இருக்கிறீர்கள். உங்கள் மனைவி, தினம் இரவில் குமுறுகிறாள், தன் கஷ்டங்களைச் சொல்லி அழுகிறாள். ஒருபக்கம் பெற்றோர், குடும்பம்; மற்றொரு பக்கம் மனைவி, சுதந்தரம். பாகப்பிரிவினை செய்துகொண்டு போகத் தீர்மானிக்கிறீர்கள்.

* அரசியல் கட்சியிலே பெரிய பிரமுகராயிருக்கிறீர்கள். கட்சித் தலைவரின் கொள்கையும் போக்கும் உங்களுக்குப் பிடிக்கவில்லை. கட்சியைவிட்டு விலகத் தீர்மானிக்கிறீர்கள்.

*விரைவில் வேலையிலிருந்து ஓய்வுபெறப் போகிறீர்கள். ஆனால் ஓயவுக்கு முன்னே இரண்டு வருடம் லீவு எடுத்துக்கொண்டு நீங்கள் விரும்பிய நாவலை எழுதத் தீர்மானிக்கிறீர்கள்.

* செய்யும் வேலையில் உங்களுக்கு அலுப்பேற்படுகிறது. மேலே செல்ல உத்தியோக உயர்வுக்கு வழியில்லை. நடுத்தர வயதில் வேலையை விட்டுவிட்டு எம். பி. ஏ. படிக்க முடிவு செய்கிறீர்கள்.

மேற்கண்ட சம்பவங்களில் உங்களைக் கதாநாயகனாகக் கற்பனை செய்துகொண்டு உங்கள் முடிவினால் ஏற்படும் எல்லா விளைவுகளையும் யோசியுங்கள்; இவற்றால் ஏற்படக் கூடிய நாட்பட்ட விளைவுகள் என்ன? அவை, ஐந்தாறு ஆண்டுகளுக்குப் பிறகு எபபடி உங்கள் வாழ்வைப் பாதிக்கும்?

ராமேசுவரம் போய் வந்தபின் என்ன ஆகும்?

கட்சியைவிட்டு விலகிய பின் என்ன செய்வீர்கள்?

உங்களால் அந்த நாவலை நிஜமாக எழுதி முடிக்க முடியுமா?

எம். பி. ஏ. படித்தபின் வேலை கிடைக்குமா?

புண்ணியத் தலங்களை எல்லாம் சுற்றிய பின்னும் மனநிம்மதி பெறவில்லை என்றால் என்னாகும்? வேலையை விட்டுப் படிக்கப் போன இடத்தில்

உங்களால் பரீட்சையில் தேற முடியாமல் போனுல் என்ன ஆகும்? பாகப் பிரிவினையால் நீங்கள் குடும்பத்தினரால் ஒதுக்கப்படுகிறீர்கள் என்ருல் என்ன செய்வீர்கள்?

முடிவுக்குப் பொறுப்பு ஏற்கக் கற்றுக் கொள்ளுங்கள். முடிவைச் செயல்படுத்தும்போது நீங்கள் முன்னே போகிறீர்கள். முடிவெடுப்பதில் 'மசமசா' என்றிருப்பவர்கள் — தள்ளிப் போட்டுக்கொண்டே இருப்பவர்கள். இவர்கள்—சாதாரண தயக்கவாதிகள் மட்டுமல்ல; குழப்பவாதிகள். பிரச்சினை என்று வந்தால் இவர்கள் குழம்புவார்கள். வழக்கத்திற்கு மாறுபட்ட எதுவும் இவர்களால் சமாளிக்க முடியாத ஒன்று.

விஷயம் நெருக்கடியானுல் மட்டுமே முடிவெடுக்க வேண்டுமென்று சிலர் நினைக்கிருர்கள். நெருக்கடியோ அவசரமோ இல்லாதபோது பிரச்சினைகள் பற்றிப் பலர் சிந்திப்பதில்லை. பிரச்சினை அவசரமாக வரும்போது விஷயங்களைத் தட்டிக் கழிப்பதுபோல ஏதோ ஒரு முடிவெடுத்து, அவசரமாக வேறு காரியத்தைக் கவனிக்கிருர்கள்.

ஊரில் கலவரம் என்ருல் 'சரி,போலீசைக் கூப்பிடு; அமைதியை நிலைநிறுத்துவார்கள்' என்று பிரச்சினைகளுக்கு முடிவுகட்ட முடியாது. ஏனெனில் போலீஸ் செல்வதால் உயிருக்கு அபாயம் ஏற்படக்கூடும். நிலைமை முன்னைவிட மோசமாகக் கூடும். எதிர்க்கட்சிகள் விசாரணைக் கமிஷன் வேண்டும் என்று கேட்பதுவரை போகக் கூடும். அல்லது டில்லி அரசும் எதிர்ப்புக் குரல் எழுப்பி நாளை மிரட்டக் கூடும். அவசரமான பிரச்சினைகளுக்கு அவசரமான முடிவுகள்

ஏற்றவை அல்ல; விளைவுகளைத் தீர ஆராய்ந்த அவசர மான முடிவுகள் தேவை.

முடிவு எடுப்பதை ஒரு வாய்ப்பாக நாம் கருத வேண்டும். நமது வலிமையை வளர்க்க, ஆசைகளைப் பூர்த்தி செய்ய, நம் முடிவெடுக்கும் பழக்கம் நல்லறிவாய் நம்மிடம் வளர இதை ஒரு வாய்ப்பாய் நாம் கருத வேண்டும்.

சில ஆண்டுகளுக்கு முன், அமெரிக்காவில் ஹூஸ்டன் மாநகரில் விண்வெளி ஆராய்ச்சி நிலையங்கள் சிலவற்றை மூடினார்கள். இதனால் சுமார் 700 பொறி இயல் நிபுணர்கள் வேலை இழந்தார்கள். சிலர் நிலைமை மாறிவிடும் என்று காத்திருந்தார்கள். சிலர் ஹூஸ்டனில் என்ன வேலை கிடைக்குமோ அதை எல்லாம் ஏற்றுக் கொண்டனர். பலர் மளிகைக் கடை மானேஜர்களாக வேலை பார்த்தனர். வேறு சிலரோ வேறு இடங்களுக்குக் குடி பெயர்ந்தனர். அதில் மிகப் பலர் இதை ஒரு சந்தர்ப்பமாகக் கருதிப் புதிய தொழில் படிப்புகளில் இறங்கினர். சிலசமயங்களில் அதிர்ஷ்டம் —வாயப்பு என்பது துன்பம் என்ற போர்வை போர்த்தி வரும். சரியாகப் பார்க்கும்போது சிக்கல்கள், பிரச்சினைகள், சோதனைகள் எல்லாம் நமக்கு நன்மை செய்ய வரும் வாய்ப்புக்களே; நம் வாழ்க்கையைத் திசை திருப்பி வழி காட்ட வந்த சந்தர்ப்பங்களே!

எந்த முடிவு எடுத்தாலும் அதற்கு ஒரு விலை உண்டு. கஷ்டமில்லாத சுகம் இல்லை. தியாகமில்லாது ஒரு நன்மை வருவதில்லை. முடிவு எடுத்துச் செயல்படும்போது முன்பிருந்த பத்திரம்—பாதுகாப்பு—இருக்காது. ஒரு விஷயத்திற்காக நாம் மற்றதைக் கொடுக்

கிறோம். நாம் பெறும் பொருளோ, விஷயமோ லட்சியமோ இத்தனை தியாகங்களுக்கும் கஷ்டங்களுக்கும் பெறுமானம் உடையதா என்று நாம் நிர்மாணிக்க வேண்டும். மாறுபட்ட முடிவு எடுப்பதன் மூலம் நாம் தனியே நிற்க நேரிடும். முன்னைப்போன்ற வசதிகள் இருக்காது. பழைய நண்பர்கள் 'அற்ற குளத்து அறுநீர்ப் பறவை' போல, நம்மை விட்டுவிட்டுப் போயிருப்பார்கள். அதுதான் விலை. இதை நாம் உணர வேண்டும்.

முடிவு எடுப்பது மனத்திற்கு நல்ல பயிற்சி. அடுத்த முறை பிரச்சினை வரும்போதும் நம் மனம் எதையும் எளிதாகக் கையாளும். காமராஜர் அரசியலிலே எடுத்த முடிவுகளுக்கு அவர் அதற்கு முன் அரசியலில் பெற்ற பயிற்சியே பால பாடமாக அமைந்து உதவியது. ஒரு சிலரே முன் பயிற்சியை—அனுபவத்தை பால பாடமாக உபயோகித்துப் பயன் பெறுகிறார்கள்.

பல தலைவர்கள் தங்கள் குணாதிசயங்களால் திரும்பத் திரும்ப அதே தவறுகளைச் செய்கிறார்கள். அனுபவங்களைப் பள்ளிக்கூடமாகக் கருதினால்தான் நமது பிற்கால வாழ்க்கை சிறப்பாக அமையும். அதே போல சரித்திரத்தைப் பால பாடமாகக் கருதினால்தான், இன்றைய ஆட்சியும் அரசும் சிறப்பாக அமையும். சரித்திர ஞானம் இல்லாத தலைவர்களை நாம் பெற்றோமானால் நாடு புதிய பரீட்சைகளிலும், அரை குறை முடிவுகளிலும் அல்லலுறும். இதன் காரணமாகத்தான் ஜான் கென்னடி போன்ற மகத்தான தலைவர்கள் தங்களுக்கு ஆலோசகர்களாகப் புகழ்பெற்ற, அறிவு மிக்க சரித்திராசிரியர்களை உதவியாளர்களாக

நியமித்துக் கொண்டார்கள். அதைப் போன்ற சரித்திர அறிவு ஜவகர்லால் நேருவுக்கு இருந்தது. சிறையி லிருந்து 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா' (Discovery of India) என்ற ஒரு சரித்திர நூலை எழுதினர்.

சரித்திரத்தை அறியாதவர்கள் தவறுகளை மீண்டும் திரும்பச் செய்வார்கள் என்பது பழமொழி. நாடு போகிற திசையைப் பார்த்தால், சரித்திர ஞானத்தை விடுங்கள்; எந்த ஞானமும் இல்லாதோர் கையில் நாடு சிக்குமோ வருங்காலத்தில் என்ற அச்சம் எழுகிறது.

உங்களுக்கு வயதாகிவிட்டது. உங்கள் இஷ்டப் படி வாழ்க்கையை அமைக்க முடியவில்லையே என்று வருத்தப்படுகிறீர்களா? வருத்தப்படாதீர்கள். ஒரு நாளும் காலம தாமதமாய் விடவில்லை. வயது ஓர் ஒட்டம். உங்கள் ஆர்வமும் துடிப்பும் லட்சியமும்தான் உங்கள் வாழ்வின் எதிர்காலத்தை நிர்ணயிக்க முடியும். உங்கள் வயது அல்ல.

இளவயதிலேயே நான் தொழில்துறையில் கவனம் செலுத்தவில்லை என்றோ, இளவயதிலேயே நான் கவிதை எழுதத் துவங்கவில்லை என்றோ வருத்தப்படா தீர்கள். கடந்த டிசம்பர் மாதம் ஒரு 82 வயதைக் கடந்த அம்மையார் டாக்டருக்குப் படித்து 'டாக்டர்' பட்டம் பெற்றார். விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில், அத்தனை மாணவர்களும், அத்தனை பேராசிரியர்களும் பட்டமளிப்பு விழாவில் அந்த அம்மையாரின் ஆர்வத்தைப் பாராட்டி எழுந்து நின்று கைதட்டி மரியாதை தெரிவித்தார்கள்.

வயது? யாருக்கு வயது அதிகம்? உங்களுக்கா? இல்லை! செய்வது தெரியாது. "இன்றையப் பொழுது

போயிற்று. ஈஸ்வரா, நாளையப் பொழுதைப் போக வை நாராயணா!'' என்று சொல்லிக்கொண்டு வாழ்வை ஒரு சுமையாகக் கருதுகிறார்களே அவர்களுக்குத்தான் வயது ஏறுகிறது. 'அது செய்யப் பயம். இது செய்யப் பயம்' என்று எதற்கும் பயந்துகொண்டு வாழ் நாளை ஓட்டுகிறார்களே அவர்களுக்குத்தான் வயது வேகமாக வளர்கிறது! உங்களுக்கல்ல.

ஒரு ரிடையரான ஜட்ஜ் ஒருவர், வழக்கம்போல பீச் அருகில் காலார நடந்து போனார். அங்கே ஒரு கைக் குழந்தை 'வீல் வீ'லென்று அலறிக் கொண்டிருந்தது. யாரும் அங்கே இல்லை. வீட்டுக்கு எடுத்துவந்து அந்த அனாதைக் குழந்தையை வளர்த்தார். "நான் என் தொழிலில்கூடப் பெறமுடியாத நிறைவை அந்தக் குழந்தை எனக்குத் தந்தது!'' என்றார் அந்த முன்னாள் நீதிபதி. தனக்கு வயதாகிவிட்டதே என்று அவர் கவலைப்படவில்லை. குழந்தையைக் கவனித்துக்கொள்ள தன் மனைவியால் முடியாதே என்று அவர் கவலைப்பட வில்லை. வாழ்வில் எது முக்கியம் என்ற உணர்வு ஒன்று தான் அவரை உந்தித் தள்ளியது. ஆகவே வயதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். தியாகம் நிறைந்த வாழ்க்கைதான் நமது உயர் பண்புகளை வெளிக் கொணர்கின்றன.

# காந்திஜி எடுத்த முடிவு நியாயமானதா?

முடிவெடுக்கும்போது நாம் நிறைய மாற்று வழிகளைக் காண வேண்டும்.

மாற்று யோசனைகள் — பிரச்சினைகளைத் தீர்க்க மாற்று வழியில்—புதிய உத்திகள்—அதிகம் தோன்ற வேண்டும். யாராவது பிரச்னையைத் தீர்க்க மாற்று யோசனை தருவார்களானால், அவர்கள் எங்கிருந்து அதற்கான தகவல்களைப் பெற்றார்கள், பெற்ற தகவல்கள் நம்பக்கூடியவையா என்று பரிசீலித்து உபயோகிக்க வேண்டும்.

சில சமயம் நல்ல யோசனைகளுக்காக நாம் விஷயம் தெரிந்தவர்களை அணுகுவோம். விஞ்ஞான—தொழில் பிரிவுகளில் ஒரு பிரச்னை எழும்போது அதில் உள்ள நிபுணர்களை நாம் அணுக வேண்டும்.

நிபுணர்கள் அவர்கள் துறையில் வல்லவர்கள். நிபுணர்கள் சொல்லிவிட்டார்கள் என்பதற்காக நாம் கேட்கவேண்டும். அதன்படி நடக்க வேண்டும் என்பதல்ல. முடிவை நாம் எடுக்க வேண்டும். ஏனெனில், அது நமது எதிர்காலத்தை, நமது முதலை, நமது பொருளை, நமது கௌரவத்தைப் பாதிக்கக்கூடியது. ஆகவே யார் எந்த யோசனை சொன்னாலும் கேட்டு, முடிவை நாம்தான் எடுக்கவேண்டும்.

எனக்குத் தெரிந்த ஒரு தலைவர் ஒரு சமயம் நிபுணர்களை உபயோகிக்கப் பயந்தார். காரணம், 'அவர்கள்

சொல்லும் வழியில் நாம் நடக்க வேண்டும்' என்று நிர்ப்பந்திப்பார்கள் என்று அவர் எண்ணினார். அப்படி ஒரு நிலை ஏற்பட்டால் பொது மக்கள் மத்தியில் தனது கௌரவம் மாசுபடும் என்று அஞ்சினார்.

நமது ஊரில் நமது நண்பர்களும், பெரியப்பா, மாமா, அத்தை, பாட்டிகளும் ஒரு நல்ல யோசனையைச் சொல்லிவிட்டு நாம் அதன்படி நடக்க வேண்டும் என்று நிர்ப்பந்திப்பதையும், நாம் அவர்கள் சொன்ன படி நடக்காவிட்டால், நம்மைத் தூற்றுவதையும் காணலாம். இது நமது ஊர்ப் பழக்கம்.

ஆனால், நாம் புது மனிதனாக நடந்து கொள்ள வேண்டும். ஆகவே நாம் தெளிவாகக் கூறிவிட வேண்டும். 'ஐயா, பெரியவர்களே! ஆலோசனைக்கு நன்றி! முடிவெடுக்கும் பொறுப்பு என்னுடையது. ஆலோசனை கூறும் பொறுப்பு உங்களுடையது. எனது சுதந்திரத்தில், உரிமையில் தலையிடாதீர்கள்! முடிவெடுக்கும் முறையை நான் கற்றுக்கொள்ள அனுமதியுங்கள். இல்லாவிட்டால் ஒவ்வொரு பிரச்சினையின் போதும் உங்கள் வாயிற்படியில் நின்று கொண்டிருப்பேன். அது எனக்கு நல்லதல்ல' என்று கூறவேண்டும்.

எனது நண்பர் பரஞ்ஜோதி ஒருமுறை ஹாஸ்ய மாகக் கூறினார்: "என் மனைவி என் ஆபீஸ் சம்பந்தமான விஷயங்களில் நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று புத்தி சொல்லி அனுப்பு வாள்.

நான் சொல்வேன்: 'இதோ பார்! ஒன்று நீயும் கால் சட்டை மாட்டிக்கொண்டு என்னோடு ஆபீசுக்கு வந்து

விடு. இல்லாவிட்டால் பிரச்சினை ஆபிசில் தோன்றும் போது என் மேலதிகாரியிடம், 'ஐயா! கொஞ்சம் அவகாசம் கொடுங்கள். இது விஷயத்தில் என் மனைவியின் அபிப்பிராயத்தைத் தெரிந்து சொல்கிறேன் என்று கூறுகிறேன்' என்றேன்.''

மாற்று யோசனைகளைப் பிறர் தரும்போது நாம் இந்த யோசனைகள் எந்த அடிப்படையில் பிறந்தன, இதன் தகவல்கள் சரியானவையா, மாற்று யோசனை சொல்பவர்கள் என்ன சுயலாபம் வேண்டிப் பேசுகிறார்கள், அவர்களது விருப்பு வெறுப்பு இதை எவ்வளவு தூரம் பாதித்திருக்கிறது, அவர்களது உள் நோக்கம் என்ன என்று ஆராய வேண்டும்.

'மாற்று யோசனைகள் உண்மையானவையா, பொருத்தமானவையா, போதுமானவையா' என்று பரிசீலிக்க வேண்டும்.

மளிகைக்கடை செட்டியாரிடம் உண்மையிலேயே நல்ல உளுத்தம்பருப்பு இருக்கலாம். அதில்லாமல் நீங்கள் கேட்கும் துவரம்பருப்பு இல்லாதிருக்கலாம். அப்படி இல்லாமல், உளுத்தம்பருப்பு நிறைய ஸ்டாக் இருந்து விற்றுவிடும் அவசரம் இருக்கலாம்.

அதேபோல டாக்டர் ரங்கசாமி உங்கள் நோயைப் பரிசீலித்தவுடன் அறுவை சிகிச்சைக்கு 'ஆர்டர்' பண்ணலாம். காரணம், அவர் எதையும் 'அறுவைக் கண்' கொண்டு பார்க்கும் ஓர் அறுவை சிகிச்சையாளர் என்பதால்.

உங்கள் முடிவு உங்கள் விதியை நிர்ணயிக்கிறது. ஆகவே அதை எல்லார் கையிலும் கொடுக்காதீர்கள். ஒரு சமயம் வயிற்றில் புண் என்று மருத்துவ

மனைக்குப் போனேன். எல்லா சோதனைகளும் செய்தார்கள்.

“அறுத்துப் பார்க்கப் போகிறோம்!” என்றார்கள்.

“ஏன்?” என்றேன்.

“வயிற்றில் புண் ஏற்பட்டு அது ஆறிப்போன வடு இருக்கிறது. இருந்தாலும் அறுத்துப் பார்த்தால் தான் தெரியும். எல்லாம் சரியாக இருந்தால் திரும்ப மூடிவிடுவோம்!” என்றார் அறுவை சிகிச்சையாளர்.

அறுத்துப் பார்த்துத் தெரிந்துகொள்ள என் வயிற்றை உட்படுத்த எனக்குச் சம்மதமில்லை. ‘நிலைமையில் எனக்கு ஏதும் கஷ்டமில்லை. உங்கள் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள என் வயிறு கிடைத்தது?’ என்று மனத்திற்குள் சொல்லிக்கொண்டு வாசற்படியை நோக்கி நடந்தேன்.

டாக்டர் கூறிய யோசனை தவறு என்றோ, என் முடிவுதான் சரி என்றோ நான் இங்கே கூற முற்படவில்லை. டாக்டரே கூறினாலும் முடிவு செய்யும் ஒரு தன்னுரிமையை நாம் நம்முள் வளர்க்கவேண்டும்.

மோகன்தாஸ் காந்தியின் மனைவி கஸ்தூரிபாய் நோயால் மருத்துவமனையில் கிடக்கிறார். உடல் மெலிந்து, பலகீனமடைந்துவிட்டது. ‘ஆட்டுக்கால் சூப்’ போன்ற மாமிச உணவைக் கொடுத்தால்தான் நல்லது என்று டாக்டர்கள் நினைக்கிறார்கள். நிர்ப்பந்திக்கிறார்கள்.

காந்தி கூறுகிறார்: “நாங்கள் மாமிச உணவு உண்ணாதவர்கள். மாமிச உணவு கொடுத்துத்தான்

அவள் பிழைக்க வேண்டுமென்ருல் அவள் செத்துப் போகட்டும்'' என்கிருர்.

டாக்டர்கள் திகைக்கிருர்கள். அவர்களுக்குக் கோபம் வருகிறது. ''அப்படியானுல், இங்கு அவளுக்கு வைத்தியம் செய்ய முடியாது. வீட்டுக்கு எடுத்துச் செல்லுங்கள்'' என்கிருர்கள். மகாத்மா காந்தி மசிந்தாரா? இல்லே. அன்ணே கஸ்துரிபாயை அந்த நிலேயில் வீட்டுக்கு எடுத்து வந்தார்.

முடிவெடுப்பது என்பது நம் வாழ்க்கையின் பிடியை நம் கைக்குள் வைத்திருக்கும் முயற்சியாகும். அதை நாம் என்றும் பறிகொடுத்துவிட முடியாது.

அவை நம் லட்சியங்களேப் பிரதிபலிக்கின்றன.

நம் கௌரவத்தைப் பிரதிபலிக்கின்றன.

நம் துணிச்சலேப் பிரதிபலிக்கின்றன.

# முடிவெடுப்பதில் கற்பனையும் துணிச்சலும்

சில சமயம் சில தகவல்கள் முன்னதாக நமக்குக் கிடைக்கும். அதை வைத்து அவசரமாக முடிவெடுப்பார்கள் சிலர். பின்னுல் அதற்கு மாருன தகவல்கள் வரும். அப்போது நம் முடிவை மாற்றிக் கொள்ளும் வாய்ப்பு இல்லாமல் போகலாம்.

ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். தமிழ் நாட்டில் தேர்தல் நடைபெறுகிறது. 1971 என்று நினைக்கிறேன். போட்டி தி.மு.க.வுக்கும் காங்கிரசுக்கும்— கலைஞருக்கும் காமாராஜருக்கும்.

ஆட்சியிலிருந்த தி.மு.க.வை மக்கள் ஆதரிக்கப் போவதில்லை என்று பெருவாரியாகப் பேசப்படுகிறது; எழுதப்படுகிறது. காவல் துறையில் சில தகவல் சேகரிக்கும் நிலையங்கள் நாடு பூராவும் இருக்கின்றன. அங்கிருந்து வரும் தகவல்களும் — அபிப்பிராயங்களும்—கலைஞர் தி.மு.க. ஆட்சி தோற்றுவிடும் என்று தெரிவிப்பதாக இருந்தன.

இரு முக்கியமான தலைமை அதிகாரிகளுக்கு இந்தத் தகவல் தெரிகிறது. இரண்டு பேரும் காமராஜருக்குப் பெரிய மாலை வாங்கிக்கொண்டு பாராட்டப் போகிருர்கள். தேர்தல் முடியும் நாளன்று பார்த்தால் தி.மு.க. மகத்தான வெற்றியுடன் ஜெயித்திருப்பது தெரியவருகிறது.

இவர்கள் அரசியலுக்கு அப்பாற்பட்ட அரசாங்க அதிகாரிகள். அவர்கள் அவசரப்பட்டு அனுமானித்து முடிவெடுத்தார்கள். சரியான தகவல் தெரிந்ததும் அவர்களால் அதை மாற்றிக் கொள்ள முடியாத நிலை. அதனால் இருவருமே 'நம்பிக்கை வைக்க முடியாத அதிகாரிகள்' என்று வேலை மாற்றம் பெற்றார்கள்; அதாவது கீழே தள்ளப்பட்டார்கள். போதுமான தகவல்கள் வரும்வரை நாம் காத்திருக்க வேண்டும்.

கல்லூரியில் சேர விரும்பும் ஒரு பெண், முதலில் எல்லா கல்லூரிகளுக்கும் விண்ணப்பித்துவிட முடியாது. முதலில் வீட்டில் என்ன சொல்கிறார்கள், மேற்படிப்புப் படிக்க பணம் இருக்கிறதா என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

பணம் மட்டுமே தடை என்று தெரிந்தால், முதலில் எந்தக் கல்லூரியிலாவது 'ஸ்காலர்ஷிப்' கிடைக்குமா என்று பார்க்க வேண்டும். முடிவெடுக்கும்போது விஷயங்களின் முக்கியத்துவத்திற்கேற்ப நாம் வரிசைக்கிரமமாகப் போக வேண்டும்.

அடுத்து, எல்லா மாற்று யோசனைகளையும் வழிகளையும் அலசி ஆராய வேண்டும். எல்லா மாற்று வழிகளும் கிடைத்துவிட்டன என்று எண்ணி சிந்தனைக் கதவைச் சாத்துவதற்குப் பதிலாக, இன்னும் இதைவிட நல்ல வழி ஏதேனும் இருக்கலாம் என்ற எண்ணத்தை அடிமனத்தில் ஓடவிட வேண்டும்.

நாம் எடுக்கும் முடிவு நாம் விரும்பும் விளைவைக் கொடுக்குமா என்று தீவிரமாகச் சிந்திக்க வேண்டும். எனது நண்பர் ஒருவர் தனது முதல் 'டேட்'டின்போது அந்தப் பெண்ணுக்காக விலை உயர்ந்த செண்ட் பாட்டிலை வாங்கிச் சென்றார். நகரத்தின் மிகப் பெரிய

உணவு விடுதிக்கு அவளை அழைத்துச் சென்றார். பின்னால் வருத்தம் தோய்ந்த முகத்துடன் கூறினார்: 'பெரிய கட்டுப்பெட்டி அவள். 'டிசிப்ளின்' அதிகம் நிறைந்த கத்தோலிக்கக் குடும்பம் அவளுடையது!' என்று.

நாம் விரும்பும் விளைவை, நாம் எடுக்கும் முடிவு தருமா என்பதுடன் அந்த விளைவு நல்லதுதானா என்றும் நாம் பரிசீலிக்க வேண்டும்.

உணர்ச்சி வசப்பட்டு உடலுறவு கொள்ள அவசரத்தில் தீர்மானிக்கும் இருவர் பின்னால் அதன் விளைவு நல்லதுதானா என்று யோசிக்கக் காலம் இருப்பதில்லை.

நாம் விரும்பும் முடிவு நடக்கக் கூடியதுதானா என்றும் நாம் யோசிக்க வேண்டும். மாதக் கடைசியில் உப்பு—மிளகாய்—புளி வாங்க பத்து ரூபாய் பணம் வைத்திருக்கிறீர்கள். தெருவில் லாட்டரிச் சீட்டு விற்கிறார்கள். இலட்ச ரூபாய் வரும் என்று லாட்டரிச் சீட்டு வாங்க முடியுமா? அது நடக்கக் கூடியதுதானா என்று நாம் யோசிக்க வேண்டும். உபரியாகப் பணம் இருந்தால் அதைக் குறைந்த அளவில் லாட்டரிச்சீட்டில் செலவிடலாமே தவிர அடிப்படைத் தேவைகளைப் புறக்கணித்து லாட்டரிச் சீட்டில் பணத்தை செலவிடக் கூடாது.

நமது ஊரில் பல இளைஞர்கள் சினிமா நடிகைகளுக்குக் காதல் கடிதம் எழுதிக்கொண்டும், ஏங்கிக் கொண்டும், நடிகை வசிக்கும் தெருவில் நடிகையைப் பார்க்க உலவிக் கொண்டும் இருக்கிறார்கள். நடிகை திரும்ப காதலிப்பது நடக்கக் கூடியதுதானா என்று இளைஞர்கள் யோசிக்க வேண்டும். எந்த விதத்தில் இந்த நடிகை உங்கள் அத்தை மகளை—மாமன் மகளை விட அன்பில் சிறந்தவள் என்று சிந்திக்க வேண்டும்.

நடக்க முடியாதவைகளைப்பற்றி முடிவெடுப்பவர்கள் இன்றோ நாளையோ பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போகத் தங்களைத் தயார் செய்துகொள்கிறார்கள்.

அத்துடன் என்ன வேண்டும் என்பதைப்பற்றிய தெளிவு நமக்கு வேண்டும்.

சென்னையில் அண்ணாமலை என்பவர் மருத்துவக் கல்லூரிக்கு விண்ணப்பம் செய்தார். இடம் கிடைக்கவில்லை. மாற்று வழி என்ன? வாரங்கல்லிலுள்ள மருத்துவக் கல்லூரிக்கோ மணிப்பூரிலுள்ள மருத்துவக் கல்லூரிக்கோ விண்ணப்பிக்கலாம் இல்லையா? வேறு என்ன செய்ய முடியும்? வேறு என்ன மாற்று வழி?

கவனியுங்கள், மாற்று வழிகள் எப்படிப் பிறக்கின்றன என்று. அண்ணாமலையும் அவர் தந்தையும் மருத்துவக்கல்லூரித் தலைவரைப் போய்ப் பார்த்தார்கள். கல்லூரித் தலைவர் அனுதாபம் தெரிவித்தார். சில அதிகாரிகள் விரட்டினார்கள். அண்ணாமலையை விடக் குறைந்த மார்க் பெற்றவர்களுக்கு 'அட்மிஷன்' கொடுக்கப்பட்டிருந்தது. ஆகவே அண்ணாமலை நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தார்.

நீதிமன்றம் அண்ணாமலையை உடனடியாகச் சேர்த்துக் கொள்ளுமாறு உத்தரவிட்டது. எப்படி மாற்று வழிகள் பிறக்கின்றன என்று கவனியுங்கள். சுகாதார அமைச்சரும், முதல்வரும், "நீதிமன்றத்திற்கா போனாய்? உன்னை ஒவ்வோர் ஆண்டிலும் பெயிலாக்கி விடுகிறோம்" என்று நாடறியத் தெரிவித்தார்கள் — அப்படிப்பட்ட நல்லவர்கள் நம் நாட்டில்! பதவியின் பயமுறுத்தல்கள், அந்தப் பையனை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை.

லட்சியத் தெளிவும் துணிச்சலும், கொள்கை பிடிப்பும், முடிவெடுப்பதற்கு மிக மிக முக்கியமான ஊன்றுகோல்கள்.

முடிவெடுக்கும்போது, மாற்று யோசனைகளைப் பிறர் தெரிவிக்கும்போது நமக்கு திறந்த மனம் வேண்டும். யார் சொல்கிறார்கள் என்பதைப் பற்றிச் சிந்திக்காமல், நமது விருப்பு வெறுப்புகளாலும், பயங்களாலும் நடத்தப்படாத திறந்த மனம் நமக்கு வேண்டும்.

பத்திரிகையில் வரும் தகவல்கள் எல்லாம் உண்மை, 'நமது தலைவர் அரிச்சந்திரனின் மறுபிறவி' என்றெல்லாம் நாம் நினைத்தோமானால் அது நமது பலவீனம். பல சமயம் பொதுமக்களது அபிப்பிராயங்களை உருவாக்கும் பொருட்டுத் திட்டமிட்டு பத்திரிகைகளில் பல காரியங்கள் செய்வார்கள்.

சில கட்சிகளால் நடத்தப்படும் பத்திரிகைகளை விட்டு விடுங்கள். சில பத்திரிகைகள், நடுநிலைப் பத்திரிகைகள் என்ற போர்வையில், தனக்குப் பிடித்த தலைவரது அற்புத குணங்களைப் பற்றி சம்பவம் சம்பவமாக, விட்டுவிட்டுப் பிரசுரித்துக் கொண்டிக்கும். மறைமுகமாகச் செய்யப்படும் இத்தகைய தந்திரங்கள் மூலம் பொதுமக்கள் ஏமாற்றப்படுகிறார்கள்.

"உங்கள் கட்டுரையைப் படித்தேன். இப்போது தான் உண்மை தெரிந்தது" என்று பல வாசகர்கள் கடிதங்களைப் பத்திரிகையில் படித்திருப்பீர்கள். அச்சில் வந்திருக்கிறது என்பதனால் நம்மில் பலர்

அதை உண்மை என்று நம்புகிறோம். இத்தகைய வாசகர் கடிதங்களைப் படிக்கும்போது 'கடைசியாகக் கூறப்படும் அபிப்பிராயமே என் அபிப்ராயம்' என்ற பொன்மொழி நம் நினைவுக்கு வருகிறது.

பத்திரிகைகள் திட்டமிட்டே பொதுமக்களைத் திசை திருப்பலாம். போதுமான தகவல்கள் இல்லாமல் அவர்கள் தங்கள் கருத்துக்களை எழுதலாம்.

எது எப்படி இருந்தாலும் நாம் 'அப்பன் வெட்டிய கிணறு' என்று சொல்லிக் கொண்டு உப்புத் தண்ணீரைக் குடிக்க முடியாது. பாரதியாரின் வார்த்தையில் சொல்வதானால் நாம் அப்படிப்பட்ட மூடர்களாய் இருக்கக் கூடாது.

# முடிவெடுக்கும் திறன்
# சில படிப்பினைகள்...

'நான் அனுபவசாலி. நான் சொல்வதைக் கேள்!' என்று கூறி நம் முடிவைப் பலர் திருப்ப முயல்கிறார்கள். அனுபவம் என்பது என்ன? வெகு சில பொது அனுபவங்களே எல்லாருக்கும் பொதுவாக இருக்கிறது. இவற்றைச் 'சரித்திரம் காட்டும் பாடம்' என்கிறோம். மற்ற பெரும்பாலான அனுபவங்கள் தனி மனிதனின் சொந்த அனுபவங்கள். ஒரு விஷயத்தை ஒரு மனிதன் எப்படி ஏற்றுக் கொள்கிறான் என்பதைப் பொறுத்து அனுபவங்கள் பல்வேறுவிதமாய் அமையலாம். அந்த நாளைய அனுபவம், இந்தக் காலத்திற்கு ஏற்றதாய் இல்லாமலிருக்கலாம். 'அனுபவம் பேசுகிறது' என்று கூறி யாரும் உங்களை மிரட்ட, அதிகாரம் செய்ய அனுமதிக்காதீர்கள். மார்க் டுவெயின் என்ற பிரபல அமெரிக்க எழுத்தாளர் எழுதுகிறார்: "பூனை பாடம் படித்துக் கொண்டது உண்மைதான். ஆனால் என்ன ஆயிற்று. பூனை இப்போதெல்லாம் சூடான அடுப்புக் கல்லின்மீது உட்காருவதில்லை. அத்துடன் சூடில்லாத அடுப்புக் கல்லின் மீதும் உட்காருவதில்லையே" என்று ஒரு அனுபவம் தந்த பாடம், நமது அறிவுப்பாதையையே அடைத்துவிடக் கூடும். அனுபவம் என்ற சமாதானத்தில்—பயத்தில்——புதியவற்றைப் பரிசீலிக்க நாம் தயக்கம் காட்டக்கூடாது. புதியன காணும் நம் மனோபாவத்தை அனுபவம் முடக்கி விடக்கூடாது.

விஷயம் தெரிந்த மனிதர்கள் சொல்கிறார்கள் என்பதற்காகவும் நாம் நம் முடிவு செய்யும் பொறுப்பை அவர்களிடம் விட்டுவிட முடியாது. அவர்கள் கூறுவது உண்மைதானா, ஏற்றதுதானா என்று நாம் பரிசீலிக்க வேண்டும்.

சில சமயம் முடிவெடுப்பதற்குத் தேவையான எல்லாத் தகவல்களும் கிடைக்காது. அதற்காக நாம் காத்திருக்க முடியாது. சிலர் விஷயங்களுக்காகக் காத்திருந்து காத்திருந்து, வாழ்நாளையே கழிக்கின்றனர். இப்படிக் காரியங்களை ஒத்திப்போடுபவர்கள் ஒரு தொழில் துறையின் தலைமைப் பதவியில் இருந்தால் தொழில் நஷ்டமடையும். ஒத்திப்போடுபவர்கள் நாட்டின் தலைமை ஏற்று இருந்தால் நாடு தேங்கி திசை தெரியாது நிற்கும். நின்ற இடத்திலேயே நிற்பதற்கும் மனித முயற்சி வேண்டும். அந்த முயற்சி இல்லாதபோது நாடு பின்னோக்கிப்போகும். பொருள் உற்பத்தி குறையும்; விலைவாசி ஏறும்; வேலை இல்லாத் திண்டாட்டம் மிகும்.

பிரச்சினைகளுக்கு முடிவு காண்பதில் நாம் உணர்ச்சி வசப்பட்டு ஏதும் செய்யக்கூடாது. மேனாடுகளில் நடை பெறும் திருமணங்கள் விவாகரத்தில் முடிய பெரும் காரணம் அவர்கள் முடிவு உணர்ச்சி வசப்பட்ட நிலையில் எடுக்கப்படுவதுதான் என்கிறார்கள். ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து பழகும்போது ஆரம்ப காலங்களில் உடலுறவுத் தூண்டுதலும் பருவ வேகமும் மனிதனின் அறிவை மறைத்துவிடும் வலு உடையவை.

"கல்யாணம் பண்ணிக் கொள்வதாகச் சொன்னார்; நம்பினேன்!" என்று துவங்கும் கண்ணீர்க் கடிதங்கள் ஏராளமாக வருகின்றன.

அரசியல் தலைவர்களை தந்தை என்றும், அண்ணன் என்றும்; பொதுமக்களை தம்பி என்றும் கூறிவரும் ஒரு சமுதாயம் எப்படி அறிவைப் பின் வைத்து உணர்ச்சியை முன் வைத்து நடக்கும் என்பதைக் கவனியுங்கள். இந்த பாச உணர்வின் காரணமாக—இப்படிப் பாச உணர்வை முன்னிலைப் படுத்துவதன் காரணமாக, தலைவர்களும் பின் பற்றுபவர்களும் தங்கள் நிதான நிலையை வெகு எளிதில் இழக்கிறார்கள். இது நாட்டு வளர்ச்சிக்கு நல்ல தல்ல. அண்ணனுக்காகத் தம்பிகள் தீக்குளிக்கும் ஒரு பரிதாப நிலைக்கு உடன் பிறப்புகளை உள்ளாக்குவது மனித தர்மமல்ல. இப்படிப் பாச உணர்வில் நின்று செய்யப்படும் பொதுக் காரியங்கள் நிலைக்காதவை.

விஷயங்களை நாம் மூன்றும் மனிதனாக நின்று விருப்பு வெறுப்பற்றுக் கவனிக்க, பரிசீலிக்க, தீர்மானிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். 'என் பாட்டிக்குப் பிடிக்கும் என்பதற்காக இந்த பெண்ணை மணந்துகொண்டேன்' என்பதோ 'காதலித்த பெண்ணைக் கைவிட்டேன்' என்பதோ நம் சொந்த வாழ்க்கையைப் பறிகொடுக்கும் முட்டாள்தனமாகும்.

ஊரில் எல்லோரும் ஒன்றுகூடி ஒரு காரியம் செய் கிறார்கள் என்பதற்காக, நாம் கூட்டத்தோடு கோவிந்தா, போடக்கூடாது. பயம் காரணமாகவோ, கொள்கை உறுதி இல்லாமலோ நீங்கள் கூட்டத்தோடு சேர்ந்து கோஷம் போடுவீர்களானால் உங்களிடம் தனித்தன்மை இல்லை என்று அர்த்தம். மற்றவரிலிருந்து பிரித்துக்காட்டும் தனித்தன்மை என்று ஏதும் உங்களிடம் இல்லை என்பது உண்மை யாகும்.

ஆகவே,

ஆட்டுமந்தையாகதீர்கள்.

காக்காய்க் கூட்டம் ஆகாதீர்கள்.

'ராஜாவின் ஆடைதான் எவ்வளவு அழகு!' என்று நிர்வாண மகாராஜாவைப் பாராட்டிய காக்காய்க் கும்பலின் கலையை நீங்கள் படித்ததில்லையா?

சில சமயம் நாட்டுமக்களிடையே சில அபிப் பிராயம் (Mass Hysteria) வெறிபோல் பரவும்.

சில சமயம் நரிக்குறவர்களுக்கு எதிராகவும், ஹரி ஜனங்களுக்கு எதிராகவும், கள்ளர்-மறவர்களுக்கு எதிராகவும், சில சமயம் ஒரு குறிப்பிட்ட இனத்திற்கு எதிராகவும், மதத்திற்கு எதிராகவும், நம் நாட்டில் வெறி எழுகிறது. ஈரானில் எழுந்ததே புரட்சி. அது அத்தகைய மதவெறியால் விளைந்த ஒன்று. அத்தகைய சமயங்களிலெல்லாம் நாம் சுயமாகச் சிந்திக்கும் திறனை இழந்துவிடக் கூடாது.

காவித் துணி கட்டியிருப்பவர்களெல்லாம் அயோக் கியர்களல்ல, கோயில்களெல்லாம் கொடியவர்களின் கூடாரங்களல்ல; அரசியல்வாதிகளெல்லாம் அறிஞர் களோ, சத்புத்திரர்களோ அல்ல. கூட்டச் சிந்தனைக் குப் பலியாகாதீர்கள்.

நாம் எதிர்பார்க்கும் விளைவு எவ்வளவு தூரம் சாத்தியம் என்பதையும் எண்ணிப் பார்த்து நாம் முடி வெடுக்க வேண்டும். ஈரான் புரட்சியில், 'எதிர்த்துப் பேசுகிறேன்; தனித்து நிற்கிறேன்!' என்றால் தலை போயிருககும். எதிர்த்துச் சொல்ல வாயிருக்காது. நாம்

நம் முடிவுகளின் விளைவுகளை முன்கூட்டியே சிந்திக்க வேண்டும்.

அரசியலில் இன்று அடாவடித்தனம் செய்ப வர்கள் யாருமே தப்பிக்க முடியாது. நாளை அதன் விளைவுகள் என்னுகும் என்று லஞ்சம் வாங்குமுன் ஒவ்வோர் அதிகாரியும் யோசித்துப் பார்த்தால் அவர்கள் நல்ல முடிவுகளை எடுப்பார்கள்.

எந்த முடிவு-எந்த விளைவு—எதிர்காலத்திற்கு நல்லது என்று நாம் சிந்திக்க வேண்டும். பல முடிவுகள் இன்று லாபம் தரக்கூடும். நிரந்தரமாக அவை தீமையில் முடிபவையாக இருக்கும் எனது நண்பர் ஒருவர் வீட்டில் "பணம் இல்லை. பையனை பாலிடெக்னிக்கோடு நிறுத்திவிடுவோம்" என்று முடி வெடுத்தார்கள. மற்ெறுருவர் வீட்டில், "பணம் இல்லை தான். பல்லைக் கடித்துக்கொண்டு கடன் வாங்கி யாவது பையனை இன்ஜினியர் படிப்புக்குப் படிக்க வைத்துவிட வேண்டும்" என்று முடிவு செய்தார்கள்.

பொறி இயல் படித்த மாணவனுல் அந்தக் குடும்பமுமே அந்தப் பையனின் எதிர்காலமும் மலர்ந்தது.

அதேபோல நாட்டுத் தலைவர்களிடையே நேருவுக்கு அப்படி ஓர் தீர்க்க தரிசனம் இருந்தது. ஆனால் தீர்க்க தரிசனமற்ற தலைவர்களும் நம்மிடையே உலவி வருகிருர்கள். அவர்கள் அன்ருடங்காய்ச்சிகள்.

# சாத்தியமில்லாததை சாத்தியமாக்க முடியுமா?

எந்தப் பிரச்சினைக்கு முடிவெடுத்தாலும் அதன் விளைவு நல்லதாயிருக்குமா, இருக்காதா என்ற சந்தேகம் நம்முள் இருக்கத்தான் செய்யும். முடிவுகளின் விளைவுகளை முன்கூட்டியே நம்மால் கண்டுபிடிக்க முடிவதில்லை. ஆகவே ஒருவிதமான பயம் நம்மிடம் இருக்கிறது.

தர்க்க ரீதியில், விருப்பு வெறுப்பின்றி விளைவுகளை நாம் ஆராய வேண்டும். விளைவு நாம் விரும்பாததாக இருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளும் ஒரு பக்குவத்தை நாம் நம் மனத்தில் வளர்க்க வேண்டும். மாருக விளையக்கூடிய தீமைகளை இருக்கும் நிலைமையைவிட பெரிதுபடுத்தி ஓலமிடுவது நமக்குக் கெட்ட பலனைக் கொண்டுவரும்.

தம் உழைப்பை நல்கியும் சரியான ஊதியம் பெற முடியாத மனிதன் சுயமுயற்சியில நம்பிக்கை இழந்து லாட்டரிச் சீட்டு போன்ற வழிகளில் பணம் பெறுவதைப்பற்றி கனவு காண்கிருன். லாட்டரிச் சீட்டில் பரிசு பெறுவது எவ்வளவு தொகை என்பது நமக்கு முன் கூட்டியே தெரியும். பரிசு வரா விட்டாலும் நாம் அடையக்கூடிய நஷ்டம்—சீட்டின் விலை—என்ன என்பது நமக்குத்தெரியும்.

அந்த நேரங்களில் இது எவ்வளவு சாத்தியம் என்று நாம் சிந்திக்க வேண்டும். நீங்கள் எதிர்

பார்க்கும் விளைவு ஆதாரத்தின் மீது எழுதப்பட்டதா, ஆசையின் மீது எழுதப்பட்டதா என்று சிந்திக்க வேண்டும். குருட்டு யோசனையின் மீது—யூகத்தின் மீது—ஓர் உணர்வின் மீது எழுதப்பட்டதா என்று ஆராய வேண்டும்.

சில சமயம் 'இது இப்படித்தான்' என்ற உணர்வு நம்மையும் மீறி வரும்.

அத்தகைய உணர்வுகளைப் பாகுபடுத்திப் புரிந்து கொள்ளக்கூடிய தன்மையை வளர்த்துக் கொண்டால் பலசமயம் நாம் சரியான முடிவெடுக்க முடியும். இத்தகைய உணர்வுகள் நமது ஆழ் மனத்தால் அளிக்கப் படுபவை. எது ஆழ்மனம் தரும் உணர்வு, எது நமது ஆசையால் நாமே 'உணர்வு' என்று நினைத்துக் கொண்டோம் என்ற வித்தியாசம் நமக்குப் புரிவதில்லை.

'90 சதம் ஜெயித்து விடுவார்' என்று ஒருவருக்கு இருக்கும் தேர்தல் வெற்றி வாய்ப்புக்களை பற்றிப் பேசுகிறோம். விளைவு தெரியாத ஒன்று. இந்த சினிமாவுக்கு 42 சதம்தான் மதிப்பெண் என்று விகடன் விமரிசன குழு திரைப்பட விமரிசனம் செய்கிறது. விளைவு தெரிந்த ஒன்று. இங்கு சாத்தியக் கூறுகளைப் பற்றிய பேச்சு இல்லை. இது ஒரு மதிப்பீடு.

ஒரு காரியம நடக்கக்கூடிய சாத்தியக் கூறுகள் அதிகமிருக்கும்போது நிச்சயம் அதை மேற்கொள்ள லாம். சாத்தியக்கூறு அதிகமில்லாத நிலையில் அதன் விளைவுகளை நம்பிச் செயல்பட முடியாது.

தூத்துக்குடியிலிருந்து ஒரு கல்லூரி மாணவர் கடிதம் எழுதியிருக்கிறார். 'எனது லட்சியம் நாட்டுத் தலைவனாய் வரவேண்டும்' என்பதுதான் என்று. அவரோ இளைஞர்; கல்லூரி மாணவர்! வளர

வேண்டியது தன்னைத் தயார்படுத்திக்கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது. அவருக்கு என்ன சொல்வீர்கள்?

'தம்பீ! ஒழுங்காகப் பாடத்தைப் படி. பரீட்சையில் தேர்வதைப் பார். நல்ல வேலை பெற முயல்' என்று எழுதுவீர்களா?

'தம்பீ! நீ தலைவனாக வரும் சாத்தியக்கூறுகள் குறைவு' என்று கூறுவீர்களா?

ஒரு சாதாரண மனிதன், அல்லது கட்சித் தொண்டன் நாட்டுத் தலைவனாய் உடனடியாக வரும் வாய்ப்புக் குறைவு. நாடறிந்த ஒரு மாற்றுக் கட்சித் தலைவர், அல்லது ஆட்சியிலிருக்கும் ஒரு அமைச்சர், நாட்டுத் தலைமைப் பதவியைப் பிடிக்கும் வாய்ப்பு அதிகம். யார் எந்தெந்தத் துறையில் ஊடாடிக் கொண்டிருக்கிறார்களோ அவர்களே அந்தத் துறையில் பிரகாசிக்கிறார்கள்.

இன்றைய திரைப்பட டைரக்டர்கள் முன்பு நாடக கதாசிரியர்களாகவோ, எழுத்தாளர்களாகவோ இருந்தார்கள். அரசியல் தலைவர்கள் தொண்டனாக வாழ்க்கையைத் துவங்கினார்கள். காப்பிக்கடை—ஹோட்டல் முதலாளிகள்—டபரா தட்டுக் கழுவும் வேலையிலிருந்து தான் முன்னேறி வந்திருக்கிறார்கள். இப்படி அதே தொழிலில் ஊடாடுவதன் மூலம் நாம் நம் வாய்ப்புக்களை அதிகப்படுத்திக் கொள்கிறோம்.

சாத்தியக்கூறுகளைப் பற்றி ஆராயாது எடுக்கும் முடிவு நாம் எதிர்பார்க்கும் விளைவுகளைத் தராமல் போகலாம். இந்த வாதத்தின் மறுபக்கத்தைக் காண்போம்.

'சாத்தியமா இல்லையா?' என்று தர்க்க ரீதியாகத் தீர்மானித்தபின் கண்ணகி நீதி கேட்கப் பாண்டியன்

சபைக்குச் செல்லவில்லை. சாத்தியமா, இல்லையா என்று தீர்மானித்து மகாத்மா காந்தி 'சுதந்திரம் நமது பிறப்புரிமை' என்று மிதவாதிகளிடையே தீர்மானத்தைப் போடவில்லை.

பிரிட்டனை போரில் வென்றுவிடலாம் என்று எண்ணி வாஷிங்டனும் மற்ற அறிஞர்களும் அமெரிக்கச் சுதந்திரப் பிரகடனத்தைச் செய்யவில்லை. 'பாகிஸ்தான் சாத்தியமா இல்லையா' என்ற விவாதத்தில் ஜின்னு ஈடுபட்டிருக்கவில்லை. மனிதன் பறக்க முடியுமா, முடியாதா என்ற சாத்தியக் கூறுகளைப் பற்றி ரைட் சகோதரர்கள் தீர்மானிக்கவில்லை.

தர்க்கவாத அறிவு, சாத்தியக்கூறுகளைப் பற்றி எண்ணுகிறது. லட்சியத்தைப் பின்பற்றும் ஆழமும் வேகமும் நடக்க முடியாதவைகளையும் நடக்குமாறு செய்துவிடும். கால் முடமானவன் ஓட்டப் பந்தயத்தில் வென்றிருக்கிருன். டாக்டரால் கைவிடப்பட்டவர்கள் ஓரல ராபர்ட்ஸ் போல—இன்று புகழ்பெற்ற மதப் பிரசாரகர்களாக உலவி வருகிருர்கள்.

இந்த வித்தியாசத்தை நாம் புரிந்துகொள்ள வேண்டும். எனது நண்பரிடம் ஒரு புதிய லட்சியத்தை—நாட்டுக்குத் தேவையான ஒரு நல்ல காரியத்தைப் பற்றிப் பேசினுல் 'அது எப்படி முடியும்?' என்று கேட்பார். அடுத்து 'உங்களுக்கு அசட்டுத் தைரியம்' என்று முத்திரையையும் என்மீது குத்துவார்.

எப்படி தர்க்கவாத நியாயங்கள் என் நண்பரின் சிந்தனையை முடமாக்கிவிட்டிருக்கிறது என்று நான் யோசிப்பதுண்டு. நடைமுறை உலகை ஒட்டியே சிந்திக்கும் உள்ளமும், தீர்க்க தரிசனமின்மையும். கொள்கையிலே வலிவின்மையும் என் நண்பரின்

சாணக்கிய சாமர்த்தியங்களை எப்படி சின்னுபின்ன மாக்கிப் பயமுறுத்தி வைத்திருக்கிறது என்று நான் வியப்பதுண்டு.

எது சாத்தியம் என்று பார்க்க வேண்டிய இடங்கள் சில உண்டு. சாத்தியமில்லாததையும் சாத்தியமாக்குவேன் என்ற உடும்புப் பிடியுடன் செயலாற்றவேண்டிய தருணங்களும் உண்டு. தர்க்கவாத அறிவு அன்ருட வாழ்க்கைக்கு வழிகாட்டும் அறிவு. உங்கள் உள்ளத்திலே எழும் உறுதியும், தீர்மானமும், லட்சியமும், கற்பனையும், துணிச்சலும் இருக்கிறதே அது நடக்கக் கூடாததையும் நடத்திக் காட்டும் வலுவுடையது: அது மனத்தின் ஆற்றல். அது ஆக்க சக்தி பிறக்குமிடம். பிரபஞ்ச அறிவுடன் நமது ஆக்க சக்தி இணைந்து காரியங்களைச் செயலாற்றும் அற்புதம் அங்கே நிகழ்கிறது.

பகுத்தறிவு வாதிகள்—தர்க்கவாதிகள்—இதை அறிய மாட்டார்கள். நம்மை நாமே புரிந்து கொள்வது தான் வாழ்க்கை என்கிருர்கள் அறிஞர்கள்.

நம்மை நாமே புரிந்து கொள்வது என்ருல் என்ன?

நமது மனத்தின் ஆற்றலை நாம் உணரும்போது நம்மிடம் இருக்கும் அபார சக்தி நமக்குப் புலனுகிறது. அதை உபயோகிக்கும் முறைகளைக் கற்றுக்கொள்ளும் போது நாம் வாழ்வின் பயன்களைப் பெறுகிருேம். அங்கே நல்லெண்ணத்தை விதைத்து மொத்த சமுதா யத்திற்காகப் பாடுபடும்போது நம் மனத்தின் ஆற்றல் நம்மை மனித நிலையிலிருந்து தேவநிலைக்கு அழைத்துச் செல்கிறது. தேவனுகும் வாய்ப்புதான் வாழ்க்கை.



